உ

வேலுமயிலுந் துணை.

அருணகிரிநாத சுவாமிகள்

அருளிச்செய்த

# கந்தரநுபூதி

மூலமும்

க. ரா. ஜமதக்னி சுவாமிகளால்

இயற்றிய

தெளிபொருள் விளக்கவுரையும்.

---

வெளியிட்டவர்கள் :

B. இரத்தின நாயகர் அண்டு ஸன்ஸ்,

திருமகள் விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

பதிப்புரிமை] [விலை ரூ. 1—4—0

# முகவுரை

அருணகிரிப் பெருந்தகையார் இயற்றிய நூல்களில் கந்தரநுபூதி தலைசிறந்தது. தினமும் பாராயணஞ் செய்தற்குரியது. சொல் நயமும் பொருள் நயமும் உட்கொண்டது. ஆசிரியர் முருக வழிபாட்டினால் அனுபவித்த மெய்ப்பொருளின் திறம் செம்பாகமாகக் கவிதையில் மிளிர்கின்றது. முருகனைப் பரம்பொருளாகப் பாவித்துத் துதிந்துள்ளனர். ஆங்காங்கே வேசியர் கொடுமையை மக்களுக்கு அறிவுறுத்தி யுள்ளனர். நூல் முழுமையும் பக்திரசம் ததும்புகின்றது. மேலும் வேதாந்திகளுக்கும் வேண்டிய மெய்ப்பொருளுணர்வு உள்ளது. இந்நூல் பயிலப் பயில மாந்தரின் அஞ்ஞான இருள் அகல மெய்ப்பொருள் காட்சியுறும். தமிழுலகிற்குத் தொண்டு புரிவான் வேண்டி உரை எழுதத் துணிந்தனன். பயில்வோர் அதன் குற்றம் பொறுத்துக் குணமே கொள்க!

ஜமதக்னி.

# அருணகிரிநாத சுவாமிகளின் சரித்திரச் சுருக்கம்

அருணகிரிப் பெருந்தகையார் சந்தக்கவி பாடும் பெரும் புலவர். அவர் கௌமார சமயாசாரியர்களில் ஒருவர் என்று கருதப்படுபவர். ஐந்து பூதங்களுள் அக்கினி க்ஷேத்திரமாகத் திகழும் திருவண்ணாமலையில் அவதரித்தவர். அவர் பிறந்த காலம் சுமார் 440 ஆண்டுகளுக்கு முன்னிருக்கலாம். பட்டினத்தாருக்கு உதித்தவர் என்ற வரலாறும் வழங்குகின்றது.

அன்னாருக்கு ஐந்தாண்டு நிரம்பியதும் பெற்றோர் அவரைப் பள்ளிக்கு விட்டனர். ஏழாம் ஆண்டு அடுத்ததும் அவரது அன்னையார் தேகவியோக முற்றனர். இறுதிக் காலத்து அன்னை அவரை அவரது தமக்கையாரிடம் ஒப்புவித்துக் கருத்துடன் வளர்க்குமாறு பணித்துப் போந்தனர்.

கல்வி பயின்ற வண்ணமாகவே காளைப்பருவ முற்றனர். புலவர் பெருமான் கணிகையர் மையலில்பட்டு உடன்பிறந்தவளின் கடுமொழியால் துறவு பூண்டனர் என்ற வரலாறும் உண்டு. தமக்கையார் கண்டிக்க வாழ்வில் வெறுப்புற்றுக் கோபுரத்தினின்றும் விழுந்தனர் என்றும், விழுந்தும் உயிர் நீங்கப் பெறாதவராய் ஆங்கு ஆசாரிய வடிவமுடன் எழுந்தருளிய முருகப்பிரானின் உபதேசத்தால் துறவறம் பூண்டருளினர் என்ற கதை வழங்குகின்றது. ஆனால் மெய்யாக

அவர் மாதர்மோகம் மனத்துதிக்க அவர்களின் வலையில் சிக்காதிருக்க முருகன் அருளை வேண்டி வந்தனர்; அன்பன் அருள் நீண்டலும் மெய்ப்பொருள் உணர்ந்து துறவி ஆனார்.

சுவாமிகளின் நூல்களைக் கொண்டு கௌமாரசமயத்தினர் என்றுணர்கின்றோம்.

சுவாமிகள் திருவண்ணாமலையில் முருகனருள் பெற்ற பின்னர் அங்கிருந்து புறப்பட்டு எல்லா நாடுகளுக்கும் எழுந்தருளி முருக க்ஷேத்திரங்களைத் தரிசனம் செய்துவிட்டுத் திருவண்ணாமலையில் திரும்பினர்.

ஆங்கிருந்தபோது பாரதம் பாடியவரும், அந்தணர் மரபினுதித்தவரும் ஆகிய வில்லிபுத்தூரர் வந்தனர். இருவருக்கும் வாதம் நிகழ்ந்தது. அருணகிரியார் கந்தர் அந்தாதி பாடிக்கொண்டு வரவும் வில்லிபுத்தூரர் விரைவாகப் பொருள்கூறிக்கொண்டே வந்தனர். ஆனால் தகரவிகற்ப யமகங்கொண்ட,

“திதத்தத்தத் தித்தத் திதிதாதை தாததுத் தித்தத்திதா
திதத்தத்தத் தித்ததி தித்தித்த தேதத்து தித்திதத்தா
திதத்தத்தத் தித்தத்தை தாததீ தேதுதை தாததத்து
திதத்தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே”

என்னும் 51 - ஆம் கவிக்குப் பொருள் கூற இயலாது மயங்கித் தோல்வி யேற்றார்.

தமிழ்க்குற்றம் செய்வோரைக் காதறுத்துக்கொண்டு வரும் இயல்புடையவராகிய வில்லிபுத்தூரர் தமது குறட்டை அருணகிரியார் முன்வைத்துத் தம்மையும் தண்டிக்கும்படி



சொன்னார். ஆனால் அருணகிரியார் குறட்டைச் சிதைத்து முன்போலவே தமிழ்ப்பற்றுடையவராய் இருக்கும்படி பணித்தனுப்பினார்.

திருவண்ணாமலையிலேயே இருந்த சமண சமயத்தவனும் தேவீ உபாசகனும் ஆகிய சம்பந்தாண்டான் என்பவனுக்கும் இவருக்கும் வாதம் நிகழ்ந்ததென்ற வரலாறும் உண்டு; பிரபுடதேவராயனுக்கு இருவரும் வேண்டியவர். இருவரும் முறையே தேவியையும் முருகனையும் அரசனுக்குத் தரிசனம் செய்விப்பதாகச் சபதஞ் செய்தனர். சத்தி தரிசனம் கொடுக்க மறுத்தாலும் முருகதரிசனத்தைத் தடுக்க உதவி புரிவதாக உறுதி தந்தனள்: முருகனைக் குழந்தையாக்கி மடிமீதிருத்தி விளையாடிக் கொண்டிருந்தனள். அருணகிரியார் சீர்பாத வகுப்பு, கடைக்கணியல் வகுப்பு முதலியன பாடியும் முருகன் வாராததால் மயில்வகுப்புத் தொகுத்தார். மயில் சென்று நடமிடவும் அறுமுகன் அதன்மீது பாய்ந்தேறி வந்து தரிசனம் தந்தருளினான். தரிசன மகிமையால் கண்ணொளி மழுங்கப் பெற்றான் அரசன். அதனையும் விபூதியால் நீக்கி யருளினார் அருணகிரியார்.

இவ்வரலாற்றோடு மற்றொன்றும் வழங்குகின்றது. பகைமை கொண்ட சம்பந்தாண்டான் அருணகிரியாரே கற்பகமலர் கொண்டுவரும் திறன் உடையார் என்று மூட்டி விட்டான். அருணகிரியாரும் பூதவுடலைக் கோபுரத்திட்டு இறந்துகிடந்த கிளியிற்புகுந்து மலர் கொணரச் சென்றார். அவர் இல்லாத சமயம் சம்பந்தாண்டான் அவரது தேகத்தை அடக்கஞ் செய்வித்தான். மலர்கொண்டு மீண்ட அருணகிரியார் அரசன்முன் சென்று மலர் தந்து தமது திருவுருவங் காட்டி அருளினார் என்று சொல்கின்ற

னர். சிலர் அவர் கிளிவடிவத்துடனேயே முருகன் திருக் கரத்தில் அமர்ந்தருளினர் என்றும் கூறுகின்றனர்.

ஆசிரியப்பெருமான் பாடிய நூல்கள் :—

(1) திருப்புகழ் பதினாயிரம்.
(2) கந்தரலங்காரம்.
(3) கந்தரனுபூதி.
(4) திருவகுப்பு.
(5) கந்தரந்தாதி.
(6) வேல் விருத்தம்.

அருணகிரியார் 'வாக்கிற் கருணகிரி' என்று போற் றப் படுகின்றனர் என்பதை அன்பர்கள் அறிக.

———

உ

முருகவேள் துணை

# கந்தர் அநுபூதி மூலமும் தெளிபொருள் விளக்க வுரையும்.

—∘∘—

## காப்பு

கலி விருத்தம்

### கணபதி வணக்கம்

[ நிவேதனம் :—பால், பழம், சர்க்கரை, தாம்பூலம், உரு - 1008. ]

நெஞ்சக் கனகல் லுநெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக் கரவா னைபதம் பணிவாம்.

(இதன் பொருள்) தஞ்சத்து அருள் - தன்னைச் சரணமடையும் அன்பரது எளிமைக் கிரங்கி யருள்கின்ற, சண்முகனுக்கு - ஆறுமுகக் கடவுளுக்கு, புனை இயல் சேர் - இலக்கணப் பொருத்தஞ் சேர்ந்த, செஞ்சொல் மாலை - செம்மை பொருந்திய மொழிகளால் ஆகிய கவிமாலை யானது, சிறந்திடவே - உலகில் மேம்பட்டு விளங்கும் நிமித் தம், நெஞ்சம் கனம் கல்லும் நெகிழ்ந்து உருக - மன மென் னும் பருத்த கல்லும் நெகிழ்ந்து உருகுமாறு, பஞ்சக் கர

வானை - திருக்கரங்கள் ஐந்துடைய விநாயகப் பெருமானின், பதம் பணிவாம் - திருவடிகளைப் பணிவோமாக, என்றவாறு.

(விளக்கவுரை.) கந்தரனுபூதி - கந்தரை ஆன்ம வடிவாக அறியும் அறிவை யுண்டாக்கும் நூல்.

ஆசிரியர் அருணகிரியார் தாம் எடுத்துக்கொண்ட இந்த நூல் இனிதாக முடிதற் பொருட்டு "நெஞ்சக் கன............பணிவாம்" என்று வணக்க வடிவ மங்கலம் வகுத்தார். ஏற்புடைக் கடவுள், வழிபடு கடவுள் என்னும் இரண்டனுள்ளும் வழிபடு கடவுளாகிய விநாயக வணக்கஞ் செய்தார். தெய்வ வணக்கமும் செயப்படுபொருளும் ஆசிரியர் பொருந்த உரைத்தலால் இச்செய்யுள் தற்சிறப்புப் பாயிரமாகும். பணிவாம் - தனித்தன்மைப்பன்மை வினைமுற்று. இயற்சொல் திரிசொல் முதலியவற்றின் இலக்கண வழுவின்றி நூல் இயங்குதற்காக 'இயல் சேர், செஞ்சொற் புனைமாலை' என்றார்.

(கருத்துரை.) அன்பரின் எளிமைக் கிரங்கி அருளும் ஆறுமுகக் கடவுளுக்காக இயற்றும் இலக்கணப் பொருத்தம் வாய்ந்த அழகிய மொழிகளால் ஆகிய இக் கவிமாலை உலகில் சிறந்து விளங்க விநாயகக் கடவுளின் திருவடிகளைப் பணிவோமாக வென்பதாம்.

---

# நூல்

## 1. மதயானை யனுசரிக்க

[பால், பழம், சர்க்கரை, தாம்பூலம்,உரு - 108 ]

ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியா னைசகோ தரனே.

(இ-ள்.) தேடும் மா கய்முகனை - தன் விரோதிகளை நாடிக் கொல்லும் பெரிய யானை முக அசுரனை, செருவில் சாடும் - சமர்க்களத்தில் கொன்று தள்ளிய, தனி யானை சகோதரனே - ஒப்பற்ற விநாயகமூர்த்தியின் உடன் பிறந்தவனே!, ஆடும் பரி என - தன் சிறகு விரித்தாடும் உனது வாகனமாகிய மயில் என்றும், வேல் என - உனது படைக்கலமாகிய வேல் என்றும், அணி சேவல் என - அழகிய கொடியாகிய சேவல் என்றும், பாடும் பணியே - மேற் சொன்ன அவற்றைப் புகழ்ந்து பாடும் தொழிலையே பணியாக - தொழிலாக இருக்குமாறு, அருள்வாய் - நீ அருள் செய்யக் கடவாய், எ - று.

(வி-ரை.) ஆடும் பரியையும், வேலையும், அணி (கொடி) சேவலையும் புகழ்ந்து பாடும் பக்தருக்கு இறைவ! தரிசனந் தந்தருள்வதால் எனக்கு அவற்றைப் புகழ்ந்து பாடும் தொழிலையே அருளவேண்டும்; வேறொன்றும் வேண்டாம் என்பார். 'அணி சேவலெனப் பாடும் பணியே பணியா வருள்வாய்' என்றார். பரி-சுமப்பது; இங்கு மயிலை

உணர்த்திற்று. 'என' என்பது பரிக்கும் வேலுக்கும் சென்று இயைந்தது. முருகக் கடவுளுக்கு மயில் வாகனம் மிகவும் உரியதா யுள்ளது. சூரபன்ம யுத்தத்தில் இந்திரனே முருகனுக்கு மயில் வாகனமாக அமைந்தனன்; பிறகு சூரபன்மனே மயிலாகி என்றும் அவருக்கு ஊர்தியாகவும் அமைந்தனன்; இவற்றை.

*" இந்திர னனைய காலை யெம்பிரான் குறிப்புந் தன்மேல்*
*அந்தமி லருள்வைத் துள்ள தன்மையு மறிந்து நோக்கிச்*
*சுந்தர நெடுங்கட் பீலித் தோகைமா மயிலாய்த் தோன்றி*
*வந்தனன் குமரற் போற்றி மரகத மலைபோ னின்றான் "*

*" சீர்திகழ் குமர மூர்த்தி செறிவிழி கொண்ட தொல்லை*
*ஊர்தியி னிருக்கை நீங்கி யுணர்வுகொண் டொழுகி நின்ற*
*சூர்திகழ் மஞ்ஞை யேறிச் சுமக்குதி யெம்மை யென்னப்*
*பார்திசை வான முற்றும் பரியென நடாத்த லுற்றான் "*

என்ற கந்தபுராணம் சூரபன்ம வதைப்படலம் 378, 499-ஆம் கவிகளால் அறிக.

(கு - ரை.) பகைவரைப் போரில் தேடிக் கொல்லும் கஜமுகாசுரனை வென்றருளிய விநாயக மூர்த்தியின் உடன் பிறந்தவனாகிய இறைவனே! நடம் புரியும் மயில் என்றும் வேல் என்றும் அழகிய கொடியாகிய சேவல் என்றும் புகழ்ந்து பாடும் தொழிலையே அடியேனுக்கு அருள் புரிவாயாக என்பதாம்.

## 2. வணங்காரைத் தண்டிக்க

[பச்சரிசி, வெல்லம், தாம்பூலம், உரு - 1008.]

உல்லா சநிரா குலயோ கவிதச்
சல்லா பவிநோ தனுநீ யலையோ



எல்லா மறவென் னையிழந் தநலஞ்
சொல்லாய் முருகா சுரபூ பதியே.

(இ - ள்.) முருகா - என்றும் இளமையோ டிருப்பவனே!, எல்லாம் அற - எனது பற்றுக்க ளெல்லாம் நீங்கவும், என்னை இழந்த - அடியேனை இழந்திருக்கும், நலம் - பரமானந்த நிலையாகிய சீவன்முக்தியை யான் அடையுமாறும், சுர பூபதியே - வானவர்தம் உலகிற்குத் தலைவனே, சொல்லாய் - எனக்கு உரைப்பாயாக, உல்லாசம் - மகிழ்ச்சி ஈவதும், நிராகுலம் - துன்ப மின்மையைச் செய்வதுமான, யோக விதம் - யோகத்தின் பாகுபாடுகளைப்பற்றி, சல்லாபம் - பக்தர்களுடன் சம்பாஷணை செய்தருளுகிற, விநோதனும் - லீலையை யுடையவனும், நீ அலையோ - நீ அன்றோ?' எ - று.

(வி - ரை.) முருகன் - முருகை உடையவன்; முருகு - இளமை, மணம், தெய்வத்தன்மை, அழகு. சுரபூபதி - தேவ சேனாபதி என்றுங் கொள்ளலாம். ஆறுமுகக் கடவுள் சூரபன்மனை வெல்லுதல் நிமித்தம் அவதரித்து லீலைகள் புரிந்திருக்குங் காலத்தே அவனது உண்மைச் சொரூபம் உணராது தேவர்கள் அவனோடு போர்செய்து தோற்றனர்; பின்னர் அவனது விஸ்வரூபம் உணர்ந்து அடி பணிந்து அவனுக்குச் சேனையாகி அவனைத் தமது சேனாபதியாக்கிக் கொண்டனர். இதை,

*"ஆன காலை யமரர்கள் வாசவன்*
*ஞான நாயக ! நாங்க ளுனக்கொரு*
*தானை யாகுந் தலைவனை நீயென*
*வான நீத்தத்து மஞ்சன மாட்டினர்"*

என்ற கந்தபுராணத் திருவிளையாட்டுப் படலம் 181-ஆம் கவியான் அறிக.

யோகம் - விட்கம்பம், பிரீதி, ஆயுட்மான் முதலிய வற்றோடு இருபத்தேழு ஆகும்; அதனால் யோக விதம் என்றார். சல்லாபம் - நல்லுரை.

(க - ரை.) முருகா! தேவ சேனாபதியே! என் பந்தங்கள் ஒழியவும் நான் சீவன்முக்தியடையவும் அருள்வாயாக; மகிழ்ச்சி பெருக்குவதும் இன்ப மூட்டுவதும் ஆன யோக வேறுபாடுகளைப் பற்றி அன்பருடன் உரையாடும் லீலா விநோதனும் நீயே அன்றோ என்பதாம்.

### 3. கல்வியின் மெச்ச

[தேங்காய், பால், பழம், கடலை, தாம்பூலம், உரு-1008.]

> வானோ புனல்பார் கனல்மா ருதமோ
> ஞானோ தயமோ நவினான் மறையோ
> யானோ மனமோ வெனையாண் டவிடந்
> தானோ பொருளா வதுசண் முகனே.

(இ - ள்.) சண்முகனே - ஆறுமுகக் கடவுளே!, பொருள் ஆவது - தேவரீர் அடியேனுக்கு உபதேசித்தருளிய உண்மைப்பொருள் ஆவது, வானோ மாருதமோ கனலோ புனலோ பாரோ - ஆகாயமோ, காற்றோ, நெருப்போ, நீரோ, மண்ணோ; ஞானோதயமோ - ஞான உற்பத்திக்கு மூலமாகிய தத்துவ ஆராய்ச்சியோ, நவில் நால் மறையோ - அந்தணர் ஓதுதற்குரிய நான்கு வேதங்களோ அன்றேல் அவற்றின் முடிவாகிய உபநிடதங்களோ, யானோ - எனது சீவனோ, மனமோ - அந்தக்கரணங்களில் ஒன்றாகிய மனமோ, என்னை ஆண்ட இடந்தானோ - என்னை ஆட்கொண்ட புண்ணிய க்ஷேத்திரங்களோ, யாதும் அறியேன், விளங்கவில்லை ஆதலின் மீண்டும் அடியேனுக்கு உபதேசித்தருள்வாயாக, எ - று.



(வி - ரை.) ஐயப் பொருளாகிய 'ஓ'காரத்தைப் 'புனல்,' 'பார்,' 'கனல்' இவற்றிற்குங் கூட்டுக.

ஷண்முகன் என்று பேர் வந்ததற்குக் காரணம்:—வானவர்கள் சூரபன்ம ஆட்சியினின்றும் விடுபடச் சிவபிரானைத் துதிக்கப் பெருமான் தமது ஈசானம், தற்புருடம், வாமனம், அகோரம், சத்யோஜாதம் என்ற ஐந்து திருமுகங்களோடு அதோமுகத்தையுங் காட்டி நிற்க, அந்த ஆறு முகங்களினின்றும் அக்கினிப் பொறிகளுண்டாக அவற்றை எம்பெருமானின் திருவுள்ளப்படி நெருப்புக்கடவுள் கங்கையில் இட்டனன். கங்காதேவி அவற்றைச் சரவணப்பொய்கையில் இட்டனள். ஆங்கு ஆறு நெருப்புப் பொறிகளினின்றும் முருகப்பிரான் ஆறு திருமுகங்களுடனும் பன்னிருகரங்களுடனும் தோன்றி யருளினான். இதை,

> "அருவமு முருவு மாகி யநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
> பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
> கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே
> ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலக முய்ய"

எனும் கந்த புராணம் திருவவதாரப் படலம் 92 - ஆம் கவியால் அறிக.

(க - ரை.) ஆறுமுகக் கடவுளே! எனது அறியாமையால் தேவரீர் உபதேசித் தருளிய தத்துவம் எனக்கு விளங்காமற் போய்விட்டது. அது வானோ புனலோ

பாரோ...என்று சந்தேகங் கொண்டேன்; ஆதலின் மீண்டும் அதை அடியேனுக்கு உபதேசித் தருளல் வேண்டும் என்பதாம்.

## 4. துறவு பெற

[பால், பழம், பலாச்சுளை, சர்க்கரை, பொங்கல், பரமான்னம், உரு - 1008.]

வளைபட் டகைமா தொடுமக் களெனுந்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியுந்
தொளைபட் டுருவத் தொடுவே லவனே.

(இ - ள்.) கிளை பட்டு - சுற்றத்தினர் சூழ, எழு சூர் - யுத்தத்திற் கெழுகின்ற சூரபன்மனது, உரமும் - மார்பும், கிரியும் - கிரவுஞ்சமலையும், தொளைபட்டு உருவ - அவற்றூடே உருவிப் போகுமாறு விடுத்த, வேலவனே - வேலாயுதனே, வளை பட்ட கை மாதோடு - வளையல் அணிந்த கைகளையுடைய மங்கையரொடு, மக்கள் என்னும் தளை பட்டு - புத்திரராகிய பந்தத்தில் சிக்குற்று, அழிய தகுமோ தகுமோ - அடியேன் துக்கித்து அழிவது உனக்குத் தகுமோ தகுமோ, ஆகலின் எனக்குத் தளையினின்றும் நீங்குதற்குறிய வழியைக் காட்டுக, எ - று.

(வி - ரை.) முருகனுக்குப் பல படைகள் உண்டு. அவற்றில் நாயகமானது வேல். அது சூரன் முதலியோரை அழித்து தேவர் தம் இடுக்கண் தீர்த்தது. ஆதலின் அதை உடைய சண்முகனுக்கு வேலன் என்ற காரணப்பெயரும் வழங்குகின்றது. போர்க்கெழுங்காலத்து முருகக்கடவுளுக்குச் சிவபெருமான் இவ்வேலாயுதத்தை அருளினர். இதனை,

“ ஆயதன் பின்ன ரேவின்மூ தண்டத்
தைம்பெரும் பூதமு மடுவ
தேயவல் லுயிரு மொருதலை முடிப்பத்
தேவர்மேல் விடுக்கினு மவர்தம்
மாயிருந் திறலும் வரங்களுஞ் சிந்தி
மன்னுயி ருண்பதெப் படைக்கும்
நாயக மாவ தொருதனிச் சுடர்வே
லல்கியே மதலைகைக் கொடுத்தான் ”

என்று கந்தபுராணம் விடைபெறு படலம் 38 - ஆம் செய்யுளால் அறிக.

‘தகுமோ தகுமோ’ என்பது “அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொருசொல், இரண்டு மூன்று நான் கெல்லைமுறை யடுக்கும்” என்னும் (நன். பொது 44 - ஆம்) சூத்திரப்படி பொருணிலை அடுக்குத்தொடராகியது. ஈண்டு இது அவலப் பொருளது.

அழிய எனும் செயவெனெச்சம் ஈண்டு அழிவது என்னும் தொழிற்பெயர்ப் பொருளில் வந்தது.

பலம் பொருந்திய சூரனையும் திண்மை பொருந்திய கிரௌஞ்சகிரியையும் வலி கெடச் செய்த வேலை உடையவனாதலின் என் தளையை அறுப்பதில் கஷ்டமே இராதென்பது கூற வேண்டாதாயிற்று.

(சு - ரை.) சூரபன்மனின் மார்பை உருவியதும் கிரௌஞ்சகிரியைத் தொளைத்ததுமான வேற்படையையுடைய கடவுளே! எனது மனைவிமக்களெனும் பந்தத்தினின்றும் நீக்கிச் சாந்த நிலை அருளல் வேண்டுமென்பதாம்.

## 5. மாயையை ஒழிக்க

[பழம் - 25, நெய்விளக்கு - 30, தாம்பூலம் - 50, தேங்காய், செவ்வலரி, உரு - 108]

மகமா யைகளைந் திடவல் லபிரான்
முகமா றுமொழிந் துமொழிந் திலனே
அகமா டைமடந் தையரென் றயருஞ்
சகமா யையுணின் றுதயங் குவதே.

(இ - ள்.) மகமாயை களைந்திட - என் அறிவை மறைக்கும் மிகவும் பெரிதான மாயையை உனது திவ்விய உபதேசத்தினாலே நீக்க, வல்லபிரான் - வல்லமையுடைய கடவுளே!, முகம் ஆறு மொழிந்தும் - ஒரு முகத்தால் அன்றி ஆறு முகங்களாலும் அடியேன் உய்யும் வண்ணம் நல் வழியை உபதேசித்தருளியும், அகம் ஆடை மடந்தையர் - வீடு துணி மாதர், என்று அயரும் - என்று கூறித் துன்புறுதற்கு நிமித்தமாகிய, சகமாயையுள் நின்று தயங்குவது - நிலையான உலகமாகிய மாயையில் நிலைபெற்று நின்று மயங்குவதிலிருந்தும், ஒழிந்திலன் - நீங்காதிருக்கின்றேன், எ - று.

(வி - ரை.) முகம் - வாய். ஏ - அசை. முகம் ஆறு மொழிந்தும் - உன் திருவாய் நான் உய்யும் வழி உபதேசித்தும் என்றுங் கொள்ளலாம். எனின், ஆறு. வழி யாகின்றது. மாகம் என்னும் ஆகாயத்தினை உணர்த்தும் வடமொழி முதல் குறைந்து மகம் ஆயிற்று. ஈண்டு மகம் பெருமையைக் குறித்து வந்தது. ஆறு திருமுகங்களாலும் உபதேசித்தும் மாயையினின்றும் நீங்காதிருத்தல் எத்துணை பேதமை என்பது தொனிப்பொருள்.



(கு - ரை) மிகப் பெரிய மாயையை ஞான உபதேசத்தினால் நீக்க வல்ல பெருமானே! உனது ஆறு திருமுகங்களாலும் உய்யும் மார்க்கத்தை உபதேசித்தும் வீடு வாசல் மனைவி மக்கள் எனும் உலக மாயையில் மயங்குமாறு பட்ட புத்தியை இன்னும் விட்டேன் இல்லை என்பதாம்.

## 6 மாதரைத் தழுவ

[பால், பொங்கல், தேங்காய், பழம், சர்க்கரை, தாம்பூலம், உரு - 1008.]

திணியா னமனோ சிலைமீ துனதாள்
அணியா ரரவிந் தமரும் புமதோ
பணியா வெனவள் ளிபதம் பணியும்
தனியா வதிமோ கதயா பரனே.

(இ - ள்.) பணி யா என - யான் ஆற்றுவதற்குரிய தொழில்கள் என்ன என்று, வள்ளி பதம்பணியும் - இளைய மனைவியாகிய வள்ளியம்மையின் திருவடிகளை வணங்குகிற, தணியா அதி மோகம் தயாபரனே - குறையாத பெரிய காதலையுடைய கருணை மிகுந்த பெருமானே, திணி ஆன மனோசிலை மீது - வன்மை பொருந்திய அடியேனின் மனம் என்னும் கல்மீது, உன தாள் அணி ஆர் அரவிந்தம் - உனது திருவடியாகிய அழகு பொருந்திய செந்தாமரைப் பூ, அரும்புமதோ - தோன்றக் கடவதோ! இல்லை?, எ-று.

(வி - ரை.) 'ஊடுதல் காமத்திற் கின்பம்' ஆகலின் காதல் இன்பத்தை சிறப்பிக்கும் பொருட்டு வள்ளிநாச்சியார் தலைமகனாகிய ஆறுமுகக் கடவுள்மீது குற்றங் கற்பித்துக்கொண்டு ஊடினள் ஆக, அம்மையின் பிணக்கைத்

தீர்ப்பதற்கு வேண்டியன செய்தும் பலிக்காமற் போகவே
கடைசி முறையாக உன் 'துனி' (பெரும்பிணக்கு) தீரும்
வண்ணம் யான் செய்யக் கடவதாகிய 'பணி யா என வள்ளி
பதம்' பணியும் நிலை முருகப்பிரானுக்கு ஏற்பட்டது என்க.
தெய்வயானை வள்ளி எனும் இரு தலைமகளிர்களில் வள்ளியே
இளையவள் ஆதலின் அவள்மீதே அதிக காதல் கொள்வது
இயற்கை என்பார் 'தணியா அதிமோகம்' என்றார்.

அதிபராக்கிரமம் பொருந்தியவராயினும் செருக்கிலாது
அபலை ஆகிய வள்ளியின் பிணக்கு தீர்ப்பான் வேண்டி
அவளது பாதங்களை வணங்குதல் ஆகிய அடக்கத்தையும்
தயை சிறப்பையும் உடையவனாதலின் வள்ளியின் தலைமக
னைத் 'தயாபரன்' என்று விளித்தார். சுப்பிரமணியன்
வள்ளிமீது அதிக அன்புடையனாதலின் அம்மையின் பாதம்
பெறும்பேறு பெற்றான். அதுபோலவே அதிக அன்புடைய
அன்பர்கள் மனத்தில்தான் முருகப்பெருமானின் திருவடி
யாகிய செந்தாமரை மலர் அரும்பும். அன்புடைய மனமே
நீர் உள்ள தடாகம். ஏனைய அன்பில்லாதவரின் மனத்தில்
பெருமானின் பாதம் பொருந்தாது ; எனவே 'தினி ஆன
மனோ சிலைமீது உன தாள் அணி ஆர் அரவிந்தம்' அரும்பா
தென்றார். அன்பில்லா மனது நீர் இல்லாத திண்ணிய
கல்லாகின்றது. எனவே நீர் இல்லாத கெட்டியான இடத்
தில் தாமரை உதிக்குமோ இல்லை.

"ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே"

எனும் (நன். இடையியல். 4) சூத்திரத்தால் ஈண்டு ஓகார
எதிர்மறைக்கண் வந்தது; இது ஐயப்பொருளில் வந்ததா
வும் கொள்க.



சுப்பிரமணியக் கடவுள் வள்ளியை மணம்புரிந்த
விதம்:—திருமாலின் புத்திரிகளாகிய அமுதவல்லி சுந்தரி
என்பவர் இருவரும் தம்மை வரைந்துகொள்ளுமாறு ஆறு
முகக் கடவுளை வேண்டித் தவம்புரியாநிற்க எம்பெருமான்
அவர்முன் தோன்றி அருள் புரிந்தனன். இருவருள் சுந்தரி
என்பவளைப் 'பூமியில் சிவமுனிக்குத் தோன்றி வேடரிடம்
வளர்க, ஆண்டு மணப்போம்' என்னலும் அவள்
தொண்டை நாட்டில் வள்ளிமலைச் சாரலில் அருந்தவம் பூண்
டிருந்த சிவமுனி அருளால் ஓர் மான் வயிற்றில் உதித்த
னள். அவள் சிசுவாகி வேடமாதர் வள்ளிக்கிழங்கு கல்லிய
குழியில் கிடந்தனள். ஆதலின் வள்ளி என்னும் திரு
நாமம் படைத்தனள். ஆங்குள்ள நம்பி என்னும் வேடர்
தம் தலைவன் அவளை எடுத்து அன்போடு வளர்த்து வந்
தனன். பருவமெய்திய பின்னர் அம்மையார் தினைப்புனங்
காக்கத் தொடங்கினள். ஆறுமுகக் கடவுள் ஆங்குச்
சென்று பல திருவிளையாடல்கள் புரிந்து அம்மையை
மணந்து கொண்டனர்.

(க - ரை.) செய்யக்கடவது என்னென்று வள்ளி
யம்மையின் பாதம் பணிகின்ற கருணைக்கடலாகிய கடவுளே!
ஜலம் இல்லாத கட்டாந்தரையில் தாமரை மலர் உதிக்காது,
அது போன்றே அன்பர் அகத்தே அன்றி உன்மீது அன்
பில்லாத எனது அகத்து உன் திருவடி தோன்றுமோ?
தோன்றாது என்பதாம்.

## 7. தீராப்பிணி தீர

[ பரமான்னம், பானகம், தாம்பூலம், உரு - 1008. ]

கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவே லிறைதா ணினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே.

(இ - ள்.) மனமே - நெஞ்சமே!, கெடுவாய் - மெய்
வாய் முதலிய ஐம்பொறிகளின் வசமாகி அழிகின்றனை, கதி
கேள் - நீ உய்யும்வகை நல்லவழி உரைக்கின்றேன் கேட்கக்
கடவாய், கரவாது இடுவாய் - உன்னை அண்டினோர்க்கு
இல்லை என்று மறைக்காது உன்வசம் உள்ளதை அன்பு
டன் இடக்கடவாய், வடிவேல் இறை தாள் நினைவாய் - கூரிய
வேலாயுதம் தாங்கும் தலைமைக் கடவுளாகிய முருகனின்
திருவடிகளைச் சிந்திக்கக் கடவாய், நெடு வேதனை தூள்
பட சுடுவாய் - நெடிய துன்பங்களை அத்திருவடித் தியான
மாகிய நெருப்பால் சுட்டெரிக்கக் கடவாய், வினை யாவை
யும் விடுவாய் விடுவாய் - பிறப்பிறப்புக்களுக்குக் காரண
மாகிய அஞ்ஞானத்துடன் வினை எல்லாவற்றையும் மெய்ப்
பொருள் உணர்ச்சியால் நீக்கக்கடவாய் நீக்கக் கடவாய்,
எ - று.

(வி - ரை.) உடல் பற்றி வருவதும் பிற வுயிர் பற்றி
வருவதும் தெய்வம் பற்றி வருவதுமாகிய மூன்று துன்பங்
கள் ஆகிய தாபத்திரயங்களையே 'நெடுவேதனை' என்றார்.
சூரபத்மனைத் தொலைத்ததும், கிரௌஞ்சமலையைத் தொலைத்
ததும் ஆகிய பராக்கிரமம் பொருந்திய வேலாயுதம் தரித்த
இறையாகிய அவனைத் தியானித்தால் வல்லமை பொருந்
திய தாபத்திரயங்களும், ஒழித்தற்கரிய வினைகளும் ஒழித்
தல் சாத்தியமாகும் என்பார் 'வடிவேல் இறை தாள் நினை
வாய்' என்று பணித்தார். விடுவாய் விடுவாய் - விரைவுப்
பொருள் அடுக்குத்தொடர்.

(க - ரை.) நெஞ்சமே! நீ பொறிகள் வழிச்சென்று
கெடுகின்றனை. நீ உய்யும் வகை சொல்லுகின்றேன். கேள்!
கூர்வேல் தரித்த முருகப்பிரானது திருவடிகளைத் தியானிக்



கக்கடவாய், தியான நெருப்பால் நீண்ட துன்பங்களை எரித்
தொழிப்பாயாக. மெய்ப்பொருள் அறிவால் பிறப்பிறப்புக்
களுக்குக் காரணமாகிய வினைகள் எல்லாவற்றையும் விடக்
கடவாய் என்பதாம்.

## 8. குடிகளைத் தன்வசமாக்க

[ தேங்காய், பழம், தாம்பூலம், உரு - 104 ]

அமரும் பதிகே ளகமா மெனுமிப்
பிமரங் கெடமெய்ப் பொருள்பே சியவா
குமரன் கிரிரா சகுமா ரிமகன்
சமரம் பொருதா னவநா சகனே.

(இ - ள்.) குமரன் - சிவபெருமானின் குமரனே!,
கிரிராச குமாரி மகன் - மலை அரசனின் புத்திரி பார்வதி
அம்மையின் புத்திரனே!, சமரம் பொரு தானவ நாச
கனே - யுத்தஞ் செய்ய வந்த அசுரர் கூட்டத்தை அழித்
தருளியவனே!, அமரும் பதி ஆம் கேள் ஆம் அகம் ஆம்
என்னும் - இது நான் வசிக்கும் ஊராகும் இது எனது
சுற்றமாகும் இது எனது இல்லம் ஆகும் என்கிற, இப் பிமரம்
கெட - இந்தக் கலக்க புத்தி ஒழியும் ஆறு, மெய்ப்பொருள்
பேசிய (ஆறு) - அடியேனுக்கு உபதேசித்த விதந்தான்
என்ன வென்று சொல்லுவேன்! இத்தன்மையதென்று
கூறத் தக்க தொன்றன்று, எ - று.

(வி - ரை.) 'குமரன்', 'கிரிராச குமாரி மகன்' எனும்
இரண்டும் அண்மை விளிகள். குமரன் - என்றும் இள
மையோடிருப்பவன் என்றும் அழகிற் சிறந்தவனாகிய
மாரனையும் குற்சிதப்படுத்தும் அழகினை யுடையவன் என்

றுங் கொள்க. 'ஆம்' என்பதைப் 'பதி' 'கேள்' எனும் இரண்டினுக்குங் கூட்டுக. பிமரம் என்பது பிரமம் எனும் வடமொழியின் திரிபு; பிரமம் - கலக்கம், பிராந்தி, மயக்கம்.

சக்தி தேவி பர்வதனுக்கு உதித்த விதம்:—சிவபிரானை அவமானப்படுத்த யாகம் செய்த தனது தந்தையாகிய தக்கனுக்கு மகள் என்னும் தோஷத்தை நிவர்த்திக்க வேண்டி உடல் நீத்து மானசரசின் தாமரையில் குழந்தை யாக அவதரித்தலும் 'சதி' தேவி தனக்குப் புத்திரியாக அவதரிக்க வேண்டும் என்று மானசரசில் கடுந்தவம் ஆற்றிய பர்வதராசன் குழந்தையைக் கண்டெடுத்து வளர்த்து வந்தனன். அதனால் பார்வதி எனுந் திருநாமம் பெற்றனள். பருவமடைந்து சிவபிரானை மணக்கக் கருதித் தவம் புரிய எம்பெருமான் திருவிளையாடல்கள் சில புரிந்து மணந்தருளினன். சிவபிரானின் திருமுகப் பொறிகளால் உதித்த குமாரக்கடவுளைப் பரிவுடன் வளர்த்ததால் அவனைக் 'கிரிராச குமாரி மகன்' என்றார்.

யுத்தம் புரிய வந்த மிகுவல்லமை படைத்த அசுரர் கூட்டத்தை ஒழித்தருளிய பராக்கிரமம் பொருந்தியதால் பதி, கேள், அகம் என்ற மயக்கக் கூட்டங்களை உபதேசத்தால் ஒழிக்க வல்லவன் எனக் கூற வேண்டதாயிற்று. பேசிய வாறு என்பது விகாரத்தால் பேசியவா என நின்றது.

(க - ரை.) என்றும் இளமையோடிருப்பவனே! சக்தி தேவியின் புத்திரனே! அசுரர் கூட்டத்தைத் தொலைத்தவனே! இவை எனது பதி, சுற்றம், வீடு என்னும் மயக்கம் ஒழியுமாறு உபதேசித்தருளிய மெய்ப்பொருளை இத்தன்மையதெனக் கூற இயலாதவனாயிருக்கின்றேன் என்பதாம்.



## 9. பெண்ணாசை ஒழிக்க

[தேங்காய், சர்க்கரை, இளநீர், வாழைப்பழம், தாம்பூலம், உரு - 104]

மட்டூர் குழன்மங் கையர்மை யல்வலைப்
பட்டூ சற்படும் படரென் றொழிவேன்
தட்டூ டறவேல் சைலத் தெறியும்
நிட்டூ ரநிரா குலநிர்ப் பயனே.

(இ - ள்.) ஊடு தட்டு அற வேல் சைலத்து எறியும் - உள்ளே யாதொரு இடையூறும் ஒழிந்து போமாறு கிரௌஞ்சமலைமீது வேற்படையை எறிந்த, நிட்டூர - சினமுடையவனே, நிராகுல - துன்பமில்லாதவனே, நிர்ப்பயனே - அச்சமில்லாதவனே, மட்டு ஊர் குழல் மங்கையர் - மணம் பொருந்திய மலர் சூடிய கூந்தலுடைய மாதர்களது, மையல் வலை பட்டு - மயக்கமாகிய வலையிலே சிக்கி, ஊசல் படும் படர் - ஊசலைப் போன்று அலையச் செய்கின்ற துன்பத்திலிருந்து, என்று ஒழிவேன் - என்றுதான் நான் நீங்குவேன், எ - று.

பரிசு என்றும் பாடம்; பரிசு - பண்பு, விதம்.

(வி - ரை.) இடையூறு களையக் கிரௌஞ்சகிரியைத் தொலைத்த சினமுடையவனாகலின் நீங்குதற்கரிய மாதரால் வருந் துன்பத்தையும் கெடுக்கும் வெகுளியுடையவன் என்பது தொனிப்பொருள். மாதர் மோக வலைபட்டு ஊஞ்சல் போன்று அலைதலைச் செய்கின்ற துன்பத்தினின்றும் என்று ஒழிவேன் என்று இரங்குவதால். அந்த மோகமாகிய

வலையை அழித்தற்குரிய வழியை அடியேனுக்குக் காட்ட வேண்டும் என்று பிரார்த்தித்தவாறும்.

(க - ரை) கிரௌஞ்சகிரியைத் துளைத்துச் சூரனை அழித்து அமரரைக் காத்தருளிய நிராகுலனே! நிர்ப் பயனே! மாதர்களின் மோகமாகிய வலையில் சிக்குண்டு துன்பமுறுகின்றேன், அத் துன்பத்தினின்றும் மீளுவ தெந்நாளோ! மீளும் வழி காட்டி அருளல் வேண்டும் என்பதாம்.

## 10. நமனை விலக்க

[பரமான்னம், பால், தாம்பூலம், உரு - 1008]

கார்மா மிசைகா லன்வரிற் கலபத்
தேர்மா மிசைவந் தெதிரப் படுவாய்
தார்மார் பவலா ரிதலா ரியெனுஞ்
சூர்மா மடியத் தொடுவே லவனே.

(இ - ள்)) தார் மார்ப - கடப்பமாலை தரித்துள்ள மார்பையுடையவனே! வலாரி தலம் அரி என்னும் - வலன் எனப்படுகின்ற அசுரனைக் கொன்றொழித்தவனாகிய இந்திரனது உலகமாகிய சொர்க்கத்தினுக்கு விரோதி எனப்படும், சூர் மா மடிய - சூரபன்மன் எடுத்த மாமரத்தின் உருவம் அழியுமாறு, தொடு வேலவனே - அம்மரத்தின்மீது எறிந்த வேலாயுதத்தைத் தாங்கியவனே!, (எனக்கு மரண காலம் நெருங்கும் காலத்துக்) கார் மா மிசை காலன் வரின் - கருத்த எருமைக்கடாமீது ஆரோகணித்து எமன் வந்தால், (அவனை விரட்டக்) கலபத்து ஏர் மா மிசை வந்து - தோகையின் அழகு கொண்ட மயில்மீதேறி வந்து, எதிரப் படுவாய் - அடியேனுக்குத் திவ்விய தரிசனந் தந்தருள் வாயாக, எ - று.

(வி - ரை) மா - விலங்கின் பொது பெயர்; அழகு, ஆண்குதிரை, ஆண்பன்றி, இலக்குமி, கருப்பு, செல்வம், பெருமை, மாமரம் முதலிய பல பொருள் கொண்ட ஓரெழுத் தொருமொழி. ஈங்கு அது மூன்று முறை வருவதில் முன்பின் உள்ள அடைமொழிகளானும் இதர மொழிகளின் குறிப்புக்களானும் இன்ன பொருளது என உணரப் படும். முதல் அடியில் உள்ள 'மா' விற்கு முதலில் 'கார்' அடையானும் பின் 'காலன்' என்பதாலும், காலன் ஏறி வரும் கருத்த விலங்கென ஏற்படுகின்றது; அனின் எருமைக்கடா. இரண்டாம் அடியில் உள்ள 'மா' விற்குக் 'கலபத்து ஏர்' எனும் அடைமொழித் தொடரானும் 'வேலவனே! மிசை வந்து' எனும் மொழிகளின் குறிப்பாலும் சுப்பிரமணியக் கடவுள் ஏறுதற்குரிய மயில் எனப் பொருள்படுகின்றது. நான்காம் அடியில் 'மா' என்பதற்கு 'வலாரி தலாரி யெனுஞ் சூர்' எனுந் தொடரானும் 'மடியத் தொடு வேல்' என்ற தொடரானும் ஆறுமுகக் கடவுள் வேலால் எறிந்த சூரபன்மன் எடுத்ததொரு வடிவம், அதாவது மாமரம் ஆகின்றது. வலாரி = வல + அரி; தலாரி = தல + அரி. செயப்பாட்டு வினையாகிய 'எதிரப் படுவாய்' என்பது செய்வினைக்கண் வந்தது. கலாபம் என்பதில் ஈண்டு இடைக் குறைந்து 'கலபம்' என நின்றது.

மரண காலத்தில் உயிர்களைக் கவர எமன் ஏறி வருவது 'கார்மா.' சுப்பிரமணியக் கடவுள் வேலெறிந்து வீழ்த்தியது இந்திரன் உலகம் அழித்த 'சூர்மா.' எமபயத்தை ஒழிக்குமாறு முருகப்பிரான் ஏறி வருவது 'ஏர்மா.' மூன்றி

னும் உள்ள சொல்நயம் பொருள் நயங்களை உணர்க. வலன் என்னும் அசுரனைக் கொன்ற இந்திரன் உலகத்தை அழித்த 'சூர்' என்றதனால் சூரபன்மனின் பராக்கிரமம் எத்தன்மைத்து என்பதை உணர்க. அத்தகைய வலிமை பொருந்திய சூரபன்மன் எடுத்த வடிவாகிய மாமரத்தை வீழ்த்திய வேலின் சக்தியையும் அதனை யுடைய முருகப்பிரானின் பராக்கிரமமும் அளவிடுந்தரத்ததோ? ஆதலின் மரண காலத்தில் என் உயிரைக் கவருதல் பொருட்டு வரும் எமனை விரட்டி ஓட்டுதற்கு முருகப்பிரானுக்கு வல்லமை உண்டெனக் கூறத் தேவையில்லை.

(க-ரை) கடப்ப மாலை தரித்தவனே! வலன் எனும் அசுரனைக் கொன்ற இந்திரனது சொர்க்க பூமியை அழித்த சூரபன்மன் கொண்ட மாமரத்தை அழித்த வேற்படையை உடையவனே! மரண காலத்தில் அடியேன் உயிரைக் கவரும் பொருட்டுக் கருத்த எருமைக்கடாமீது ஏறி வரும் எமனை விரட்டுவதற்காக என் முன் அழகிய மயில்மிசை வந்து தரிசனந் தந்தருள்வாயாக என்பதாம்.

## 11. தளிகை சேர்க்க

[தேன், சர்க்கரை, பால், பழம், தேங்காய், உரு - 100S]

கூகா வெனவென் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
நாகா சலவே லவநா லுகவி
த்யாகா சுரலோ கசிகா மணியே.

(இ-ள்) நாக அசல - சேஷகிரியாகிய வேங்கட மலையில் வீற்றிருப்பவனே!, வேலவ - வேலாயுதனே!



நான்கு கவி தியாகா - அன்பருக்கு மதுரம் ஆசு சித்திரம் வித்தாரம் என்ற நான்கு வித கவிகளையும் பாடும் வல்லமையைத் தந்தருளுபவனே!, சுர லோகம் சிகா மணியே - வானவர் உலகத்திருப்பவருக்கு முடிமணி போலத் திகழ்பவனே!, என் கிளை கூடி கூகா என அழ - எனது சுற்றத்தினர் நான் மரணவேதனை யுறும்போது என்னைச் சுற்றிலும் கூடி அழுதுகொண் டிருக்கவும், போகா வகை - நான் இறந்துபட்டுப் போகாத வண்ணம், மெய்ப்பொருள் பேசிய ஆ(று என்னே!) - அடியேனுக்கு உண்மையான தத்துவ போதத்தைச் சற்குருவாக வந்து உபதேசித்தருளிய விதந்தான் என்னே! அற்புதம், எ-று.

(வி-ரை) திருவேங்கடம் ஒருகாலத்து முருகப்பிரானின் திருக்கோயிலாக விருந்ததை வைணவர் பின்னர் திருமாலின் ஆலயமாக மாற்றினர் எனும் வரலாறு வழங்கி வருகின்றது. சிகாமணி முடிமணி சூடாமணி மூன்றும் ஒரு பொருளனவாம். சிகை சூடா இரண்டும் முடியெனும் பொருளன. கூகா - அழுகுரலை உணர்த்தும் ஒலிக்குறிப்பு. லோகம் ஆகு பெயராய் அதில் உள்ள தேவர்களை உணர்த்திற்று. பேசியவாறு என்பது செய்யுள் விகாரத்தால் ஈறு குறைந்து 'பேசிய வா' என்று நின்றது.

சூரபதுமனை அழிக்கும் நிமித்தம் தேவர்தம் சேனாபதியாய் அமைந்து அமரர் இடுக்கண் ஒழித்த பெருதவியாலும் தேவந்திரனின் மருமகன் ஆனதாலும் முருகப்பிரான் அமரர்தம் முடிமணியாகத் திகழ்பவனானான்.

அன்பரின் அபயக் குரல் கேட்கும்போது 'எமன் வருகின்றானா?' என்பதை விரைவில் உணரும் பொருட்டே உச்சஸ்தானமாகிய 'நாகாசல'த்தில் கோயில்கொண்

டுளன். அங்ஙனம் வரும் எமனை விரட்டுவதின் நிமித்தம் படைகளில் சிறந்த வேற்படையை எப்போதும் ஏந்தி உளன். வேற்படை எறிந்து எமனை விரட்டிய போதும் எமபயம் முற்றிலும் போகாது; ஆதலின் நிலைபெற்ற பய மின்மையையும் சாந்தியையும் பெறுவ தெவ்வாறோ வெனின் அன்பருக்கு நான்குவித கவிகள் பாடுந் திறத்தை அருளுபவனாகிய முருகப்பிரான் சற்குருவாக வந்து மெய்ப் பொருள் அவசியம் உபதேசித்து அருளுவான் என்று கூறற் பாற்றோ?

(க - ரை.) திருவேங்கட மலையில் கோயில் கொண்டிருப்பவனே! வேலாயுதம் படைத்தவனே! அன்பருக்குக் கவி பாடுந் திறம் தந்தருளுபவனே! அமரரின் முடிமணி போன்று திகழ்பவனே! நான் மரணப் படுக்கையில் கிடந்துழலுந் தருவாயில் எனது சுற்றத்தார் என்னைச் சுற்றிலுங் கூடிக் 'கூகா!' என்று கதறிக் கதறி அழாநிற்க நான் இறந்துபட்டுப் போகாத வண்ணம் நீ சற்குருவாக வந்து மெய்ப்பொருள் உபதேசித்து மரணபயம் ஒழித்து நிலை பெற்ற சாந்தியைத் தந்தருள்வாயாக வென்பதாம்.

## 12. களவு வெல்ல

[பச்சரிசி, வெல்லம், தாம்பூலம், உரு - 1008.]

**செம்மான் மகளைத் திருடுந் திருடன்**
**பெம்மான் முருகன் பிறவா னிறவான்**
**சும்மா விருசொல் லறவென் றலுமே**
**அம்மா பொருளொன் றுமறிந் திலனே.**

(இ - ள்.) செம்மான் மகளை - செந்நிறமான மானின் வயிற்றுதித்த வள்ளியம்மையை, திருடும் திருடன் - அபகரித்த கள்ளன், பெம்மான் - பெருமையை யுடையோன், முருகன் - தெய்வத்தன்மை யுடையோன், பிறவான் இறவான் - பிறப்பிறப்புக்கள் இல்லாதவன், (சற்குருவாகத் தரிசனந் தந்து), சொல் அற - வியர்த்தமாகச் சொற்கள் பேசுவது ஒழிய, சும்மா இரு - பேசாது மௌனமாக இருப்பாயாக, என்றலுமே - என்று அடியேனுக்கு உபதேசித்தலுமே, அம் மா பொருள் ஒன்றும் அறிந்திலன் - சிறப்பு வாய்ந்த அந்த உபதேசப்பொருளாகிய தத்துவத்தை ஒரு சிறிதும் அறிய மாட்டாதவனானேன், எ - று.



(வி - ரை.) 'செம்மான்,' 'திருடும் திருடன்' என்னும் மொழிகளின் குறிப்பால் மகள் வள்ளிநாச்சியாரை உணர்த்திற்று. செந்நிற மானைப் போன்றவள் என்றுங் கொள்ளலாம். அங்ஙனங் கொண்டால் வள்ளிநாச்சியாரைக் குறிக்குமோ வெனின் திருடிக் கொண்டதால் வள்ளியம்மையையே குறிக்கும் தெய்வயானையைத் திருடி ஏற்காததால்.

முருகன் - என்றும் இளமையை யுடையவன் என்றுங் கொள்ளலாம். அன்புடைய வள்ளியை வலிய வந்து அபகரித்தருளினன், அதுபோலவே அன்புடையவரை அவர் வேண்டாதிருப்பினும் வலிய வந்து ஆட்கொள்ளுவன். சிவபிரானுக்கும் உபதேசித்தருளியதால் அவன் 'பெம்மான்' என்றார். பெருமையுடையோன் ஆதலின் அடியேனுக்கும் ஒரு முறை தவறினாலும் மீண்டும் தள்ளாது உபதேசித்து ஆட்கொள்ளுவன். தானே பிறப்பிறப்புக்கள் இலன்; ஆதலின் அவனே சற்குருவாக அமைந்து உபதேசித்தால் பிறப்பிறப்புக்கள் அறப்பெறுவேன் அன்றோ. அமைதிக்குச் சொல்வியாபாரம் எதி

ரானது. ஆதலின் அதை அறவே ஒழித்து மௌனம் பெறவேண்டும். சும்மா இருத்தல் - சீவன்முக்த நிலை. மனம் பொறிகள் வாயிலாகப் புலன்கள் பால் செல்லாது தடுத்துப் பின் மனம் அழிய ஜீவன் பரமான்மாவில் ஐக்கியமாதற்கு வேண்டி யோக நித்திரை செய்யும் நிலை. இதை வேதாந்திகள் 'விருத்தி சூநிய நிலை,' 'நனவிற் சுக சமாதி,' 'நடுவு நிலை' என்று கூறுவர்.

(கு - ரை.) வள்ளிநாச்சியாரைக் கவர்ந்த கள்வன், பெருமையுடையவன், என்றும் இளமையை யுடையவன், பிறப்பிறப்புக்கள் இல்லாதவன். அத்தகைய பிரான் சற்குருவாக எழுந்தருளிச் 'சொல் வியாபாரம் ஒழியப் பேசாமல் சும்மா இரு' என்று மெய்ப்பொருள் உபதேசம் தந்தருளினும் யோக நித்திரையாகிய நடுவுநிலை யெய்துதல் எளிய தொன்றன்று; அதனை அடியேன் அறிந்திலேன். எனினும் தள்ளாது மீண்டும் உபதேசித்து ஆட்கொள்ளுவன் முருகப்பிரான் என்பதாம்.

## 13. இருள்வழி நடக்க

[வடை, பழம், தேங்காய், வெல்லம், தாம்பூலம், உரு - 108]

முருகன் றனிவேன் முனிநங் குருவென்
றருள்கொண் டறியா ரறியுந் தரமோ
வுருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே.

(இ - ள்.) உருவு அன்று - தோன்றப்படும் உலகமும் அன்று, அருவு அன்று - தோன்றுதல் இல்லாத மாயையும் அன்று, உளது அன்று வஞ்சமுதலாய உள்பொருளும்



அன்று, இலது அன்று - இல்பொருளும் அன்று, இருள் அன்று - கலக்க அறிவும் அன்று, ஒளி யன்று - தெளிந்த அறிவும் அன்று, என - என்னுமாறு, நின்றது - நிலைபெற்றிருக்கும் மெய்ப்பொருள், தனி வேல் முருகன் - ஒப்பற்ற வேலாயுதம் படைத்த முருகப்பிரான் ஆகிய, நம் குரு என்று - முனிவன் ஆகிய நமது சற்குரு வென்று ஏற்று, அருள் கொண்டு அறியார் - அப்பிரானது அருளின் திறத்தாலே தமது உண்மைச் சொரூபமான ஆன்மாவை அறியமாட்டாதார், அறியுந் தரமோ - அறியும் வல்லமையுடைய தாமோ? இல்லை, எ - று.

(வி - ரை.) தோன்றப்படும் உலகம் - காரியமாகிய பிரபஞ்சம். தோன்றுதல் இல்லாத மாயை - காரணமாகிய மாயை. உளது இலது என்பவற்றில் முறையே பாவ அபாவப் பொருள்களும் அன்று என்க. நிலைபெற்ற மெய்ப்பொருளை மனம் அழியப் பெறும் சீவன்முக்தர்களே அனுபவத்தில் அறிவர். 'ஓ' எதிர்மறைக்கண் வந்தது. மயக்க உணர்வு - அயதார்த்த ஞானம், தெளிந்த உணர்வு - யதார்த்த ஞானம்.

(கு - ரை.) பிரபஞ்சமும் அன்று, மாயையும் அன்று, வஞ்ச முதலிய உள்பொருளும் இல்பொருளும் அன்று, கலக்கமும் அன்று, தெளிவும் அன்று என்று சொல்லுமாறு மனம் அடங்கப்பெற்ற சீவன்முக்தர்கள் அனுபவ பூர்வமாகக் கண்டறியும் நிலைபெற்ற மெய்ப்பொருளை வேற்படை யுடையவனும் முனிவனும் ஆகிய முருகவேளைத் தமது சற்குருவென மதிப்பவரே அவன் அருளினாலே உணர்வர் ஏனையோர் அறியார் என்பதாம்.

## 14. பாத தரிசனஞ் செய்ய

[பருப்பு, நெய், பாயசம், அன்னம், கறி, தாம்பூலம், உரு - 100]

கைவாய் கதிர்வேன் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனமே யொழிவாய் யொழிவாய்
மெய்வாய் விழி நா சியொடுஞ் செவியாம்
ஐவாய் வழிசெல் லுமவா வினையே.

(இ - ள்.) மனமே - நெஞ்சமே !, கைவாய் கதிர்வேல் முருகன் - திருக்கரத்தில் பொருந்திய ஒளி நிறைந்த வேற்படையையுடைய முருகப்பிரானின், கழல் பெற்று உய்வாய் - வீரக்கழல் அணிந்த திருப்பாதங்களைப் புகலிடமாகக் கொண்டு பிழைக்கக்கடவாய் !, மெய் வாய் விழி நாசியொடும் செவியாம் ஐவாய் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்று சொல்லப்படும் ஐந்து ஞானேந்திரியங்களின் வழியே ஊறு சுவை ஒளி நாற்றம் ஓசை என்னும் ஐம்புலன்களை நோக்கி, செல்லும் அவாவினை - செல்கின்ற உன்னுடைய ஆசையை, ஒழிவாய் ஒழிவாய் - நீக்கக்கடவாய் ! நீக்கக்கடவாய் !, எ - று.

(வி - ரை.) கழல் - ஆகுபெயராய் அதனை அணிந்திருக்கும் பாதத்திற்காயிற்று. ஒழிவாய் ஒழிவாய் என்பது விரைவுப்பொருணிலை அடுக்குத்தொடர். ஒடு - இசை நிறைக்கண் வந்த இடைச்சொல்.

"அவாவென்ப வெல்லா உயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து".

"இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் துன்பங் கெடின்"



என்பன பொய்யாமொழி. ஆதலின் பிறப்பிறப்புக்களாகிய துன்பங் கெட வேண்டின் அவாவினை அறுத்தல் வேண்டும். அது சாத்தியமாதல் அத்துணை எளிதன்றாதலின் பராக்கிரமம் பொருந்திய முருகப்பிரானின் கழலைப் புகலிடமாகப் பற்றினால் உடனே சாத்தியமாகும். மனனே என்றும் பாடம்.

(க - ரை.) மனமே ! திருக்கரத்தில் வேலாயுதந் தரித்த முருகப்பிரானது வீரக்கழலை அடைக்கலமாகப் பெற்றுய்யக் கடவாய். இந்திரியங்கள் வழியாக விஷயங்களை நோக்கிச் செல்லும் உனது ஆசையை விடக்கடவாய் ! விடக்கடவாய் ! என்பதாம்.

## 15. அஷ்டாவதானஞ் செய்ய

[சர்க்கரை, பழம், பாற்பொங்கல், உரு - 108.]

முருகன் குமரன் குகரென் றுமொழிந்
துருகுஞ் செயறந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவுங்
குருபுங் கவவெண் குணபஞ் சரனே.

(இ - ள்) பொரு புங்கவரும் - சூரபன்மன் முதலிய அசுரர்களுடன் போர்புரிகின்ற வானவரும், புவியும் - உலகத்திருப்பவரும், பரவும் குரு புங்கவ - வணங்கிப் புகழும் குருபிரானே !, எண் குணம் பஞ்சரனே - எட்டுக் குணங்களையும் திருவுடலாகப் பெற்றவனே !, முருகன் குமரன் குகன் என்று மொழிந்து - உன்னை முருகன் என்றும் குமரன் என்றும் குகன் என்றும் அன்புடன் சொல்லி, உருகும் செயல் தந்து - நெஞ்சம் கசிந்துருகும் தொழிலை எனக்கு

அருள் செய்து, (அதன் மூலமாக), உணர்வு என்று அருள்வாய் - எப்பொழுது மெய்ப்பொருளாகிய ஞானத்தை அருளப் போகின்றாய்?, எ - று.

(வி - ரை.) புங்கம் - உயர்ச்சி, அதனை உடையவர் தேவர்க்குப் புங்கவர் என்றார். புவி - இடவாகு பெயராய் அதில் இருப்பவரை உணர்த்திற்று. எண்குணம் - (1) தன் வயத்தனாதல், (2) தூயவுடம்பினனாதல், (3) இயற்கையுணர்வினனாதல், (4) முற்று முணர்தல், (5) இயல்பாகவே பாசங்களி னீங்குதல், (6) பேரருளுடைமை, (7) முடிவிலாற்றலுடைமை, (8) வரம்பிலின்பமுடைமை. இவ்வாறு சைவாகமத்திற் கூறப்பட்டது. குகன் - உயிர்களின் இதயக் குகையில் வீற்றிருப்பவன்.

(க - ரை.) வானவரும் உலகத்தவரும் புகழும் சற்குருமூர்த்தியே! எட்டுக் குணங்களையும் திருமேனியாகவுடையவனே! அன்பு மூலமாகவே தத்துவஞானம் உதிப்பதாயிருத்தலின் உன்னை 'முருகா! குமரா! குகா!' என்று மனங் கசிந்துருகும் அன்புடைமையை அளித்து அவ்வன்புடைமை மூலமாகவே தத்துவஞானத்தை அருள்வாயாக என்பதாம்.

## 16. பேராசை விலக்க

[சர்க்கரைப்பொங்கல், பழம், தேங்காய், தாம்பூலம்
உரு - 108.]

பேரா சையெனும் பிணியிற் பிணிபட்
டோரா வினையே னுழலத் தகுமோ
வீரா முதுசூர் படவே லெறியுஞ்
சூரா சுரலோ கதுரந் தரனே.



(இ - ள்.) வீரா - வீரனே!, முதுமை சூர் பட வேல் எறியும் சூரா - பழமையாகிய சூரபன்மன் அழியுமாறு வேலாயுதம் தொடுத்த சூரனே!, சுர லோக துரந்தரனே - தேவலோகத்தைக் காப்பவனே!, பேராசை எனும் பிணியில் பிணிபட்டு - பேராசை என்று சொல்லப்படும் துன்பமாகிய தளையினால் கட்டுண்டு, ஓரா வினையேன் - மெய்ஞ்ஞானத்தை உணரமாட்டாத கொடிய வினையை யுடையேன், (இவ்விதம்) உழலத் தகுமோ - இவ்வாறு கலங்குதல் நியாயமோ? இல்லை, எ - று.

(வி - ரை.) எல்லா அண்டங்களையும் பல காலம் ஆண்டதால் முதுசூர் என்றார். சுரம் - அருநெறி, அதனைக் கடைப்பிடித்துச் சொர்க்கம் புகுந்தவர் சுரர் அதாவது தேவர்கள். துரந்தரன் - பாரந்தாங்குவோன்; தேவலோகத்தை அசுரரின் கொடுமையினின்றும் பாதுகாத்தல் தொழிலாகிய பாரந்தாங்குவோன், முருகன். 'ஆசைக்கோர் அளவில்லை' ஆகலின் ஆசையைப் பேராசை என்றார். ஆசை - அவா. 'அவா வென்னுந் துன்பத்துள் துன்பம்' என்பது திருக்குறளாகலின் அருணகிரியாரும் அதனைப் 'பிணி' என்றார். அதன் கட்டினின்றும் விடுதலைபெறுதற்கு எல்லையில்லா ஆற்றலும் வீரமும் வேண்டியிருத்தலான் வீரனையும், முதுசூர் படவேல் எறியும் சூரனையும் விளித்தால் போதும் பெற்றுவிடலாம். அசுரர் உபத்திரவத்தைத் தொலைத்துத் தேவலோகத்தைக் காப்பாற்றுதல் ஆகிய பாரந்தாங்குபவன் முருகன், ஆதலால் பேராசையாகிய பிணியின் பிணிப்பினின்றுந் தப்புவதற்குச் 'சுரலோக துரந்தரனே!' என்று விளித்தார். உழல - என்ற எச்சம் தொழிற்பெயராக வந்தது. ஓகாரம் எதிர்மறை.

(கு - ரை.) வீரனே! பழைய சூரபதுமனை வேலால் அழித்த சூரனே! தேவலோகத்தைப் பாதுகாப்பவனே! பேராசையாகிய துன்பத்துள் துன்பம் என்னைக் கட்டித் துன்புறுத்த அக்கட்டினின்றும் விடுபெற இயலாது கலங்கு கின்றேன். அங்ஙனம் என்னை விடுதல் தகுமோ? விரை வில் என்னை ஆட்கொண்டு மெய்ஞ்ஞான உபதேசம் அரு ளிச் செய்து அதனை ஒழித்தல் வேண்டும் என்பதாம்.

## 17. தன்னடத்தை மேன்மையாக

[பழம், தாம்பூலம், நெய்விளக்கு-100, தயிரன்னம், பலகாரம், உரு - 108.]

யாமோ தியகல் வியுமெய் யறிவுந்
தாமே பெறவே லவர்தந் தனரால்
பூமேல் மயல்போ யறமெய் புணர்வீர்
நாமே நடவீர் நடவீ ரினியே.

(இ - ள்.) யாம் ஓதிய - நாம் நல்ல ஆசிரியரிடம் அரிய நூல்களைப் படித்துச் சம்பாதித்த, கல்வியும் - கல்வி யறிவை யும், (அதன்பயனாகிய), மெய் அறியும் - மெய்யறிவையும், பெற வேலவர் தந்தனர் ஆல் - ஸ்திரமாகப் பெறுமாறு வேலாயுதனார் எமக்கு அருள் செய்தனர், (ஆதலாலே), பூமேல் மயல் போய் - பூமியில் விபரீதபுத்தியாகிய கலக்கம் நீங்கி, அறம் - தருமத்தையும், மெய் - மெய்ஞ்ஞானத்தை யும், புணர்வீர் - சேரப்பெறுதற்கு விரும்புகின்றவராகிய நாம் - நீங்கள், இனி நடவீர் நடவீர் - இனியாகிலும் முருக னது அருள் பெற்றுய்யத் தகுந்த மார்க்கம் பெறச் சற்குரு விடத்துச் சீக்கிரம் செல்வீர்! சீக்கிரம் செல்வீர்!, எ-று.



(வி - ரை.) யாம் - ஆசிரியப்பன்மை, கல்வி, ஆகு பெயராய் அதனை உடைய கல்வியறிவிற்காயிற்று. 'தாமும்' 'ஏயும்' அசைநிலைகள். மெய், ஆகுபெயராய் அதனை யுடைய மெய்ஞ்ஞானத்திற்காயது நாமே என்பதில் உள்ள ஏயும் அசைநிலை ஆகும். நாம் - நீங்கள்.

"ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்
ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே"

என்னும் (நன். பொது. 29) ஆம் சூத்திரத்தால் 'ஓரிடம் பிறவிடந் தழுவலும் உளவே' என்றதனால் நாம் என்னும் தன்மைப்பன்மை முன்னிலைப்பன்மைக்கண் வந்த இடவழு வமைதி யாகும்.

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்"

எனுந் திருக்குறளால் கற்றதின் பயனே (வாலறிவன் நற் றாள் தொழும்) மெய்யறிவெனக் கொள்க.

அறமாவது நன்னூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழித்தலுமாம், தருமம். நடவீர் நடவீர் - விரைவுப் பொருண் நிலை அடுக்குத் தொடர்.

(கு - ரை.) வையத்தவரே! யாம் பெற்ற கல்வி அறி வும் மெய்யறிவும் சந்தேக விபரீதங்கள் இன்றி ஸ்திரமாகப் பெறுமாறு முருகப்பிரானார் அருளிச் செய்தார் ஆதலால் நீங்களும் தேகமே நான் உலகமே மெய் என்ற மயக்கம் ஒழிந்து தருமத்தையும் மெய்ஞ்ஞானத்தையும் பெற விரும்புவீர்களாகில் சீக்கிரம் சற்குருவை நாடுங்கள் என்பதாம்.

## 18. கற்பழியா திருக்க

[ மாவிளக்கு, தேங்காய், பழம், தாம்பூலம், உரு - 108. ]

உதியா மரியா வுணரா மறவா
விதிமா லறியா விமலன் புதல்வா
அதிகா வநகா வபயா வமரா
வதிகா வலசூ ரபயங் கரனே.

(இ - ள்.) உதியாத மரியாத - பிறப்பும் இறப்பும் இல்லாத, உணராத மறவாத - நினைவும் மறதியும் இல்லாத, விதி மால் அறியாத - பிரமனும் திருமாலும் தேடியும் தனது சோதி சொரூபத்தைக் கண்டறிய மாட்டாத, விமலன் புதல்வா - குற்றமற்ற சிவபிரானுடைய குமாரனே!, அதிகா - மிகுந்த பொலிவுடையவனே!, அநகா - பாபமில்லாதவனே!, அபயா - அச்சமில்லாதவனே!, அமராவதி காவல - சொர்க்கத்தின் தலைநகராகிய அமராவதி நகரத்தைக் காப்பவனே!, சூர பயங்கரனே - சூரபன்மனுக்கு அச்சத்தைச் செய்பவனே!, அடியேன் உன்னை அடைக்கலமாகப் புகுந்தேன் கைவிடாது காக்கக்கடவாய், எ - று.

(வி - ரை.) உதியா மரியா உணரா மறவா அறியா எனும் ஈறு குறைந்த எதிர்மறைப் பெயரெச்சங்கள் விமலன் எனும் பெயரைக் கொண்டன. உதியா மரியா உணராத மறவா என்பவை 'விதிமால்'ஐக் கொண்டால் உரையன்மை ஆகும். விதிமால் - உம்மைத்தொகை; விதியும் மாலும் என விரியும்.

உணர்தல் - மறந்து பின் நினைத்தல். மறத்தல் - ஒன்றை நினைவில் இறுத்துதற்குப் பதிலாக வேறொன்றை



நினைத்து முன்னதை மறத்தல். 'அதிகா,' மேன்மையை உடையவனே என்றுங் கொள்க. 'விமலன்,' 'அநகன்,' 'அபயன்' என்பவற்றில் 'வி' 'அ' எனும் இரண்டும் இன்மைப் பொருளைக் காட்டும் ரூபசருக்கங்கள். விமலன் - குற்றமற்றவன்; மலம் - குற்றம்; ஆணவம் மாயை கன்மம் என மூன்றொன்றுவது காமம் வெகுளி மயக்கம் என மூன்றொன்றுவது அல்லது வடநூலார் பிரகாரம் காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாச்சரியம் என ஆறென்றுவது கொள்க.

அநகன், அநகம் - மாசு, பாபம்; அவை இல்லாதவன், பரிசுத்தமானவன்; பிறப்பும் இறப்பும், நினைவும் மறதியும், விதிமால் அறியாத பெருமையும் உடைய பரிசுத்த மூர்த்தியாகிய சிவபிரானின் குமாரன்; ஆதலால் உனக்கும் அவருக்குள்ள பெருமைகள் அனைத்தும் உண்டு. உன்னை அடையும் அன்பருக்கும் அவை கிட்டும். உன்வயம் மேன்மையும் தூய்மையும் அச்சமின்மையும் மிக்குள்ளதால் உன்னை அணுகும் பக்தருக்கும் அவை இலபிக்கும்.

அசுரர் தீமையினின்றும் அமராவதி நகரைக் காத்தனை ஆதலின் உன்னிடம் சரண் புகுந்தால் மரணபயம், பிறப்பிறப்புக்களால் ஆகும் தொல்லை முதலியவற்றினின்றும் எனது வாழ்வு பாதுகாப்பைப் பெறும் என்று நம்புகின்றேன். சூர பயங்கரன் ஆகலின் நீ எமபயங்கரனும் ஆவாய், உனது தந்தையார் மார்க்கண்டேயரைக் காப்பதின் நிமித்தம் எமபயங்கரனாய் நின்றதை நினைவுறுத்திக் கொள்க.

இத்தகைய நயங்கள் இக் கவியில் பொலிவது உய்த்துணர்க.

விதியும் மாலும் விமலனை அறியாது போனதின் வரலாறு:—அயனும் அரியும் தம்முள் யார் மேம்பட்டவர் எனச் செருக்குற்று ஐயனை அடைதலும் சிவபெருமான் மண்ணும் விண்ணுமாகச் சோதி சொரூபமாக நின்றனர். அயன் அன்னரூபமாக முடி காண உயர்ந்தனன். அரி வராக ரூபமாகத் திருவடி காணப் பூமியைத் தோண்டிய வண்ணம் பாதலத்து ஆழ்ந்தனன். இருவரும் முடிவில் முறையே முடியும் அடியுங் காணமாட்டாது தோற்று மீண்டனர்.

(கு - ரை.) பிறப்பிறப்புக்கள் இல்லாதவனும் நினைப்பும் மறதியும் இல்லாதவனும் அயனும் அரியும் முடியடி காணமாட்டாத பெருமை யுடையவனு மாகிய சிவபெருமானின் புத்திரனே! மேன்மை யுடையவனே! தூயமூர்த்தியே! அச்சமில்லாதவனே! அமராவதி நகரம் பாது காத்தவனே! சூரபன்மனுக்குப் பயத்தைச் செய்தவனே! என்றெல்லாந் துதித்து உன்னையே நம்பி யுள்ளேன். தேவரைக் காத்தது போலவே அடியேனையுங் காருத்தருள்வாயாக என்பதாம்.

## 19. இல்வாழ்க்கை நீக்க

[தேங்காய், பழம், தாம்பூலம், உரு - 108]

வடிவுந் தனமு மனமுங் குணமுங்
குடியுங் குலமுங் குடிபோ கியவா
அடியந் தமிலா வயில்வே லரசே
மிடியென் றொருபா விவெளிப் படினே.

(இ - ள்.) அடி அந்தம் இலா - தோற்றமும் அறிவும் இல்லாத, அயில் வேல் அரசே - கூரிய வேலாயுதம் உடைய



இறைவனே!, மிடி என்ற ஒரு பாவி - வறுமை என்று சொல்லப்படுகின்ற ஒரு பாவி, வெளிப்படின் - வெளிப்பட்டக்கால், வடிவும் தனமும் - அழகும் செல்வமும், மனமும் குணமும் - நல்ல மனமும் தயை முதலிய நற்குணங்களும், குடியும் - குடிப்பிறப்பும், குலமும் - பழைய குலப்பரம்பரையும், குடிபோகிய ஆ - என்னிடத்தினின்றும் விட்டு ஒழிந்த விதம் என்ன ஆச்சரியம்!, வறுமை இன்றிச் செல்வத்தில் இருந்தால் செருக்கும் வறுமை உற்றக்கால் இத்தகைய துன்பங்களும் வர விருப்பதால் அவை வேண்டா. ஆதலின் என்னை அபயப்பொருளாக ஏற்று ஆட்கொள்வாயாக!, எ - று.

(வி - ரை) அடி அந்தம் - முதல் ஈறு; ஆதி அந்தம்; உற்பத்தி நாசம்; தோற்றங்கேடு என்றும் உரைக்கலாம் இலா என்பது ஈறு குறைந்த எதிர்மறைப் பெயரெச்சம் 'அரசே' எனும் பெயர் கொண்டது. அரசு - அரசனது தன்மை; அஃது உபசார வழக்கால் அரசனுக்கு வந்தது. 'மிடி என்ற ஒரு பாவி' என்பதனோடு,

'இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்''

எனும் திருக்குறளையும் ஒப்பிட்டு நோக்குக. மிடியை உடையவனை இருமையுங் கெடுத்தற் கொடுமைபற்றி, அதனைப் பாவி யென்றார், கொடியானைப் பாவி யென்னும் வழக்குண்மையின் "அழுக்காறென வொருபாவி திருச்செற்று........." என்பதுபோல. குடி - நற்குடிப்பிறப்பு. வறுமையால் குடிப்பிறப்பொழியும் என்பதனைக் "குடிப் பிறப்பழிக்கும் விழுப்பங் கொல்லும்" (எனும் மணிமேகலை 11-பாத்திரம் பெற்ற காதை) மொழியானும் உணர்க.

"தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்கூ ரவென்னு நசை"

என்னுங் குறளால், குலம், ஈண்டு மிடியால் பற்றப்பட்டா ருடைய பழைய குடிவரவு என அறிக. வறுமையின் கொடுமையை,

"மானங் குலங்கல்வி வண்மை அறிவுடைமை
தானந் தவமுயற்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம்" —(நல்வழி)

என்பதனானும் அறிக.

குடிபோகிய என்பதில் குடி சொன்மூலம், அறை போகிய என்பதில் உள்ள அறை போன்று. ஆ - வியப்பைத்தரும் ஓர் இடைச்சொல். வறுமையுற்றக்கால் தொல்லையுறும்போது செல்வம் உற்றக்கால் செருக்குறுதல் தகாது என்றுணர்தற்பாலது.

(க - ரை) தோற்றமும் கேடும் இல்லாத கூறிய வேற்படையை யுடைய இறைவனே! வறுமை என்றுலகோர் வழங்கும் ஓர் பாவி என்னை வந்தடுத்தபோது எனது அழகு, பொருள், நன்மனம், தயை முதலிய நற்குணம், நற்குடிப் பிறப்பு, பழைய குடிவரவு எல்லாம் என்னை விட்டகன்றனவே! என்ன ஆச்சரியம்! ஆதலின் வறுமையுற்ற பின்னர் எனது அறிவு மயங்காதவாறு ஏற்று அடியேனைக் காத்தருளுவாயாக என்பதாம்.



## 20. அனுக்கிரகம் பெற

[பாற்பொங்கல், பழம், தாம்பூலம், செவ்வந்திப்பூ,
உரு - 1008.]

அரிதா கியமெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா வுபதே சமுணர்த் தியவா
விரிதா ரணவிக் ரமவே ளிமையோர்
புரிதா ரகநா கபுரந் தரனே.

(இ - ள்.) விரி தாரண - மிகுந்த உறுதி படைத்தவனே!, விக்ரம - வெற்றியும் வீரமும் உடையவனே!, வேள் - குமரா!, இமையோர் புரி தாரக - தேவர்கள் விரும்பும் பிரணவப்பொருளே!, நாகம் புரந்தரனே - தேவலோகத்தைப் பாதுகாத்தவனே!, அடியேன் - உனக்கு அடிமைப்பட்டவனாகிய நான், அரிது ஆகிய மெய்ப் பொருளுக்கு - அஞ்ஞானிகள் அறிவதற்கு அரிதாகிய மெய்ஞ் ஞானத்தை அடைவதற்கு, உரிதா - உரியவனாக, உபதேசம் உணர்த்திய ஆ (று என்னே!) - அதை உபதேசமாக அடியேனுக்கு உணர்த்திய வகை எத்தகைய ஆச்சரியம், எ - று.

(வி - ரை.) தாரணம், தாரணை - உறுதி; அதனையுடையவன் தாரணன், முருகன், விக்ரமம் - வெற்றி, வீரம், பராக்கிரமம். வேள் - முருகனுக்கும் மன்மதனுக்கும் பொதுப்பெயர் எனினும் மன்மதன் கருப்பு நிறத்தவன்; முருகன் செம்மை நிறத்தவன்; ஆதலின் முருகனுக்குச் செவ்வேள் என்றும் வழங்குகின்றது. இமையோர் - இமைத்தல் இல்லாதவர், தேவர், உரிதா - உரிதாக என்பதன் ஈறு குறைந்தது.

(க - ரை.) மிகுந்த உறுதி உடையவா! பராக்கிரமமுடையவா! செவ்வேளே! இமையவர் விருப்பிற் குரிய

வனே! சொர்க்கத்தைப் பாதுகாப்பவனே! மிகவும் இழிமைப்பட்டவனாகிய அடியேனையும் ஒரு பொருளாக மதித்து அஞ்ஞானிகளுக்கு அரிதாய மெய்ப்பொருளை நான் அறியுமாறு அதனை உபதேசித்த விதந்தான் அதி ஆச்சரியம் என்பதாம்.

## 21. திருவடி வணங்க

[பால் பழம், தேங்காய், தாம்பூலம், உரு - 108.]

கருதா மறவா நெறிகா ணவெனக்
இருதாள் வனசந் தரவென் றிசைவாய்
வரதா முருகா மயில்வா கனனே
விரதா சுரசூ ரவிபா டணனே.

(இ - ள்.) வரதா - மெய்யன்பருக்கு வேண்டிய வரம் தருபவனே!, முருகா - என்றும் இளமையோ டிருப்பவனே!, மயில் வாகனனே - மயிலை ஊர்தியாக உடையவனே!, விரதா - அன்பரைப் பாதுகாத்தல் தொழிலையே விரதமாக வுடையவனே!, சுர - தேவனே!, சூர் - சூரபன்மனை, அவி - ஒழித்த, பாடணனே - மலைபோன்று திண்ணியனே!, கருதா மறவா நெறி - வேறொன்றனையும் நினைத்தலும் மறத்தலும் இல்லாத நிர்விகல்ப நிஷ்டையை, காண - உணரும்படி, எனக்கு - அடியேனுக்கு, இரு தாள் வனசம் - உனது இரு பாதங்களாகிய தாமரைமலர்களையும் தர என்று இசைவாய் - கொடுப்பதற்கு எச் சமயம் திருவுள்ளம் கொள்வாயோ?, எ - று.

(வி - ரை.) விரதாசுர சூர் என்பதை விரதா அசுர சூர் என்று பிரித்து, 'விரதா!, அசுரனாகிய சூர்' என்றுங் கொள்க. பாடணம் என்பது கல், மலை. சூரபன்மனை



ஒழித்த கல்போன்ற உறுதி யுடையவன் என்க. அன்றேல் சூரனை அழித்த கல்போன்ற படையை (வேல் உடையவனே என்றுங் கொள்க.

(சு - ரை) அன்பர் விரும்பும் வரந் தருபவனே) முருகனே! மயில்வாகனனே! அடியவர்க்கு அபயம் அளிக்கும் விரதம் உடையவனே! சூரனை அழித்த வேலை யுடையவனே! யான் ஒன்றனையும் நினைத்தலும் மறத்தலும் இல்லாத இராஜயோகமாகிய நிர்விகல்ப நிஷ்டையை அடைய விரும்பினேன். அதனை உணர்தற்குத் காரணமாகிய செந்தாமரைமலர் போன்ற உனது திருவடித் தியானத்தைப் புரியும் விதத்தை உடனே உபதேசிக்கும் திருவுள்ளங் கொள்வாயாக என்பதாம்.

## 22. தவம்பெற

[பால், பழம், தேங்காய், தாம்பூலம், உரு - 108]

காளைக் குமரே சனெனக் கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா
பாளைக் குழல்வள் ளிபதம் பணியும்
வேளைச் சுரபூ பதிமே ருவையே.

(இ - ள்) பாளை குழல் - தென்னம்பாளை உருவம் ஒத்த கூந்தலையுடைய, வள்ளி பதம் பணியும் - வள்ளியம்மையின் திருப்பாதங்களில் தாழ்கின்ற, வேளை - முருகனை, சுர பூபதி - வானவர் இருப்பிடத்திற்குத் தலைவனை, மேருவை - மேருகிரிபோன்ற திண்மையும் கலங்காமையும் கம்பீரத் தோற்றமும் உயர்ச்சியும் உடையவனை, காளை குமர ஈசன் - அஞ்சாமையில் காளை எருதுபோன்ற முருகக்கடவுள்,

என - என்று வாக்கால் கூறி, கருதி - மனத்தால் தியானித்து, பணிய - அவனது திருவடிகளைக் காயத்தால் வணங்குவதற்குத் தகுந்த, தவம் எய்தியவா(று என்னே !)- தவத்தை அடியேன் பெற்ற வகை மிகமிக ஆச்சரியம்! எ - று.

(வி - ரை) பாளைக்குழல் - உவமைத்தொகை. வள்ளி பதம் பணியும் என்பதற்கு இந் நூலின் ஆருவது செய்யுளில் 'பணி யா என வள்ளி பதம் பணியும்' என்றதற்குக் கூறிய விசேட உரையை ஈண்டுங் கொள்க. மேரு - உவமை ஆகு பெயராய் மேருமலை போன்று அசையாமை, திண்மை, கம்பீரம், உயர்ச்சி இவற்றையுடைய முருகனுக் காயிற்று. காளைக் குமரேசன் என்பதைப் பண்புத் தொகையாகவும் கொள்ளலாம். குமரேசன் = குமர + ஈசன், ஈசன்-அரசன், எப்பொருட்குமிறைவன், கடவுள். 'என,' 'கருதி,' 'தாளைப் பணிய' என்பவற்ருல் முறையே முருகக் கடவுளின் நாமங்களை வாக்கால் கூறலும், மனத்தால் தியானித்தலும் காயத்தால் திருவடிகளில் வணங்கலும் ஆகிய முக்கரணங்களின் கடமைகளையும் கூறிப் போந்தார்.

தவம் - மனத்தின் ஒருமுகக் குவிவு. அதனைச் செவ்வனே உணரவேண்டின் திருக்குறள் 'தவம்' என்னும் அதிகாரத்திற்கு முன்னுரையாகப் பரிமேலழகர் கூறியதை ஈண்டு நோக்குக.

" தவம். அஃதாவது, மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயில் நிலை நிற்றலும், மாரியினும் பனியினும் நீர் நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்ருல் தம்முடைய உயிருக்கு வருந் துன்பங்களைப் பொறுத்துப் பிறவுயிர்களை யோம்புதல் புலான் மறுத்து உயிர்கள்மேல் அருள் முதிர்ந்துழிச் செய்யப்படுவது."



'எய்தியவாறு' என்பதில் 'று' ஈறு கெட்டு 'எய்திவா' என நின்றது; செய்யுள் விகாரம்.

(க - ரை.) வள்ளிநாச்சியாரின் பாதம் பணிகின்ற செவ்வேளை, தேவர்க்கிறைவனை மேருமலை போன்று அசையா திருப்பவனை, காளை போன்ற முருகக்கடவுள் என்று வாக்கால் கூறி மனத்தால் தியானித்து காயத்தால் அவனது திருவடிகளை வணங்குவதற்குத் தகுந்த தவத்தை அடியேன் பெற்ற விதந்தான் அற்புதம் என்பதாம்.

## 23. சலிகை சொல்லல்

[அதிரசம், பரமான்னம், பாற்பொங்கல், உரு-1008.]

அடியைக் குறியா தறியா மையினுன்
முடியக் கெடவோ முறையோ முறையோ
வடிவிக் ரமவேன் மகிபா குறமின்
கொடியைப் புணருங் குணபூ தரனே.

(இ – ள்.) வடி விக்ரம வேல் மகிபா-கூர்மையும் வலிமையும் பொருந்திய வேலாயுதத்தையுடைய இறைவா, குறமின் கொடியை புணரும் குண பூதரனே - குறவர்பால் வளர்ந்த மின்னல் கொடி போன்ற தேகம் படைத்த வள்ளி அம்மையை மணந்த குணமாகிய மலையே !, அடியை அறியாமையினுல் குறியாது - உனது திருப்பாதத்தை அறிவின்மையாலே சிந்தியாது, முடியக் கெடவோ-முழுதும் அழிவதோ, முறையோ முறையோ - நியாயமோ ? நியாயமோ ? இல்லை,

ஆகலின் யான் கெடாத வகை காட்டி அருள வேண்டும், எ - று.

(வி - ரை) விக்ரமம், பராக்கிரமமாகக் கொண்டால் முருகனுக்குள்ள அப் பராக்கிரமத்தை வேலின்மேல் ஏற்றிக் கூறினர் என்க; அல்லது விக்ரம மகிபா என்றுங் கூட்டிப் படிக்கலாம். மகிபன் என்பதில் மகி - பூமி, மஹி என்பது வடமொழி; அதற்குத் தலைவன் மகிபன் - இறைவன்; மின்கொடி - உவமைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெய ரென்றாவது அடை அடுத்த உவம ஆகுபெய ரென்றாவது கொள்க. பூதரம் - மலை; பூமியை தரிப்பது (சுமப்பது). குணபூதரன் - குணமலை. மனிதனைக் குறித்தால் துறவு மெய்யுணர்வு அவாவின்மை முதலிய நற்குணங்களாகிய மலை என்னலாம்; இங்கு இறைவனுக்கு வந்ததால் இந்நூல் 15 - ஆம் செய்யுளின் 'குணபஞ்ஜரன்' என்பதற்குக் கூறிய தன்வயத்தனாதல் முதலிய எட்டுக்குணங்களாகிய மலை என்னலாம். குணம் - சாதியொருமை. அதாவது ஒருசொல் ஒருமை யீறு தோன்ற நின்றும் தோன்றாது நின்றும் பின் ஒருமைப்பன்மை வினையீறாக மேல்வந்து முடிக்கும் சொற்களும் இன்றித் தானே தன்மைப் பொருளுணர்த்துவது; எனின் குணம் என்பது ஈறுதோன்றாச் சாதி ஒருமை. சலியாமையும் பெருமையும்பற்றிக் குணங்களை மலையாகப் (பூதரம்) வுருவகஞ் செய்தார். "குணம் என்னுங் குன்றேறி நின்றார்" என்றாற்போல. கெடவோ என்பதில், ஓ - அசைநிலை; கெட எனும் எச்சம் கெடுவது எனும் தொழிற்பெயர்க்கண் வந்தது. முறையோ முறையோ என்பது அவலப்பொருணிலை அடுக்குத்தொடர்.



(சு -. ரை.) கூர்மையும் வலிமையும் பொருந்திய வேற் படையுடைய இறைவனே! குறமகள் வள்ளியை மணந்த குணமலையே! அஞ்ஞான மிகுதியால் உன் திருவடித் தியானம் புரியாது கெட்டேன், அங்ஙனம் கெடவிடுவது உனக்கு நியாயமில்லை. மீண்டும் உன் திருவடித் தியானத்தைப் புரியும் வழியைக் காட்டி யருளுக என்பதாம்.

## 24. மாதர் வலையில் அகப்படாதிருக்க

[நெய், பழம், பரமான்னம், தாம்பூலம், உரு - 1008.]

கூர்வேல் விழிமங் கையர்கொங் கையிலே
சேர்வே னருள்சே ரவுமெண் ணுமதோ
சூர்வே ரொடுகுன் றுதொளைத் தநெடும்
போர்வே லபுரந் தரபூ பதியே.

(இ - ள்.) வேரோடு சூர் - மூலத்துடன் அழியுமாறு சூரபன்மனையும், குன்று - கிரௌஞ்சகிரியையும், தொளைத்த நெடும் போர் வேல - தொளைத்துச் சிதைத்த நீண்ட போர் செய்ய வல்ல வேலாயுதத்தை யுடையவனே!, புரந்தர பூபதியே - இந்திரனின் உலகமாகிய சொர்க்கத்திற்குத் தலைமை பூண்டவனே!, கூர் வேல் விழி - கூர்மையான வேலாயுதம் போன்ற கண்களுடைய, மங்கையர் கொங்கையிலே - மாதர்களது முலைகளிலே, சேர்வேன் - படிகின்ற அடியேனது நெஞ்சம், அருள் சேர எண்ணுமதோ - உனது அருள் செல்வத்தைப் பெறும் வகை இனியேனும் எண்ணுந் தன்மை யுடையதாமோ? இல்லை, எ - று.

மூலம் - குலம், வமிசம்; "குன்றளிக்கும் குலமணித் தோள் சம்பரனைக் குலத்தோடுந் தொலைத்து" எனும் கம்ப

ராமாயண வாக்கியத்தோடு ஒப்பிட்டு நோக்குக. 'சூரும்' 'குன்றும்' என்பவற்றில் உள்ள எண்ணும்மைகள் செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றன. ('நான்' எனும் பொருள் கொண்ட வினையாலணையும் பெயராகிய) 'சேர்வேன்' எனும் முதற்பொருளின் பெயர் அதன் சினைப்பொருளாகிய 'நெஞ்ச'த்திற்கான பொருளாகுபெயர். முருகனுக்குரிய போர்செய்யுந் தன்மையை வேலின்மேல் ஏற்றிக் கூறினர்.

புரந்தரன், எல்லா உலகத்தையுஞ் சுமப்பவன் - இந்திரன். புரம் - ஊர், நகரம், இராசதானி; ஈங்கு உலகமாய் நின்றது. வேல்விழி - உவமைத்தொகை. குன்றையும் சூரனையும் வேரோடு தொலைத்த போர் வேலவனே என்று விழித்தவர் மங்கையருக்குக் கூர்வேல் எனும் அடை கொடுத்ததில் மனித வாழ்வை வேரோடு முடிக்கும் வல்லமைத்து மங்கையர் விழி எனும் பொருள், தொனியாகின்றது. முருகன் கையில் இருப்பது போர்வேல்; மங்கையர் முகத்திருப்பது கூர்வேல்; ஈண்டுச் சொல்நயங் காண்க. முருகன் கைப் போர்வேல் போலவே மங்கையர் விழியும் போர் செய்ய வல்லன. "கண்டார் உயிர் உண்ணுந் தோற்றத்து...கண்," "பண்டறியேன் கூற்றென்பதனை யினி யறிந்தேன் பெண்தகையால் பேரமர்க் கட்டு," "கூற்றமோ கண்ணோ" என்னும் திருக்குறள் வாக்கியங்களால் மங்கையர் கண் எமனைப்போல் உயிருண்ணுந் தன்மையும் பெரிய போரைச் செய்ய வல்லதும் ஆகும் என்பதை உணர்க. மங்கையர் கொங்கையில் எனுந் தொடரில் இனிய பிராசம் காண்க. 'மங்கையர் கொங்கையில் சேர்வேன் அருள்சேர எண்ணுமதோ ?,' என்ற எதிர்மறை வினவிற் கூறிய தென்னை யெனில் மாதர் போகத்தை விழைந்தவர்



மீளுதல் அரிது. மங்கையர் - ஈண்டுத் "தற்காத்துத் தற்கொண்டார் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள்" ஆகிய கற்புடைய குலமகளைக் குறித்தார் அன்று. அவளோடு சேர்ந்து வாழ்தல் இல்லறம் என்ப. இதனானே மனைவியை வாழ்க்கைத்துணை என்றார் வள்ளுவனார். முருக வழிபாட்டிற்கு வாழ்க்கைத்துணை பெரிதும் துணை புரிவாள் ஆகலின் அவளை ஒதுக்கி வரைவின் மகளிரின் போகத்தையே வெறுத்துக் கூறினர். எண்ணுமதோ, 'அது' பகுதிப்பொருள் விகுதி. கொங்கையிலே என்பதில் உள்ள 'ஏ' இசைநிறை.

(கு - ரை.) சூரனையும் கிரியினையும் ஒழித்த இறைவனே! மாதர் மையலால் மயங்கி இருக்கும் எனது நெஞ்சம் உனது திருவடியைச் சிந்தனை செய்யக் கருதுகின்றது. இனியேனும் உன் திருவடியைக் காண்பதற்கு விரைந்தருள் புரிவாயாக.

## 25. மகாவினை ஒழிக்க

[பச்சரிசி, பொங்கல், தேங்காய், பழம்,
தாம்பூலம், உரு - 108.]

மெய்யே யெனவெவ் வினைவாழ் வையுகந்
தையோ வடியே னலையத் தகுமோ
கையோ வயிலோ கழலோ முழுதுஞ்
செய்யோய் மயிலே றியசே வகனே.

(இ - ள்.) கையோ அயிலோ கழலோ முழுதுஞ் செய்யோய் - திருக்கைகளும், வேலும், திருவடியும், (அல்லாமலும்) திருவுடல் முழுவதும் சிவந்த வண்ணமாய் இருக்கப் பெற்றவனே !, மயில் ஏறிய சேவகனே - மயில்மீது ஆரோ

கனிக்கும் வீரனே !, வெம்மை வினை வாழ்வை - கொடுமை பொருந்திய இருவினைகளால் இயன்ற இவ்வுலக வாழ்வினை, மெய்யே என - உண்மைதான் என்று உட்கொண்டு, உகந்து - அதனை விரும்பி, ஐயோ - அந்தோ, அடிமை அலையத் தகுமோ - உனக்கு அடிமையாகிய யான் துன்புறு தல் நியாயமோ ? அன்று ; ஆதலின் அத் துன்பம் ஒழியும் மார்க்கத்தைக் காட்டி அருளல் வேண்டும், எ - று.

(வி - ரை.) செய்யோய் என்பது செம்மை எனும் பண்பினடியாகப் பிறந்த பெயர். கை செம்மையாயிருத்தல் - செந்நிறத்தோடு அன்பருக்கு அபயத்தம் வழங்குதலினும், வரையாது கொடுத்தலினும், துஷ்டரை நிக்கிரகித்துச் சாதுக்களை சம்ரக்ஷணை செய்யும் அறத்தை இயற்றுதலினும் ஆகும், அயில் செம்மையா யிருத்தல் - அசுரரின் இரத் தந் தோய்ந்திருத்தலானும் கோடாது இருத்தலினும், அன்பரைத் தொடாது பகைவரையே அடுத்தலினும் ஆகும். கழல் செம்மையாயிருத்தல் - பவளம் போன்ற சிவந்த நிற முடையதாயிருத்தலினும், அன்பருக்குப் புகலிடந் தருவதி லும் ஆகும்.

வெம்மை வினை வாழ்வை மெய்யே என உகந்து அலை தல்:—ஜீவனை மீண்டும் மீண்டும் பிறந்து பிறந்து இறந்து இறந்து அலையச் செய்தலால் வினையை வெம்மை என்றார். வினை, நல்வினை தீவினை எனும் இருவினைகளுமாகும். தீவினையே கொடுமை யுடைத்தாகும்; அங்ஙனமாக நல் வினையை யேன் வெம்மை யுடைத்து என்றாரோவெனின் நல்வினை புரிவான் ஒருவன் அதனால் ஈட்டிய புண்ணியத் தைத் துய்ப்பான் வேண்டிச் சொர்க்கம் புகுந்து அது தீரும்வரை ஆங்கிருந்து தீர்ந்தபின் மீண்டும் உலகத்துட் பிறத்தலால் நல்வினையும் பிறப்பிறப்பிற்கு ஏதுவாகின்றது.



நல்வினையும் மீளாநெறிக்கு எதிராகலின் அதனையும் கொடிது என்றார்.

"நெருந (நேற்று) ளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு" —(திருக்குறள்)

"இன்றுளார் நாளை மாள்வார்" —(கம்பராமாயணம்)

"புன்னுனிமே னீர்போ னிலையாமை" —(நாலடியார்)

இவற்றால் யாக்கையும் உலக வாழ்வும் நிலைபெற்றவை அன்று. ஒருகாலத்தில் அழிவதற்குரியன. அவற்றை விரும்புதல் தடுமாற்றமே.

"படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித்——தடுமாற்றந்
தீர்ப்போம் யாம்......................."

எனும் நாலடியார் திருவாக்கை யிங்குணர்த்தற்பாலதாம்.

ஆதலின், செய்யத் தகுந்தது யாது ? நிலையாத உலக வாழ்வை விரும்புவதன்று. உலகவாழ்வு நிலைபெற்றதென் றெண்ணி நல்லறஞ் செய்யாது விருத்தலாகிய தடுமாற்றத் தைத் தீர்ப்பதேயாம்.

கையோ, அயிலோ, கழலோ என்பவற்றில் உள்ள 'ஓ' எண்ணுப்பொருளில் வந்தது. தகுமோ என்பதில் 'ஓ' எதிர்மறை. மெய்யே என்பதில் 'ஏ' தேற்றப்பொருளது. கழல் - தானியாகுபெயர். ஐயோ - என்பது இரக்கக்குறிப் பிடைச்சொல்.

(க - ரை) திருக்கரமும், வேலும், திருவடியும் அல் லாது திருமேனி முழுதும் செந்நிறமாக வுடையவனே !

கொடிய இருவினைகளால் வரும் உலகவாழ்வை நிலைபெற்றதென்று நான் விரும்பித் தடுமாற்ற முறுவது நீதியோ? அன்று. ஆதலின் அதனை ஒழிக்க மார்க்கத்தைக் காட்டி அருளல் வேண்டும் என்பதாம்.

## 26. யாருமற்றபேர்க்கு ஆதாரமாக

[கந்தம், புஷ்பம், சர்க்கரைபொங்கல், தாம்பூலம், உரு - 108.]

ஆதா ரமிலே னருளைப் பெறவே
நீதா னொருசற் றுநினைந் திலையே
வேதா கமஞா னவிநோ தமனோ
தீதா சுரலோ கசிகா மணியே.

(இ - ள்) வேதம் ஆகமம் - நான்கு வேதங்கள், இருபத்தெட்டுச் சிவாகமங்கள் இவற்றின், ஞான விநோத - உட்பொருளாகிய ஞானத்தை உனது அன்பருக்கு உபதேசிக்கும் தொழிலையே லீலையாக வுடையவனே!, மனம் அதீதா - மனத்திற்கும் அப்பால் இருப்பவனே!, சுரலோக சிகாமணியே - விண்ணுலகத்தவருக்கு முடிமணி போன்று தலைமை பூண்டிருப்பவனே!, ஆதாரம் இலேன் - உனது திருவடி அன்றி வேறு பற்றுக்கோடு ஒன்றும் இல்லாதவனாகிய யான், அருளைப் பெற - உனது திருவருளை அடையும் நிமித்தம், நீ ஒரு சற்றும் நினைந்திலையே - நீ கொஞ்சமேனும் கருதாதிருக்கின்றனையே?, இது நெறியாமோ? எ - று.

(வி - ரை) வேதம் - இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் என நான்கு.



ஆகமம் - இங்குச் சிவாகம், காமிகம் முதல் வாதுளம் ஈறுயின.

தந்தையாகிய சிவபிரானுக்கு இளமையிலேயே வேத முதலாகிய பிரணவத்திற்கு உட்பொருள் உபதேசிக்கப் புகுந்தவர் பின்னர் வேதாகமங்களின் ஞானத்தை என்றும் அடியார்க்கு உபதேசித்தலையே விளையாட்டுத் தொழிலாக உடையவரானர். ஆகலின் முருகப்பிரானுக்குச் சற்குரு என்ற திருநாமம் வழங்காநிற்கும் அங்ஙனம் அடியார்க்கு ஞானோபதேசம் செய்வதே தொழிலாயிருக்க என் திறத்தில் உதாசீனம் செய்வதென்னே என்பார் 'ஒரு சற்றும் நினைந்திலையே' என வினவினர் என்க. மனம்+அதீதன்= மனோதீதன். அதீதன் - எட்டாதிருப்பவன். தான் - அசைநிலை. நினைந்திலையே என்பதில் 'ஏ' வினப்பொருளது.

மனத்திற்கப்பால் உள்ளவன் என்றதால்,

'ஒருமொழி ஒழிதன் னினங்கொளற் குறித்தே' எனும் சூத்திரத்தால் இனமாகிய வாக்கிற்கும் காயத்திற்கும் அப்பால் உள்ளவன் என உணர்க.

(க - ரை.) மன மெய் மொழிகளைக் கடந்திருப்பவனே! தேவர்களுக்கு முடிமணி போன்று விளங்குபவனே! வேதாகமங்களின் ஞானப்பொருளை அன்பருக்கு உபதேசிப்பதையே திருவிளையாட்டாகக் கருதுபவனு யிருக்கின்றனையே! அங்ஙனமிருக்க உன் திருவடியையே ஆதாரமாக உடைய யான் உன்னருளை அடையுமாறு ஒரு வழியும் கருதாதிருத்தல் நீதியோ? இல்லை என்பதாம்.

## 27. பாக்கியத்தை விதிவழி அனுபவிக்க

[பணியாரம், தேங்காய், பழம், தாம்பூலம், உரு - 108.]

மின்னே நிகர்வாழ் வைவிரும் பியயா
னென்னே விதியின் பயனிங் கிதுவோ
பொன்னே மணியே பொருளே அருளே
மன்னே மயிலே றியவா னவனே.

(இ - ள்.) பொன்னே - பொன் போன்றிருப்பவனே!, மணியே - மாணிக்கம் போன்று ஒளி செய்பவனே!, பொருளே - உணர்ந்ததும் பேரானந்தத்தை விளைவிக்கும் மெய்ப்பொருள் வடிவமாயிருப்பவனே!, அருளே - நித்திய மான அருள் உருவமாயிருப்பவனே!, மன்னே - அநந்த கலியாணகுணங்களும் பூரணமாக நிறைந்து எப்பொருட்கும் யார்க்கும் இறைவனாயிருப்பவனே!, மயில் ஏறிய வான வனே - மயில்வாகனத்தின்மீதேறி வானுலகத்தில் சஞ்சரிப் பவனே (தேவனே!); மின்னே நிகர் வாழ்வை - க்ஷண மாத்திரமாய்த் தோன்றி உடனே மறையும் நிலைபெறுதல் இல்லாத உலக வாழ்வினை, விரும்பிய யான் - ஆசைபட் டொழுகும் தன்மையனாகிய யான், இங்கு இது விதியின் பயனோ - இவ்வையத்தில் இவ்விதம் இருத்தல் அடியேனது ஊழியின் பயன்தானோ?, என்னே - இது என்ன ஆச்சரிய மான விஷயம்!, எ - று.

(வி - ரை.) மின்னே நிகர் வாழ்வு:—அருணகிரியார் வாழ்வை மின்னலுக்கு உவமையாக்கினர். இத்துடன் நாலடியார் யாக்கையைப் "புல் நுனிமேல் நீர்போல் நிலை யாமை" என்றும், "மலையாடும் மஞ்சுபோற் றோன்றிமற் றுங்கே நிலையாது நீத்துவிடும்" என்றும் வாழ்விற்குப் பற்றுக்கோடாக மக்கள் ஈட்டும் செல்வத்தை, "எல்லிற், கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போற் றோன்றி, மருங் கறக் கெட்டுவிடும்" என்றுங் கூறியதை ஒப்பிட்டு நோக்குக.



"இன்னினியே செய்க அறவினை" என்றும் "நாச் செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை மேற்சென்று செய்யப்படும்" என்றும் மேலோர் பெரிதும் அறிவுறுத்தி இருக்க அவ்வாறு உன்னருள் வழி ஒழுகாது நிலையாத வாழ்வை நிலையினதாக எண்ணி அதனை நச்சி வாழ விரும்பி நான் தடுமாற்றம் அடைவது விதியின் பயனோ என்று வியப்புறுகின்றார்.

மின்னே என்பதில் 'ஏ' ஏனைய பொருள்களும் நிலை யாமையுடையவேனும் மின்னல் ஒருக்ஷண மாத்திரத்தானே தோன்றலும் மறைதலும் உடைமையால் அதனை வேறு பொருள் கூட்டத்தினின்றும் பிரித்தலால் பிரிநிலை ஏகாரம் என்க. என் - வியப்பிடைச் சொல். முருகப்பிரானாகிய உயர்திணைக்குச் சிறப்புப்பற்றிப் பொன், மணி, பொருள், அருள், மன் முதலிய அஃறிணைப் பொருள்கள் வந்தால் திணைவழுவமைதி. மன் - அரசனுக்குரிய பெருமை; அது உபசார வழக்கால் அவன்மேல் ஏற்றிக் கூறியதென்றுவது கொள்க. இதுவோ, 'ஓ' வினா.

(க - ரை.) பொன்னை யொத்தவனே! கிடைத்தற் கருமையான மாணிக்கம் போன்றிருப்பவனே! மெய்ஞ் ஞான வடிவே! அருளுருவே! இறைவனே! மயில்வாக னனே! தேவனே! மின்னல் போன்று நிலையாத வாழ்வை விரும்பி உன்னையே புகலிடமாக உடைய யான் அலைதல் எனது விதியின் பயனோ? என்ன 'ஆச்சரியம்' என்பதாம்.

## 28. தான் அவனாக

[பச்சரிசி, பொங்கல், தேங்காய், பழம், உரு - 108.]

ஆனா வமுதே யயில்வே லரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ
யானா கியவென் னைவிழுங் கிவெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே.

(இ - ள்.) ஆனா(த) அமுதே - என்றும் அழியாத அமிழ்தினை ஒத்தவனே! அயில் வேல் அரசே - கூரிய வேலாயுதத்தை யுடைய இறைவனே!, ஞான ஆகரனே - ஞான வடிவனே!, யானாகிய என்னை விழுங்கி - நிலையில்லாததும் என்னுடையதல்லாததும் ஆன இந்த யாக்கையே யான் என்று நினைக்கின்றவனாகிய என்னை 'நீயே நான் நானே நீ!' என்ற பேதமற்ற நிலையில் உட்கொண்டு, வெறுந் தான் ஆய் நிலைநின்றது தற்பரம் - முழுதும் 'தானே இருப்பதும்' என்றும் ஸ்திரமாயிருப்பதுமாகிய அப் பரம்பொருள் எனும் சுவானுபூதியை, நவிலத்தகுமோ - இன்னதென்று குறிப்பிட்டுச் சொல்லுதல் இயலுமோ? இயலாது, எ - று.

(வி - ரை.) யானாகிய என்னை - ஜீவனுக்குரியது அல்லாத உடம்புதான் நான் என்று கருதும் என்னை. "இந்த வுடலை யான் என்று" என்ற தாயுமானார் மொழி நோக்குக. தற்பரம் - கடவுள், சிவம். சற்குருவால உபதேசம் பெற்று அஞ்ஞானம் ஒழியப்பெற்று யோக நிஷ்டையாகிய நிர்விகல்ப சமாதியில் அமையும்போது எங்குந் தானே ஆகி நானே சிவம் சிவமே நான் என்ற இரண்டற்ற நிலையை ஜீவன் எய்துகின்றது. இதையே சுவானுபூதி என்பர் வேதாந்த நூலுடையோர். ஆனாமை - நீங்காமை.



முருகனை அமுதே என்றழைத்தது:—தன்னை உட்கொண்டார்க்கு இனிமையும் குறையா இன்பமும் சாவாமையுந் தருவதே அமுதம். அம்ருதம் என்பதின் மரூஉ. மிருத்யு — சாவு; அதனைத் தராதது அம்ருதம். முருகனைப் பருகியவரும் இனிமை பெறுகின்றனர், பேரின்பம் எய்துகின்றனர், நரை திரை மூப்பு பிணி சாக்காடு இவை இல்லா நிலை அடைகின்றனர்.

ஆகாரம் - உறைவிடம்.

(க - ரை.) கெடாத அமிழ்தமே! கூர்வேற்படையுடைய இறைவனே! ஞான சொரூபனே! இந்த வுடலை யான் என்று கருதும் இந்த நாயினேனை குருமூர்த்தியாக எழுந்தருளி ஞானோபதேசம் செய்து நானே சிவமாய் அமர்ந்திருக்கும் இரண்டற்ற சுவானுபூதி நிலையை அடையுமாறு செய்தனை. அந் நிலையின் தன்மையை இன்னதென்று விளக்கிக் காட்ட முடியாதவனாயிருக்கின்றேன் என்பதாம்.

## 29. கடவுள்முன் கோபமாற்ற

[பால், பொங்கல், தாம்பூலம், உரு- 108.]

இல்லே யெனுமா யையிலிட் டனைநீ
பொல்லே னறியா மைபொறுத் திலையே
மல்லே புரிபன் னிருவா குவிலென்
சொல்லே புனையுஞ் சுடர்வே லவனே.

(இ - ள்.) மல்லே புரி பன்னிரு வாகுவில் - மற்போரையே விரும்புகின்ற பன்னிரண்டு புயங்களிலும், என் சொல்லே புனையும் சுடர் வேலவனே - எனது சொற்களால் இயன்ற பாமாலையையே பூணுகின்ற ஒளிவிடுகின்ற

வேலாயுதந் தரித்த இறைவனே !, இல்லை என்னும் மாயை
யில் (என்னை) நீ இட்டனை - தனக்கென ஒரு பொருளும்
இல்லை என்று கூறப்படும் அவிச்சையினால் அடியேனை உலக
வாழ்வில் சிக்குண்டிருக்க நீ செய்துவிட்டாய், பொல்லேன் -
பதரின் தன்மை உடையவனாகிய யான், அறியாமை -
அஞ்ஞானத்தினால் இயற்றிய பொல்லாங்குகளை, பொறுத்
திலை - க்ஷமிக்கா திருக்கின்றனை. அவ்விதம் இருப்பின்
அடியேன் பிழைப்ப தெங்ஙனம்?, எ - று.

(வி - ரை.) இல்லெனும் மாயை - மாயை எனும்
பொருள் இன்னதென்று ஆராயப் புகுங்காலத்து மனம்
வாக்குக் காயங்களுக்கு உணர்வாகும் யாதொரு பொருளும்
இல்லை என அறிகின்றோம். அதனை அழகாகத் திருவள்
ளுவனார். "பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருள்" என்றார். அதற்குப் பரிமேலழகர். மெய்ப்பொரு
ளல்ல வற்றை மெய்ப்பொரு ளென்றுணரும் விபரீத
வுணர்வு என்றுரையிட்டார். இப்பியை வெள்ளி யென்றும்
குற்றியை மகன் என்றும் இவ்வாறே ஒன்றனைப் பிறி
தொன்றாகத் துணிதலே, மாயை, அல்லது மருள். மருள்,
மாயை, மயக்கம், விபரீதவுணர்வு, அவிச்சை என்பன ஒரு
பொருட்கிளவி. பொல்லு - பதர். அறியாமையின் பய
னாகிய தீமையை அறியாமையின்மேல் ஏற்றினார், உபசார
வழக்கு. என் அறியாமை பொறுத்தற்கு இரு காரணங்கள்
உண்டு.

(1) என்னை மாயையிற் சிக்குண்டுழலும் நோயைத்
தந்தவன் நீயே.

ஆதலின்,

"நோய் தந்தவனே நுவல் தீரவும்" —(கம்பர்)



(நோய்க்கு மருந்து எனச் சொல்லும் பரிகாரமும்)
நீ ஆவது உன் கடன்.

(2) உனது 'மல்லேபுரி பன்னிரு வாகுவில் என்
சொல்லே புனைந்து' அழகு பெறுகின்றனையே அதற்குக்
கைம்மாறாகவாவது மயக்கத்தை ஒழிக்க வேண்டாமோ?
தான் முருகனுக்கு நன்றி செய்திருக்க அதனை மறத்தல்
அழகியதன்று என்ற உரிமை கொண்டாடுகின்றார். நன்றி
மறப்பது நன்றன்று அன்றோ. மாயை ஒழித்தற் கருமை
யாதலின் முருகனால்தான் அது சாத்தியமாகும்; ஏனெனில்
அவனிடம் மல்லே புரி பன்னிரு தோள்களும் சுடர் வேலும்
இருப்பதால். இல்லே, இலையே என்பவற்றில் உள்ள ஏகா
ரங்கள் இசைநிறை. மல்லே புரி - என்பதில் உள்ள ஏகாரம்
பிரிநிலை. சதைக்கட்டுடைய பராக்கிரமம் பொருந்திய
தோள் இதர யுத்த வகைகளை விரும்பாது மற்போரையே
விரும்புவது இயற்கை. சொல்லே புனை என்பதில் ஏகார
மும் அஃதே. தனக்கு வேண்டிய ஆபரணங்கள் இருப்பி
னும் என்னுடைய சொல்லாகிய பாமாலையையே புனைய
விரும்பும் அத்தகைய கருணை யுடையவன் முருகக் கடவுள்
சொல் என்னும் முதற்கருவியின் பெயர் அதன் காரிய
மாகிய பாமாலைக்கானதால் சொல்லென்பது கருவியாகு
பெயர்.

(கு - ரை.) வேலாயுதத்தை யுடையவனே! உலக
மாயையில் கட்டுண்டு உழலச் செய்தவன் நீயே அதனால்
நோய் தந்தவனே பரிகாரமும் தரவேண்டும். அவ்விதம்
இன்னும் செய்தாய் இல்லை. மற்போரையே விரும்பும் உன்
பன்னிரண்டு தோள்களிலும் எனது பாமாலையையே
அணிந்து அழகு பெறுகின்றனை. அங்ஙனம் இருக்க என்னை
மயக்கத்தி னின்றும் விடுபெறும் வழி காட்டாதிருப்பது

உனக்குத் தருமமில்லை. விரைந்தென்னை ஆட்கொள்வா யாக என்பதாம்.

## 30. வழக்குப் பேச

[தேங்காய், பழம், தாம்பூலம், உரு - 108.]

செவ்வா னுருவிற் றிகழ்வே லவனன்
றெவ்வா ததென வுணர்வித் ததுதா
னவ்வா றறிவா ரறிகின் றதலா
லெவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே.

(இ - ள்.) செவ்வான் உருவின் திகழ் வேலவன்- சிவந்த ஆகாயத்தின் வண்ணத்தைப்போல் ஒளி செய்யும் வேலாயுதனார், அன்று ஒவ்வாதது என உணர்வித்தது - சற்குருவாக எழுந்தருளி ஞானோபதேசம் செய்த அச் சமயத்தில் நமது உபதேசப் பொருளுக்கு எதுவும் ஒப்புமை யாகாது என்று அறிவுறுத்திய மெய்ஞ்ஞானமானது, அவ் வாறு அறிகின்றது அல்லால் - மெய்ஞ்ஞானம் பெற வேண்டும் என்ற ஆர்வத்தால் பெரிதும் ஆற்றிய பின்னர் கருணை கூர்ந்து முருகப்பிரான் சற்குருவாய் அமைந்து அவன் உபதேசித்த அவ் விதத்திலேயே அதனை அறிகின்ற உரிமை பெற்றவர் அதனை உணர்வதல்லாமல், எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப்பது - எவ்விதம் பக்குவ மில்லாத மற்றொருவருக்கு அதனை அறிவிப்பது ?, எ - று.

(வி - ரை.) இந்நூல் 25-ம் செய்யுளில் 'கையோ அயிலோ கழலோ முழுதுஞ் செய்யோய்' என்றதால் சிவந்த வான் வர்ணம் வேலுக்கும் உள்ளது உணர்க. குருமூர்த்தி யின் உபதேசம் பெற்ற பின்னர்தான் மாயை ஒழிகின்றது.



மாயை ஒழிந்தக்கால் அதனால் வரும் 'மாணுப் பிறப்பும்' ஒழிகின்றது. மாயை தொலைய யோகநிஷ்டை வெற்றியாகி எங்கும் தானேயாக நிற்றல், 'தானே சிவம் சிவமே தான்' என்னும் சுவானுபூதிநிலை எய்துகின்றது. ஆதலின் குரு மூர்த்தியால் பெறப்படும் உபதேசம் யாவற்றினும் சிறந்த தென்பார் 'உணர்வித்தது ஒவ்வாதது' என்றார். தாம்- அசை.

(க - ரை.) சிவந்த திருமேனியனே! நீ உபதேசித்த மெய்ஞ்ஞானத்திற் கீடாக எப்பொருளும் இவ் வுலகத்தி லில்லை என முன்னம் அறிவுறுத்தினையே அத் தகைய மாபெரும் பொருளை அவ்விதமே குரு கடாக்ஷத்தினால் அறிவதற்கு உரியவர் அடைவதல்லாது அபக்குவ முடையா ரால் அடைதற்பாலதோ? அன்று என்பதாம்.

## 31. கடவுள் முன்னிலையில் ஞானம் பெற

[பச்சரிசி, சர்க்கரை, பழம், தேங்காய், தாம்பூலம், உரு - 1100.]

பாழ்வாழ் வெனு மிப்படுமா யையிலே
வீழ்வா யெனவென் னைவிதித் தனையே
தாழ்வா னவைசெய் தனதா முளவோ
வாழ்வா யினிநீ மயில்வா கனனே.

(இ - ள்.) மயில் வாகனனே—, பாழ் வாழ்வு என் னும் - பாழான வாழ்வு என்று கூறப்படும், இபடு மாயை யிலே - நான் வருந்துதற்குக் காரணமாகிய இந்த மாயாப் பிரபஞ்சமாகிய ஆழ்ந்த பள்ளத்திலே, வீழ்வாய் என - வீழ்ந்துழலக் கடவாய் என்று என்னை விதித்தனையே, (உன்

அடியவனைப் பிறப்பித்து நியமித்தனையோ ?), தாழ்வானவை செய்தன உளவோ - உன் மனம் புண்ணாகுமாறு உன் திறத்தில் இழிதொழில்கள் என்னால் செய்யப்பட்டவை உள்ளனவோ ?, (இல்லையே அவ்வாறாக அடியேனை ஆட்கொள்ளாததின் காரணம் என்னை ? உனது அசிரத்தை இருந்தவாறென்னே உன்னையே நம்பி இருப்பவன் உய்வதில்லை எனில்), இனி நீ வாழ்வாய் - இனி நீ வாழக்கடவையோ ? இல்லை, எ - று.

(வி - ரை.) இது நிந்தாஸ்துதி. பிறந்து பிறந்து இறந்து இறந்து படுவதால் இப் பிரபஞ்ச வாழ்வு முடிவிலது, அதனால் அதனைப் 'பாழ்' என்றார். பயனில் பொருளையே பாழ் என்கின்றோம். 'வீழ்வாய்' எனுங் குறிப்பால் மாயை என்பதை மாயப்படுகுழி என்றுணர்க. ஆக்கல் காத்தல் அழித்தல் எனும் முத்தொழிலும் முருகப்பிரான் செய்யும் வல்லமை யுடையவன். பிரமனைச் சிறை வைத்துத் தானே படைப்புத்தொழிலை மேற்கொண்டதே அதற்குச் சான்றாகும். சூரபன்மக் கூட்டத்தை அழித்துத் தேவர் உலகங் காத்தமையும் சாட்சியாகும். ஆதலினால் 'என்னை விதித்தனையோ ?' என்றார். அதில் பிரமன் விதிக்க இருக்க நீ என்னை மாயைப்படுகுழியில் , வீழ்த்துவதற்கன்றோ நீயே விதித்தனை ? நன்றிது ; என்ற கண்டித்தல் பொருளும் தொனிக்கின்றதைக் காண்க. உனது திறத்தில் எத்தகைய இழிவானவையும் செய்யாதிருக்கக் காரணமின்றி அருள் செய்யாதிருத்தல் நெறி அன்று என்று தன் பக்கல் தான் அதிக நியாயமுள்ள தென்பதை முருகனுக்கு எடுத்துக் காட்டி அருள் பெறுவான் வேண்டி வாதிக்கின்றார். வாழ்வாய் என்பது வாழ மாட்டாய் எனும் பொருளில் வந்த விருத்தலக்ஷணை.



(க - ரை) முருகனே ! பயனில்லாத மாயப் பிரபஞ்ச வாழ்வாம் படுகுழியில் என்னைத் தள்ளி நான் அல்லல் உறுவதற்கோ என்னைப் படைத்தனை ? உனக்கு என் மனதார யாதொரு இழி தொழிலும் புரிந்தறியேன். அங்ஙனமாகக் காரணமின்றி அருள் புரியாது அடஞ் சாதித்தல் அழகியதன்று ; இனி நீ வாழ்ந்து போவையோ ? ஆதலின் விரைவில் என் மனதைப் புண்படுத்தாமல் அருள் புரிந்து ஆட்கொள்வாயாக என்பதாம்.

## 32. கொலை மறுக்க

[பச்சரிசியடை, சர்க்கரை, தாம்பூலம், உரு - 108.]

கலையே பதறிக் கதறித் தலையூ
டலையே படுமா றதுவாய் விடவோ
கொலையே புரிவே டர்குலப் பிடிதோய்
மலையே மலைகூ றிடுவா கையனே.

(இ-ள்.) கொலையே புரி வேடர் குலப் பிடியுங் (தெய்வயானையும்) தோய் - பிழைத்திருக்கக் கொலைத் தொழிலையே விரும்பிச் செய்கின்ற வேடர் குலத்தே வளர்ந்தவளாகிய வள்ளியம்மையாகிய பெண்யானையும் தெய்வயானையுந் தழுவி வாழ்கின்ற, மலையே - மலைபோன்றவனே !, மலை கூறு இடு வாகையனே - கிரௌஞ்சமலையை இரு துண்டமாக வேலாயுதத்தால் பிளவாக்கிய வெற்றிமாலையைச் சூடியவனே !, கலையே - வெறும் சாத்திரங்களையே, பதறிக் கதறி - வேக வேகமாக வாய்விட்டுக் கத்தி ஓதி, தலை ஊடு அலையே - வாதவிவாதச் சண்டையில் முக்கியமாகப் பிணங்குதலையே, படுமாறு - நான் எய்தும் வண்ணம், அதுவாய்

விடவோ - அவ்வெறுஞ் சாத்திரக்கூட்டங்களின் பிம்பமாக
இருக்கலாமா ! கூடாது, எ - று.

(வி - ரை.) பிடி, மலை என்னும் இருபொருளையும்
தொடர்பாக உருவகப்படுத்தி அவ்விரண்டும் தம்முள் இயை
புடையனவாகச் செய்ததால் 'பிடிதோய்மலை' என்பது
இயைபுருவகமாம். (1) கலையே (2) வாடலையே (3)
கொலையே என்னும் இம் மூன்றனுள்ளும் உள்ள ஏகாரங்கள்
பிரிநிலைப் பொருளனவாகும். (1) வெறுஞ் சாத்திரங்களை
விரைந்து கதறிப் படிப்பதால் மட்டும் கல்வியறிவு பூரண
மாகாது. பிற சாத்திரவல்லுநரிடம் செய்யும் கேள்வியாலே
பூரணமாகும். அதனைச் செய்யாது தானே கத்தி ஓதுவ
தில் பயனில்லை. பின்னர் கல்வி ஓதுதலும் கேள்வியும்
சேர்ந்த பூரண கல்வியறிவுமட்டும் பெறுவதாலும் "கற்றத
னலாய பயனென்கொல் வால் அறிவன் நற்றாள் தொழா
அரெனின்" என்பதற் கேற்ப அக்கற்ற கல்வியறிவின் பய
னாகிய மெய்ஞ்ஞானத்தை உணர்தலே சிறப்பாகும். அங்
ஙனம் செய்யாததைக் கண்டிக்கப் புகுவார் 'கலையே பதறிக்
கதறி' என்றார்.

(2) "கற்பவை கசடறக் கற்றபின் அதற்குத்தக" "வால்
அறிவன் நற்றாள்". தொழும் மெய்ஞ்ஞானம் அடைய முய
லாதான் வாதவிவாதத்தில் பிணங்குதலையே சிறப்பான
தொழிலாகக் கொள்ளுதல் இழிவாகும். தேற்றத்திற்கு வாத
விவாதம் நல்லதே. அதற்கு எதிரி கூறுவனவற்றை ஆய்ந்து
நல்லவை கொள்ளாது தானே மேதையில் சிறந்தவன் என்ற
செருக்குற்றுத் தன் கருத்தையே, நியாயமற்றதெனினும்,
நிலைநிற்றற்குப் பிடிவாதஞ்செய்து எதிரியோடு பிணங்குதல்
முன்னையதினும் இழிவாம். இவர்களே கற்றமூடர். இத



னைச் செய்யுந்தன்மையை மிகக் கண்டிக்கும் முகத்தான்
'தலை யூடலையே படுமாறதுவாய் விடவோ' என்று இரக்க
மும் அவலமும் கூடிய தொனியோடு கூறினர்.

(3) உஜ்ஜீவனத்திற்கு பயிர்செய்தல் வாணிபம்
முதலியன புரிதற்குக் காட்டில் சௌகரியமில்லை ; ஆதலின்
வேடர் கொலை நிகழும் வேட்டல் தொழிலையே விரும்புவது
இயற்கை, அதனாலே 'கொலையே புரி வேடர்' என்றார்.

தெய்வயானையுந் தோய்ந்திருத்தல் அல்லாது வேடர்
குலப்பிடியும் தோய்ந்திருக்கும் மலை என்க எனின் பிடி
யும் என்றிருக்கவேண்டும். இறந்தது தழுவிய எச்சவும்மை
விகாரத்தால் தொக்கது. சாத்திரம் ஓதும் ஓசையைக்காட்
டினும் தானே சிவமயமாகும் சுவானுபூதியாகிய பேசாதிருக்
கும் நிலையே சிறந்தது என்பது ஈண்டுணர்தற் பாற்றும்.

(க - ரை.) வேடர்குல வள்ளிநாச்சியாரும் தெய்வ
யானை அம்மையாரும் தழுவப் பெறும் மலைபோன்றவனே !
கிரௌஞ்ச மலையை இருபிளவாக்கி வெற்றி மாலை அணிந்த
வீரனே ! வெறுஞ் சாத்திரங்களையே ஓதிச் சொற் போரில்
பிறரை வெல்லும் தொழிலையே விருப்பமுடையவனா யிருக்
கும் என்னைத் தடுத்தாட்கொள்வாயாக என்பதாம்.

## 33. வியாகுலம் ஒழிக்க

[அடை, பணியாரம், தேங்காய், தாம்பூலம், உரு - 108.]

சிந்தா குலவில் லொடுசெல் வமெனும்
விந்தா டவியென் றுவிடப் பெறுவேன்
மந்தா கினிதந் தவரோ தயனே
கந்தா முருகா கருணா கரனே.

(இ - ள்.) மந்தாகினி தந்த - சிவபெருமான் தமது முகங்களினின்றுந் தீப்பொறிகளை அவரது கட்டளையாலே அக்கினிபகவான் ஏந்தித் தேவநதியாகிய கங்கையிலிடவும் அந்நதி அவற்றை யெடுத்துச் சரவணப்பொய்கையில் சேர்க்க, வரோதயனே - தேவர் வரப்பிரசாதத்தால் சிவபிரானுக்குப் புத்திரனாய் உதித்தவனே !, கந்தா முருகா - கந்தனே ! முருகனே!, கருணாகரனே - அருளுக்கிருப்பிடமானவனே !, சிந்தாகுலம் இல் - மனத்திற்கு வருத்தம் தருகின்ற மனைவியுடன், செல்வம் என்னும் விந்தாடவி - ஐஸ்வரியம் என்கின்ற விந்தியகிரிக் காட்டினை, என்று விடப் பெறுவேன் - எப்போது விடுதற்குத் தகுதியுடையவன் ஆவேனோ? விடுதலைக்கோர் மார்க்கம் காட்டி அருளல் வேண்டும், எ - று.

( வி - ரை. ) சிந்தாகுலம்=சிந்தா+ஆகுலம் ; வடமொழி தீர்க்கசந்தி. சிந்தை - மனம், ஆகுலம் துன்பம். இல், இடவாகுபெயராய் அதில் உள்ள மனைவிக்காயிற்று. இறைவன் வழிபாட்டிற்குத் தடைசெய்யும் மனவருத்தத்தினை இயற்றும் மனைவியுடன் கூடிய வாழ்வையே ஈண்டு வெறுத்தார். கடவுள் வழிபாட்டிற்குத் துணைபுரியும் அருந்ததியை முதலிய நன் மனைவியரை அன்று. "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யு மழை" அத்தகைய இல்லாளுடன் வாழ்தல் முக்திப் பேற்றினை விரைவுப்படுத்துவதாகும். விந்தியாடவியே விந்தாடவி என மருவிற்று ; விந்திய+அடவி. விந்திய மலைக் காடு விசாலமானது, வெட்டவெட்ட வளரும் தன்மையது ; அதில் சிக்கியவர் வெளிவருதல் கஷ்டம். காமம் வெகுளி மயக்கம் இவற்றிற்கு முதற்கருவி செல்வமாதலின் அதில் பட்டோர் மீள்வதரிது ; ஆதலின் அதனை விந்தாடவியாக



உருவகித்தார். செல்வம் - மனை, நிலம், கைப்பொருள் முதலியன.

வரோதயன்=வர+உதயன் ; வடமொழி குணசந்தி. தேவர் பெற்ற வரத்தால் சிவபிரானுக் குதித்தவன். கந்தன்:—முருகப்பிரான் இப்பெயர் பெற்றதை,

"தாயென வாரல் போந்து தனங்கொள்பா லருத்த லாலே
ஏயதோர் கார்த்தி கேய னென்றொரு தொல்பேர் பெற்றான்
சேயவன் வடிவ மாறுந் திரட்டினீ யொன்றாய்ச் செய்தாய்
ஆயத னாலே கந்த னெனு நாமம் பெற்றான்"

எனும் கந்தபுராணம் திருவிளையாட்டுப்படலம் 17 - ஆம் கவியான் அறிக. உமையம்மையால் ஆறு வடிவங்களாய் இருந்ததைச் சேர்த்துத் திரட்டி ஓருருவமாக்கப் பெற்றவன் என்பதுணர்க.

கந்தம் - அணுத்திரள். அணுவுக்கு உயிர் எனவும் பொருள் உண்டு. உயிருள்ள வடிவங்கள் சேர்த்துத் திரட்டப்பட்டவன் என்றும், கருணையை உடையவன் என்றும் மணத்தை உடையவன் என்றும் கொள்க.

கருணா+ஆகரன்=கருணாகரன். ஆகரம் - உரைவிடம்.

(க - ரை.) முருகா ! .........! பொல்லா மனைவியாலும் செல்வபோகத்தாலும் வரும் விடுபெறற்கரிய மன வருத்தம் எப்பொழுது நீங்கப்பெறுவேன்? ஓர் வழிகாட்டி அருளுக என்பதாம்.

## 34. பெண்களைத் தாயாக நினைக்க

[நெல், மாவிளக்கு, நெய், தேங்காய், பழம், தாம்பூலம், உரு - 108 ]

சிங்கா ரமடந் தையர்தீ நெறிபோய்
மங்கா மலெனக் குவரந் தருவாய்
சங்க்ரா மசிகா வலசண் முகனே
கங்கா நதிபா லக்ருபா கரனே.

(இ - ள்.) சங்க்ராம - போர்செய்ய வல்லவனே !, சிகாவல - மயிலேறுபவனே !, சண்முகனே - ஆறுமுகனே !, கங்காநதி பால - காங்கேயனே, (கங்காதேவியின் புத்திரனே !), கிருபாகரனே - அருளுக்கு உறைவிடம் ஆனவனே !, சிங்கார மடந்தையர் - அழகு அணி ஆடல் பாடல் முதலிய பலவித அலங்காரங்களையுடைய விலைமகளிரது, தீநெறி போய் - போகம் விழைந்து துய்த்தலாகிய தீய வழியில் ஒழுகி, மங்காமல் - கெடாதவாறு, எனக்கு வரம் தருவாய் - அடியேனுக்கு வரத்தைத் தந்தருள்வாயாக, எ - று.

(வி - ரை.) சிங்கார மடந்தையர் என்றதால் விலைமாதரையே வெறுத்தனர். குலமகளிரை அன்று. சிங்கார மடந்தையர் வலையில் பட்டால் காமம் மட்டுமன்றி ஏனைய கொலை, களவு, கள், பொய் என்ற நான்கு பாவங்களையுஞ் செய்யத் தூண்டுதலால் வரைவின் மகளிரால் வரும் போகத்தைத் 'தீநெறி' என்றார்.

அதில் விழைந்து வீழ்ந்தவர் கெடுவதே அன்றி யாரும் மீள்கிலார், அதனால் 'மங்காமல்' என்றார்.



"ஊறு ஞானத்து யர்ந்தவ ராயினும்
வீறு சேர்முலை மாதரை வெல்வரோ"
—(கம்பர்)

"ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு"
—(திருக்குறள்)

இவற்றால் எத்தகைய தவபலத்தை யுடையவரும் உடல்வலி படைத்தவரும் மாதரால் உண்டாகும் காமத்தினின்றும் தப்புதல் அரிதாகலின் அதனினின்றுங் காப்பாற்றிக்கொள்ளுவதற்காக முருகனின் வரத்தை வேண்டுகின்றார். வரம் - அனுக்கிரகம், மேன்மை. சிகாவலம் - மயில்.

(க - ரை.) கிருபைக்கிருப்பிடமே! ...............! அழகிய விலைமாதரின் வலைபட்டு அவர் போகம் தூண்டும் தீய வழியில் ஒழுகிக் கெடாதவண்ணம் அடியேனுக்கு வரந் தந்தருள்வாயாக என்பதாம்.

## 35. சரீரவாஞ்சை ஒழிக்க

[பரமான்னம், தாம்பூலம், பழம், உரு - 1008.]

விதிகா ணுமுடம் பைவிடா வினையேன்
கதிகா ணமலர்க் கழலென் றருள்வாய்
மதிவா ணுதல்வள் ளியையல் லதுபின்
றுதியா விரதா சுரபூ பதியே.

(இ - ள்.) மதி வாள் நுதல் - அர்த்த சந்திரனை உருவத்தில் ஒத்த பிரகாசமான நெற்றியையுடைய, வள்ளியை அல்லது பின் துதியாத - வள்ளியம்மையைத் தவிர்த்து வேறெவரையும் துதித்தல் செய்யாத, விரதா - நோன்பு கொண்டவனே !, சுர பூபதி - சொர்க்கலோகத்திற்குத் தலைவனே !, விதி காணும் உடம்பை விடாத வினையேன் -

பிரமன் சிருட்டித்த அழியுந் தன்மை வாய்ந்த இந்த இழிவான உடலைப் பயனற்றதென்றுணர்ந்து விட்டுவிடுதற் கிசையாது அன்புறுகின்ற இருவினைகளையும் உடையவனாகிய யான், கதி காண - மீளாநெறி அடைவதற்கேதுவான நல்ல நெறியினை உணருமாறு, மலர் கழல் என்று அருள்வாய் - வீரக்கழல் அணிந்த தாமரைமலர் போன்ற உனது திருவடியை எந்நாளில் அருள் செய்வாய்?, எ - று.

(வி - ரை.) விதிகாணும் உடம்பு நிலையில்லாதது, அழிதற்கேதுவானது; விதிகாணுத் தூய உடம்பே சிறந்தது; அதற்கு அழிவில்லை; ஆதலின் முன்னையதனையே வெறுத்தார். விதிகாணும் உடம்பைக் கொண்டே இருவினைகளும் ஆற்றப்படுகின்றன. இருவினைகளுந்தான் பிறப்பிறப்புக்களுக்கு மூலகாரணம். ஆதலின் அது வேண்டுவதில்லை. தூய உடம்பு பெறுதற்கே 'கதி காண விழைகின்றார். வள்ளியை மணம்புணரும்போது வேடனாகவும் கிழவனாகவும் வேடம் புனைந்து அம்மையைத் தன் பக்கல் இரங்குமாறு வேண்டினன். மணம்புணர்ந்த பின்னர் தெய்வயானையாரினும் இளையவள் ஆகலாலின் வள்ளியம்மையின்மீது அதிக அன்புபூண்டு அவளது அழகு மேன்மைகளைத் துதித்தல் இயற்கையே. மேலும் அம்மை ஊடும்போது ஊடல் தீர்ப்பான் வேண்டித் துதித்தலும் வழக்கு. இதுபற்றியே வள்ளியம்மையாரை 'மதிவாள் நுதல் வள்ளியை யல்லது பின் துதியா விரதா' என்று விளித்தார். இதனால் வேறு எவரையும் முருகன் துதிக்கும் வழக்குடையன் அன்று, எப்பொருட்கும் இறைவன் ஆகலின், முருகன் கழல் வணங்கிய பின்னரே ஜீவன் முக்தி இயலுமாகலால் 'கழல் என்றருள்வாய்' என முருகனை வினவலானார். விரதம் - தவம், ஆணை.



(கு - ரை) வள்ளி அம்மையையே துதிக்கும் விரதா! ...........! பிரமன் படைத்த இவ்வுடம்பு நித்தியமன்று; ஆதலின் அழியாத உடம்பு பெறுதற்குச் சீவன்முக்தி விழைந்தேன். அது பெறும் நன்னிலையை அடைவதற்கு உனது திருவடியை அடியேனுக்கு விரைவில் அருள்வாயாக என்பதாம்.

## 36. கடவுளைக் காண

[தேன், சர்க்கரை, தேங்காய், பழம், தாம்பூலம், உரு - 108.]

நாதா குமரா நமவென் றரனு
ரோதா யெனவோ தியதெப் பொருளோ
வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே.

(இ - ள்.) வேதா முதல் விண்ணவர் - வேதங்களையுடையவனாகிய பிரமன் முதலாக இந்திரன் முதலிய தேவர்கள் அனைவரும், சூடும் மலர் பாதா - தஞ்சிரசில் சூடிக் கொள்ளும் தாமரைப்பூ போன்ற திருவடிகள் உடையவனே!, குறமின் பதம் சேகரனே - குறவர் குலத்தில் வளர்ந்த மின்னற்கொடி போன்றவளான வள்ளி அம்மை பிணங்கும்போது அதனைத் தீர்த்தற்பொருட்டு அவள் பாதங்களைத் திருமுடியில் தரித்துக் கொள்பவனே!, அரனுர் - சிவபெருமான் ஆனவன், (உன்னை நோக்கி), நாதா - எப்பொருட்கும் இறைவனே (சற்குருவே!), குமரா - என்றும் இளமையோ டிருப்பவனே!, நம என்று - நமஸ்காரம் என்று பணிந்து, ஓதாய் என - அடியேனுக்குப் பிரணவத்தின் உட்பொருளை உபதேசித்தருள்வாய் என்று வேண்ட, ஓதியது எப்பொருளோ - (அப்பிரானுக்கு) உப

தேசித்தது எத்தகைய பொருளோ? அறியேன், அடியேனுக்கும் அதனை உபதேசித் தருள்வாயாக, எ-று.

(வி-ரை.) அரனார் - 'ஆர்' என்பது உயர்வு பற்றி வந்த படர்க்கைப் பலர்பால் விகுதி. அரன் - அழித்தற் கடவுள், சிவன். அன்பரின் துன்பத்தை அழிப்பவன் என்றுங் கொள்க.

ஒரு காலத்துப் பிரணவப்பொருள் உரைக்க முடியாத அயனைச் சிறையிடலும் சிவபெருமான் இஃதறிந்து பிரணவப்பொருள் நீ உரைப்பையோ என்னலும் முருகக்கடவுளும் இசைந்தனன். அப்போது பிரணவப்பொருள் அறிவது உபதேசம் பெறுவதே ஆகலின் ஐயன் தன் குமரனைச் சற்குருவாகக் கொண்டு ஐதீகமுறைப்படி 'நாதா! குமரா! நம!' என்று துதித்து வணங்கி 'ஓதாய்' என்று பிரார்த்தித்தார். பிரணவம் என்பது 'ஓமித்யே காக்ஷரம்' என்ற ஸ்ருதிப்படி 'ஓம்' ஆகும். அதன் உட்பொருள் உள்ளுயிர் என்ப. ஓம் எனும் ஓரெழுத்தின் உள்ளுயிராய் இருப்பது கடவுள். இதனை,

"ஓமெனு மோரெழுத் ததனி னுள்ளுயி
ராமவ னறிவினுக் கறிவு மாயினான்
தாமமு வுலகமுந் தழுவிச் சார்தலான்
தூமமுங் கனலும்போற் றொடர்ந்த தோற்றத்தான்"

எனக் கம்பர்பிரான் அருளிச் செய்ததை உய்த்துணர்க. பொருடான் என்றும் பாடம். பொருளோ - 'ஓ' வினா. வேதா - கடவுள், பிரமன். மின் - உவம ஆகுபெயர்.

இறைவனாகிய குமரன் தன்னையே நம்பி இருக்கும் பெண்பாலாகிய வள்ளியை வணங்கும் அத்துணை எளியவனா



யிருத்தலால் அடியவர் எத்துணைக் குற்றம் செயினும் மன்னித்து அருள் செய்யும் மிக எளிமையுடையவன் என்பதைக் குறிப்பால் உணர்க.

(க-ரை) அயனும் வானவரும் தத்தம் சென்னியில் சூடிக்கொள்ளும் திருவடி உடையவனே! பரமசிவனார் உன்னை 'இறைவா! குமரா! நமஸ்காரம்' என்று பணிந்து ஏத்தித் துதித்துப் பிரணவப்பொருள் உரைப்பாயாக என்று வேண்டலும் உரைத்தனையே! அஃதென்ன? அடியேனுக்கும் உரைத்தருள்வாயாக என்பதாம்.

## 37. தனது அகந்தையை ஒழிக்க

[சர்க்கரைப்பொங்கல், பால், பழம், தாம்பூலம், உரு - 108.]

கிரிவாய் விடுவிக் ரமவே லிறையோன்
பரிவா ரமெனும் பதமே வலையே
புரிவாய் மனனே பொறையா மறிவா
லரிவா யடியோ டுமகந் தையையே.

(இ-ள்.) மனனே - நெஞ்சமே!, கிரிவாய் விடு விக்ரம வேல் இறையோன் - கிரௌஞ்சமலைமேல் பிரயோகித்த வெற்றி பொருந்திய வேற்படை தாங்கிய இறைவனுடைய, பரிவாரம் என்னும் பதம் மேவலையே - அன்பரின் இனத்தைச் சார்ந்தவன் என்பதற்குத் தகுந்த பதவியை யான் பெறுமாறு விருப்பமுற்றிருக்கின்றனையே, புரிவாய் - இனி அன்பர் கூட்டத்தில் நான் சேர விரும்புவாயாக, பொறையாம் அறிவால் - மலைபோன்று அசையாது நிலைபேறுடைய மெய்ஞ்ஞானமாகிய அரிவாளினால், அடியோடும் அகந்தையை அரிவாய் - அஞ்ஞானமென்கிற வேரோடும் என்னுடைய அகங்காரமாகிய கொடியையும் அரிந்து களையக் கடவாய், எ-று.

(வி - ரை.) விக்ரமம் - வலிமை, வெற்றி; ஆதலின்
விக்ரம வேலுக்கு வலிய வேற்படை என்றுங் கொள்க.
பொறை - மலை. மலைக்குக் கலக்கமின்மையும் நிலைபே
றுடைமையும் பண்பாகும். பொறையாம் அறிவு - கலங்கா
மையும் நிலைபேறும் உடைய அறிவு: புரிதல் - விரும்பல், செய்
தல். 'அறிவாய்' எனுங் குறிப்பால் 'அறிவு' அறிவாளா
யிற்று. அறிவாகிய அரிவாளினால் அகந்தையை அரிவாய்
என்றதனால் அகந்தை கொடியாகியது. அறிவால் அகந்
தையை அரிவாய் என்பதில் ஏக தேச விவர்த்தி உருவகம்
காண்க.

பொறையாம் அறிவால்.........அகந்தையையே - மனத்
திற்குக் கட்டளையாகச் சொன்னதென்றாவது, முருகக்
கடவுளுக்கு வேண்டுகோளாவது என்க. இமையோர்
என்றும் பாடம்.

(கு - ரை) நெஞ்சமே! முருகக் கடவுளின் அன்பர்
கூட்டத்தைச் சார்ந்திருக்க விரும்பவில்லை; இனி விரும்
பக்கடவாய். அங்ஙனமாயின் அகங்காரத்தையும் அது
உண்டாவதற்கு மூலகாரணமாகிய அஞ்ஞானத்தையும்
மெய்ஞ்ஞானத்தினால் அரிந்தொழிக்க முடியும். பின்னரே
பேரின்பத்தில் யான் மூழ்க முடியும் என்பதாம்.

## 38. பிசாசம் ஒழிக்க

[மாவிளக்கு, பழம், தேங்காய், தாம்பூலம், உரு - 108.]

**ஆதா ளியையொன் றறியே னையறத்**
**தீதா ளியையாண் டதுசெப் புமதோ**
**கூதா ளகிரா தகுலிக் கிறைவா**
**வேதா ளகணம் புகழ்வே லவனே.**



(இ - ள்.) கூதாளம் கிராத குலிக்கு இறைவா -
கூதாள மலரினால் இயன்ற மாலையை அணியும் வேடர் வம்
சத்தில் வளர்ந்த வள்ளியம்மையாருக்குத் தலைவனே!,
வேதாள கணம் புகழ் வேலவனே - பைசாசக் கூட்டங்கள்
புகழ் பாடித் துதிக்கும் வேலாயுதத்தை யுடையவனே!,
ஆதம் ஆளியை - அறிவின்மையை ஆள்பவனும், அற தீது
ஆளியை - மிகுந்த குற்றங்களை ஆள்பவனும், ஒன்றும் அறி
யேனை - உன்னைச் சேர்ந்துய்யும் வகை ஒன்றினையும் உண
ராதவனும் ஆகிய அடியேனை, ஆண்டது செப்புமதோ -
அடிமையாக ஏற்று அருள் புரிந்த தன்மை இத்தன்மையது
எனச் சொல்லும் வகையுடையதோ? இல்லை, எ - று.

(வி - ரை.) ஆதம் ஆளி என்பது செய்யுள் விகாரத்
தால் ஆதாளி ஆகியது. ஒன்று என்பதில் 'உம்' விகாரத்
தால் தொக்கது. தீது - குற்றம் ஆறு; காமம், குரோதம்,
லோபம், மோஹம், மதம், மாச்சரியம்; அல்லது "காமம்
வெகுளி மயக்கம் இவைமூன்றன் நாமங் கெடக்கெடும்
நோய்" என்று திருவள்ளுவர் கூறியதால் காமம் வெகுளி
மயக்கம் என்ற குற்றம் மூன்றாகியது என்னலாம். 'ஆதம்
ஆளியை,' 'ஒன்றறியேனை' 'அறத் தீதாளியை' என்றத
னால் ஆட்கொள்ளுதற்கு உரியவை யல்லாத அம்சங்கள்
உடையேன் எனினும் இவ்விழிவுகள் உடைய என்னை
ஆண்டது உனது கருணையின் பெருக்கைக் காட்டுகின்றது
என்பதாம். மேற் கூறிய தொடர்கள் ஒவ்வொன்றிலும்
இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. கூதாளம்
அணியும் கிராதர் என்றும் கூதாளம் அணியும் குலி
என்றுங் கூட்டலாம். கிராதர் - வேடர், குறவர். கூதாளம்
ஆகு பெயராய்க் கூதாள மலராயிற்று. மீண்டும் அது

மாலையை உணர்த்தி நிற்றலால் இருமடியாகுபெயர். கிராத குலியை ஆட்கொண்டு அவளுக்குத் தலைவனாகியதால் இழி வுடைய என்னையும் ஆட்கொள்வன் என்பது தொனியா நின்றது. குலி - குலத்திற் பிறந்தவள். 'வேதாள கணம் புகழ் வேலவன்' பகைவரைக் கொன்று குவித்தலால் அவர் களின் பிணங்களைப் பேய்கள் தின்று பசியாறுகின்றன. தங்கள் பசி தீர்த்தலுக்குக் காரணமாகிய வேலையும் அதை விடும் முருகக் கடவுளையும் அவை புகழ்தல் இயற்கையே. ஓ - எதிர்மறைக்கண் வந்தது.

(க - ரை.) வேலவனே! அஞ்ஞானியா யிருந்தும் காம வெகுளி முதலிய தீமைகள் புரிந்தவனா யிருந்தும் உன்னை அடையும் வகை உணராதவனா யிருந்தும் என்னை அடிமையாக ஏற்றுக்கொண்ட தன்மை இத் தகைய தெனக் கூற முடியுமோ முடியாது என்பதாம்.

## 39. ஜனனம் எடாதிருக்க

[கனிவர்க்கம், பால், தாம்பூலம், உரு - 108.]

மாவேழ் சனனங் கெடமா யைவிடா
மூவே டணையென் றுமுடிந் திடுமோ
கோவே குறமின் கொடிதோள் புணருந்
தேவே சிவசங் கரதே சிகனே.

(இ - ள்.) கோவே - எப்பொருட்கும் இறைவனே! குற மின் கொடி தோள் புணரும் தேவே - குறவர் குலத் துதித்த மின்னற்கொடி போன்ற வள்ளியம்மையின் தோளை மருவுகின்ற தேவனே! சங்கரன் சிவன் தேசிகனே - அடி யாருக்கு இன்பத்தைச் செய்கின்ற சிவபிரானுக்குப் பிரணவப்பொருள் உபதேசித்தருளிய குருபிரானே!, மா ஏழ் சனனம் கெட - மிகவும் பெரிய எழுவித பிறப்புக் களும் அழியும் வகை, மாயை விடாத மூ ஏடணை - மயக்கஞ் செய்தலில் நீங்காத மூன்று ஈஷணைகள், என்று முடிந் திடுமோ - எப்போதேனும் ஒழியுமோ? நீங்குதற்கு ஓர் மார்க்கந் தெரிவிக்கவேண்டும், எ - று.



(வி - ரை.) (1) தேவர், (2) மக்கள், (3) விலங்கர், (4) பறவை, (5) எறும்பு முதலிய ஊர்வன, (6) மீன் முத லிய நீர் வாழ்வன, (7) செடி கொடி முதலிய தாவரம் எனப் பிறப்புக்கள் எழுவகையாம். ஈஷணா என்பது ஏடணையாக மருவிற்று. அவை மனைவி மக்கள் அர்த்தம் என மூன்றா கும். இதனை ஈஷணாத்திரயம் என்ப. கோ, தே என் பவை பண்புப்பெயர்கள். 'தேவன்' என்னும் பண்பிப் பெயர் அன் விகுதி குன்றித் தே எனப் பண்புப்பெயராய் நின்றும் அப் பண்பிப்பொருளையே தந்து நின்றது எனக். மின்கொடி - உவமையாகுபெயர். சிவன் - மங்கலத்தைச் செய்பவன். சங்கரன் - அன்பரின் பாபத்தைச் சங்கரிப்ப வன் அல்லது அன்பருக்கு இன்பத்தைச் செய்பவன். ஓ - வினைப்பொருளது.

(க - ரை.) கோவே!............... மனைவி, மக்கள், அர்த்தம் எனும் ஈஷணாத்திரயங்களின் மீதுள்ள ஆசை யினால் மிகவும் பெரிய எழுவகைப் பிறப்புக்களினின்றும் விடுதலை பெறாதிருக்கின்றேன். ஆதலின் பிறப்பிறப்புக்க ளுக்கு மூலமான அவ் வீஷணாத்திரயங்கள் கெட்டொழியும் வழியைக் காட்டி யருள்வீராக என்பதாம்.

## 40. மாயை தெளிய

[வடை, தோசை, பணியாரம், உரு - 1008.]

வினையோ டவிடுங் கதிர்வேன் மறவேன்
மனையோ டுதியங் கிமயங் கிடவோ
சுனையோ டருவித் துறையோ டுபசுந்
தினையோ டிதனோ டுதிரிந் தவனே.

(இ - ள்.) சுனையோடும் - வள்ளிமலைச் சுனையிடத்தும், அருவித்துறையோடும் - வள்ளிமலை அருவிக்கரையிடத்தும், பசுந் தினையோடும் - பசுநிறத் தினைப்புனத்திடத்திலும், இதனோடும் - பரணத்திடத்திலும், திரிந்தவனே - வள்ளி நாச்சியாரைச் சேரும் நிமித்தம் அலைந்து திரிந்தவனே!, வினை ஓட - எனது பாப புண்ணியங்களாகிய இருவினைகள் என்னும் இருள் கெடும் வண்ணம், விடும் கதிர் வேல் மறவேன் - அதன்மீது பிரயோகிக்கும் ஒளிக்கிரணங்கள் பொருந்திய உன் வேலாயுதத்தை மறந்திடாது சிந்திப்பவனாகிய நான், மனையோடு - மனைவியுடன் பொருந்தும் வாழ்க்கையால், தியங்கி மயங்கிடவோ - கலக்கங்கொண்டு மயங்குதல் தக்கதாமோ? அன்று எ - று.

(வி - ரை.) கதிர் என்னுங் குறிப்பால் வினை இருளாயிற்று. மறவேன் - வினையாலணையும்பெயர். தியக்கம் - கலக்கம். மனை - ஆகுபெயராய் மனைவிக்காயிற்று; மீண்டும் அது இல்வாழ்க்கைக்கானது; இருமடியாகுபெயர். மனையை மனைவியாகவே கொண்டு "ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே" எனுஞ் சூத்திரப்படி மனைவியால் அல்லாமலும் ஏனைய மக்கள் அர்த்தம் இவற்றினையும் என ஈஷணை மூன்றனையும் குறித்தார் என்றுங்கொள்க.



மனையோடு, ஓடு - கருவிப்பொருளது, சுனையோடும் முதலியவற்றில் உள்ள 'ஓடு' உருபு இடப்பொருளது. எண்ணும்மைகள் தொக்கன. தினை, அது விளைந்திருக்கும் புனத்திற்காயது; ஆகுபெயர்.

(க - ரை.) வள்ளிநாச்சியாரைத் தேடித்திரிந்த இறைவனே! இருவினைகளாகிய அந்தகாரம் அழியுமாறு ஞான ஒளி பொருந்திய வேற்படையைச் சிந்திக்குந் தன்மையனாகிய நான் மனைவி மக்கள் பொன் என்பவற்றால் மயக்கத்தில் கலக்கமுறுதல் தகுமோ? அவற்றினின்றும் விடுவித்து விரைந்து ஆட்கொள்ளுவாயாக என்பதாம்.

## 41. நித்தியதேகம் பெற

[பால், பழம், தேங்காய், இளநீர், பரமான்னம்,
உரு - 1008.]

சாகா தெனையே சரணங் களிலே
காகா நமனார் கலகஞ் செயுநாள்
வாகா முருகா மயில்வா கனனே
யோகா சிவஞா னொபதே சிகனே.

(இ - ள்.) வாகா - வெற்றிமாலை யணிந்தவனே!, முருகா - இளமையுந் தெய்வத்தன்மையும் வாய்ந்தவனே!, மயில்வாகனனே - மயிலை ஊர்தியாக உடையவனே!, யோகா - ஞானயோகியே!, சிவன் ஞான உபதேசிகனே - சிவபிரானுக்குப் பிரணவப்பொருளை உபதேசித்தவனே!, நமனார் கலகம் செய்யும் நாள் - எமன் நான் வருந்துதற்குக் காரணமாகிய கலகத்தைப் புரியும் எனது மரணவேளையிலே, என்னைச் சாகாது சரணங்களிலே கா கா - உனது அடிமை

யாகிய என்னை அந்த எமன் கையில் சிக்கிச் சாகாதவாறு உன்னுடைய திருவடிகளாகிய புகலிடத்தே இருத்திக் காப்பாற்றுவாயாக! காப்பாற்றுவாயாக!, எ - று.

(வி - ரை.) எமன் வசமாகி இறத்தல் நரகத்தில் வேதனைகள் அனுபவித்து மீண்டும் பிறப்பதற்கேதுவாகின்றது. முருகப்பிரானின் பாதங்களை அடைவதோ மீளாப் பதவி ஆகும். ஆதலின் எமன் வந்து தன்னுலகத்திற்கு அழைத்துப்போகும் மரணகாலத்தில் விரைந்து வந்து தன்னைக் காக்குமாறு வேண்டுகின்றார். 'கா' எனுங் குறிப்பால் சரணம் அடைக்கலமாகப் பொருள்கொள்க.

இதனை இந்நூல் 44 - ஆம் செய்யுளில்,

"முருகன் சரணஞ் சூடும்"

என்பதனோடு ஒப்பிட்டு நோக்குக.

ஈசனாகிய முருகப்பிரானின் திருவடியை அடைய விரும்பும் அன்பனைக் "கூடாது எனது உலகமாகிய நரகத்திற்கு நீ வந்துதான் ஆகவேண்டும்" என்று இடைமறித்துக் கவர்வதற்கு நமன் பூசல் புரிவதற்குக் 'கலகம்' என்றார். அண்டங்கள் அனைத்தும் தன் குடைக் கீழ் வரும் வண்ணம் செய்த போர்விரைவுடைய சூரபதுமனே மயில்வாகனமாக அமைந்துள்ளதால் முருகப்பிரான் யமன் வந்து கலகம் புரியும் நெருக்கடியில் காப்பதன் நிமித்தம் விரைந்துவரும் தன்மை உடையவன் என்பதைக் குறிப்பதற்கே 'மயில் வாகனனே!' என விளித்தார்.

அடியவனாகிய என்னைத்தான் ஏனையோரைக்காட்டினும் முதலில் காக்கவேண்டும் என்பதனாலும், வேறு பதங்களைக் காட்டினும் சரணங்களில்தான் விரைவான நிலைபேறுடைய தான பாதுகாப்பு பெறப்படும் என்பதனாலும் 'எனையே' 'சரணங்களிலே' என்பவற்றில் உள்ள 'ஏ' பிரிநிலையாகும்.



காகா விரைவுப் பொருள் அடுக்குத்தொடர். நமனார் கலகம் யாவராலும் தடுக்கற்பால தொன்றன்று. ஆதலின் விரைவாக முருகப்பிரானை வருதற்கு வேண்டும் முகத்தால் 'காகா' என்று கதறுகின்றார். வாகை - வெற்றி, வெற்றி மாலை. நமனார் என்பதில் உள்ள 'ஆர்' இழிவுப்பொருள் விகுதியாகும். ஞான + உபதேசிகன் = ஞானோபதேசிகன், அஃது ஈண்டு விகாரத்தால் ஞானொபதேசிகன் எனக் குறைந்து நின்றது.

(கு - ரை) முருகா!... யமன் கைவசப்பட்டு மாள்வார் மீண்டும் பிறப்பர். ஆதலின் மீளாத பதவியாகிய நினது திருவடிகளில் ஐக்கியமாகும் நிலையை விரைந்தருள்வாயாக என்பதாம்.

## 42. நின்றநிலை நிற்க

[பசுநெய், தாமரை நூல், மாவிளக்கு, உரு - 108.]

குறியைக் குறியா துகுறித் தறியு
நெறியைத் தனிவே லைநிகழ்த் திடலுஞ்
செறிவற் றுலகோ டுறைசிந் தையுமற்
றறிவற் றறியா மையுமற் றதுவே.

(இ - ள்.) தனிவேல் ஐ - ஒப்பற்ற வேலாயுதத்தை யுடைய தலைவனே!, குறியை - வேதத்திற்கும் மனம் வாக்குக் காயங்களுக்கும் அப்பால் உள்ளதும் எப் பொருட்கும் இலக்ஷியமாக உள்ளதுமாகிய பரம்பொருளை, குறியாது -

வேறு லோகசம்பந்தமான விஷயங்களைச் சற்றுங் கருதா
குவித்து - ஸ்திரமாகத் தியானஞ்செய்து, அறியும் நெறியை
உண்மை நிலை உணரும் மார்க்கத்தை, நிகழ்ந்திடலும்
அடியேனுக்கு உபதேசித்த நிமிடமே, உலகோடு செறி
அற்றும் - லோகசம்பந்தம் ஒழிந்தும், உரை அற்றும்
வீணாகிய பேச்சு ஒடுங்கியும், சிந்தையும் அற்றும் - பர
பொருளுக்குப் புறம்பானவற்றை எண்ணும் நினைப்பு
அழிந்தும், அறிவு அற்றும் - பிறபொருளை உணரும் அறி
அகன்றும், அறியாமையும் அற்றும் - பரம்பொருளை உண
ராதிருக்கும் அஞ்ஞானமும் கெட்டும் (பின்னரே புலனாகும்)
அது - அத்தகைய பரம்பொருள் அடியேனுக்கு ஐயந்தி
றப் புலனாகியது, எ - று.

(வி - ரை.) தனிவேலை என்பதில் 'ஐ' முன்னி
விகுதியாகக் கொள்ளின் ஒப்பற்ற வேற்படை யுடையவனே
எனப் பொருளாகும். 'அற்று' என்பதை 'உரை' யோடு
கூட்டுக. உலகசம்பந்தத்தாலே 'உரை' எழுகின்றது; ஆ
லின் அவ்வினத்தைக் குறிக்க உலகோடுரை என்று ஒடு உரு
கொடுத்துச் சேர்த்தார் என்று கொள்ளின் உலகச் செ
வோடும் உரையும் அற்றும் எனக் கூட்டிப் பொருளுரை
'அற்று' வருமிடத்தெல்லாம் எண்ணும்மை தொக்கது
உரை அற்ற பின்னரும் நினைக்கச் சிந்தை உள்ளதால் சி
தையும் என்பதில் உள்ள 'உம்' இறந்தது தழுவிய எச்ச
'சிந்தை' அற்றபின்னர் ஏனையபொருளை உணரும் 'அறிவு'
உள்ளதால் அஃது எதிரது தழுவிய எச்சமும் ஆகும். அ
யாமையும் என்பதில் உள்ள 'உம்' இறந்தது தழுவிய எச்
உம்மையாகும். உலகு என்பது அதில் உள்ள உயர்திணை
பொருட்கும் அஃறிணைப் பொருட்கும் பொதுவாய் வ
ஆகுபெயர்.



(சு - ரை.) ஒப்பற்ற வேற்படை உடைய தலைவனே! அடியேனுக்குக் கருணைபுரிந்து பரம்பொருளை உணரும் வழியை உபதேசித்தபோதே அந்தப் பரம்பொருள் எனக்கு ஐயந்திரிபற விளங்கியது என்பதாம்.

## 43. ஆசாநுக் அநுக்கிரக்க

[திணைமாவிளக்கு, பழம், தேங்காய், தாம்பூலம், உரு - 1008.]

தூசா மணியுந் துகிலும் புனைவா
ளேசா முருகா நினதன் பருளா
லாசா நிகளந் துகளா யினபின்
பேசா வநுபூ திபிறந் ததுவே.

(இ - ள்.) தூசு ஆம் மணியும் துகிலும் புனைவாள் நேசா - வெண் தூசு போன்ற தூய்மை பொருந்திய முத்தாரத்தையும் தூய்மையான பட்டுத்துணியையும் அணிந்துள்ள வள்ளிநாச்சியாரின் அன்பனே!, முருகா - இளமையை யுடையவனே!, நினது அன்பு அருளால் - உனது அன்பின் பயனாகிய கிருபை ரூபமான வாளினால், ஆசா நிகளம் - என்னுடைய ஆசை என்னும் விலங்கு, துகள் ஆயின பின் - தூள்தூளா பொடிந்த பின்னர், பேசா அநுபூதி பிறந்தது - இத்தகையதென்று கூறுதற்கியலாத ஆனந்த அநுபவம் அடியேனுக்கு உதித்தது, எ - று.

(வி - ரை) 'தூசு ஆம்' எனும் குறிப்பால் 'மணி' முத்து என்க. மணி - முத்தாரம், ஆகுபெயர். "பணிக் குழல் வள்ளி பதம்பணியும் வேலே" என 22 ஆம் செய்யுளில் கூறியிருப்பதும் நோக்கியும், வள்ளியம்மையார் இளையவள் ஆதலாலும் அவள்மீது முருகப்பிரான் தனித்த நேசந்

கொள்வது இயற்கை யானதாலும் அநுபவத்தாலும் தூசாம் மணியும் துகிலும் புனைவாள்' என்பதற்கு வள்ளி நாயகியெனப் பொருள் கொள்ளப்பட்டது.

" அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியா லுண்டு "

என்னுந் திருக்குறளால் அருளானது அன்பின் பயன் என்க. அக் குறளுக்குப் பரிமேலழகர், " தொடர்பு பற்றாதே வருத்தமுற்றார் மேற்செய்வதாய அருள் " என்று கூறுவதை நோக்கி ஆசையாகிய விலங்கால் அடியேன் வருத்தமுற்றிருக்கும்போது என்மீது முன்னரே இருந்த அன்பு முதிர்ந்து அருளாகப் பரிணமித்த வாளாயுதத்தினால் வெட்டி ஒழித்தருளினாய் என்றுணர்க.

ஆசையை நிகளமாக வுருவகித்து அருளை உருவகஞ் செய்யாது வாளா விடுத்தமையான் ஏகதேச உருவகம்

( கு - ரை ) முருகா! முதிர்ந்த அருளுடன் எனது ஆசையாகிய பந்தத்தை அறுத்து எறிந்தனை. அதனால் இன்னதென்று எடுத்துரைத்தற்கியலாத ஆனந்த அனுபவம் என்வயம் பிறந்தது என்பதாம்.

## 44. குருமந்திரம் பெற

[பச்சரிசி, தாம்பூலம், சர்க்கரை, உரு - 1008.]

**சாடுந் தனிவேன் முருகன் சரணஞ்**
**சூடும் படிதந் ததுசொல் லுமதோ**
**வீடுஞ் சுரர்மா முடிவே தமும்வெங்**
**காடும் புனமுங் கமழுங் கழலே.**



(இ - ள்.) வீடும் - ( அசுரர் அழிந்தமையால் இடுக்கண் நின்றும் ) நீங்கிய, சுரர் மாமுடியும் - தேவர்களின் தலையிடத்திலும், வேதமும் - நான்மறைகளின் உச்சியிலும், வெம் காடும் - கொடிய வெப்பம் பொருந்திய கானகத்திலும், புனமும் - தினைப்புனத்திடத்திலும், கமழும் கழல் - ஒளி செய்யும் வீரக்கழல் பொலியும் திருவடிகளை, சாடும் தனிவேல் முருகன் - சூரபதுமன் முதலான பகை அசுரரை வீழ்த்திய ஒப்பற்ற வேலாயுதத்தைத் தரித்தவனாகிய முருகப்பிரான், சரணம் சூடும்படி தந்தது சொல்லுமதோ - அடியவனுக்குப் புகலிடமாகச் சென்னியில் தரித்தற்கு ஈந்தருளியது இத்தகையதென உரைத்தற்குரியதாகுமோ? அன்று, எ - று.

(வி - ரை.) ( துன்பத்தினின்றும் ) வீடும் சுரர் என்பதனை,

"மன்ற வவுணர் வருத்திடவிந் நாள்வரையும்
பொன்றினவ ரென்னப் புலம்பித் திரிந்தனமால்
இன்றுபகை மாற்றி யெமக்கருணீ செய்கையினால்
சென்றவுயிர் மீண்ட திறம்பெற் றனமையா "

என்ற கந்தபுராணம் தேவர் போற்றுப் படலத்தின் ஆறும் செய்யுளோடு ஒப்பிட்டு நோக்குக. முருகன் திருக்கழல் சரணமாக அமைவதை இந்நூலில் 41-ம் செய்யுளில் 'சாகாதெனையே சரணங்களிலே காகா' என்பதோடும் ஒப்பிட்டுணர்க. 35-ம் செய்யுளில் 'கழலென்றருள்வாய்' என்று திருவடித் தீட்சையை வேண்டியவர் ஈண்டு அதனைப் பெற்றதனால் 'முருகன் சரணஞ் சூடும்படி தந்தது சொல்லுமதோ' என வியக்கின்றார். காடும் புனமும் கழல் கமழ்தல் - வள்ளிநாச்சியாரைக் காட்டிலும் தினைப்புனத்தி

னும் தேடித் திரிந்தபோழ்து. முடியும் என்பதில் 'உம்' தொக்கது. 'வேதம்,' 'கழல்' ஆகுபெயர்கள். கமழ்தல் - மணம் வீசுதல்; ஈண்டுத் திருக்கழல் கமழ்தலுக்குத் திருக் கழலின் ஒளி வீசுதல் ஆகும்.

(சு - ரை.) முருகக்கடவுளே! பிறவித்துன்பங்களால் இடுக்கணுற்ற எனது பயத்தை நீக்குவான் வேண்டி உனது திருவடிகளை என் சென்னிமீது வைத்தருளி அனுக்கிரகஞ் செய்த தன்மை இத்தன்மையதெனச் சொல்லுதற் குரியதோ? அன்று என்பதாம்.

## 45. கல்வியில் சம்பாவிக்க

[ தேங்காய், பழம், தாம்பூலம், உரு - 108. ]

காவா கியகல் வியுளார் கடைசென்
றிரவா வகைமெய்ப் பொருளீ குவையோ
குரவா குமரா குலிசா யுதகுஞ்
சரவா சிவயோ கதயா பரனே.

(இ - ள்.) குரவா - குருமூர்த்தியே!, குமரா - என்றும் இளமையை உடையவனே!, குலிச ஆயுத - வச்சிரப் படை தரித்தவனே!, குஞ்சரவா - பிணிமுகம் எனப்படும் யானைமீ தாரோகணிப்பவனே!, சிவயோக - சிவயோக முடையவனே!, தயாபரனே - கிருபைக்குக் கவசம் போன்றிருப்பவனே!, காவாகிய கல்வி உளார் கடை சென்று - மறைத்தலை உடைய கல்வியறிவு உடையவரின் வாயிலிற் சென்று, இரவா வகை - எனக்கு மெய்ப்பொருள் உபதேசஞ் செய்க என்று அச்சிரவிக்காதவாறு, மெய்ப் பொருள் ஈகுவையோ - என்றுதான் அடியேனுக்கு உபதேசம் செய்தருளுவாயோ?, எ - று.



(வி - ரை.) ஒளித்தலை உடைய வஞ்சகக் கல்வியறிவுடையாரிடம் சென்றிரந்தால் உண்மைப்பொருள் கிட்டாது என்றால் துன்புழப்பதே. அங்ஙனம் துன்புழக்கவிடாது முருகப்பிரானே வலிய வந்து உபதேசம் செய்தருளி ஆட்கொள்ள 'உண்மைப்பொருள் ஈகுவையோ?' என்று வினவுகின்றார். தானே சுலபமாக உபதேசஞ் செய்து ஆட்கொள்ளும் தன்மை முருகன்வயம் உண்டு என்பதைக் 'குரவா! சிவயோக தயாபரனே!' எனும் விளிகளால் குறிக்கின்றார். உபதேசம் தரும் அருள் உண்டேல் விரைந்துவரக் கூடும் என்பதைக் 'குமரா! குஞ்சரவா!' என்னும் குறிப்பு மொழிகளால் அறிவிக்கின்றார். விரைந்து வருவதற்கு யானை வாகனமும், இளமையும் அவசியம் வேண்டும் அன்றோ. அஞ்ஞானப்பகையை ஓட்ட அவனால் இயலும் என்பதைக் 'குலிசாயுத' என்பதால் குறிக்கின்றார்.

உண்மைப்பொருள் - சிவனும் பரமான்மாவும் ஒன்றுபடுதல். குஞ்சரம் - ஈண்டுப் பிணிமுகம்; பிணிமுகம், முருகப்பிள்ளையாரின் வாகனம் என்பதை "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" (திருமுருகாற்றுப்படை 247, "சேயுயர் பிணிமுகம் ஊர்ந்து," "பிணிமுக மூர்ந்த வெல்போர் இறைவ" (பரிபாடல்) "பிணிமுக வூர்தியொண் செய்யோனும்" (புறநானூறு) முதலியவற்றாலும் உணர்க.

(சு - ரை.) குமரா!.........கற்றதை மறைக்கும் இழிவுடையோரிடம் சென்று உண்மைப் பொருள் இரந்து என்னை வருந்த விடாது நீயே அதனை உபதேசித் தாட்கொண்டருள வேண்டுமென்பதாம்.

## 46. மனவருத்தந் தீர

[சர்க்கரை, தாம்பூலம், உரு - 1008.]

எந்தா யுமெனக் கருடந் தையுநீ  
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்  
கந்தா கதிர்வே லவனே உமையாள்  
மைந்தா குமரா மறைநா யகனே.

(இ - ள்.) கந்தா - கந்தப்பிரானே !, கதிர் வேலவனே - ஒளிபொருந்திய வேலாயுதத்தை உடையவனே !, உமையாள் மைந்தா - உமாமஹேஸ்வரியின் புத்திரனே !, குமரா - என்றும் இளமையோ டிருப்பவனே !, மறை நாயகனே - நான்கு வேதங்களுக்குந் தலைவனா யிருப்பவனே !, என் தாயும் எனக்கு அருள் தந்தையும் நீ - அடியேனுக்கு அன்பு புரியும் தாயாகவும் அருள் செய்யும் தந்தையாகவும் இருக்கும் நீ, சிந்தாகுலம் ஆனவை தீர - மனோவேதனைக்குக் காரணமாகிய காமக் குரோதாதிகளானவை தீருமாறு, ஆள் - அடியவனை ஏற்று ஆள்வாயாக, எ - று.

(வி - ரை.) என்றாய் என்பது எதுகைக்காக எந் தாய் என நின்றது. தந்தைக்குரிமை அருள் எனவே தாய்க்குரிமை அன்பெனக் கொள்க. ஆனவை - சொல் லுருபு. தீர என்பது தீர்த்து என நின்றது யெச்சமயக்கம்.

(க - ரை.) அடியவனுக்குத் தாயும் தந்தையுமா யிருப்பவனே ! மனோவேதனை தரும் காமக் குரோதாதிகள் ஒழியுமாறு அடியவனை ஏற்றுக்கொண்டு ஆள்வாயாக என்பதாம்.



## 47. ஆனந்த நடனங் காண

[சர்க்கரை, பானகம், இளநீர், உரு - 1008.]

ஆறா றையுநீத் ததன்மே னிலையைப்  
பேறா வடியேன் பெறுமா றுளதோ  
சீறா வருசூர் சிதைவித் திமையோர்  
கூறா வுலகங் குளிர்வித் தவனே.

(இ-ள்.) சீறா வரு சூர் சிதைவித்து - யுத்தஞ் செய்ய வருவதற்குக் கோபித்து வந்தவனான சூரபன்மனை வேலாயுதத்தால் அழிவித்து, இமையோர் கூறா(க) உலகம் குளிர்வித்தவனே - தேவர்களை (அவர்தம் இன்பதுன்பங்கள் தனது) பங்கென உரிமையாகப் பாவித்துச் சொர்க்கவாசிகளைத் திருப்தி செய்வித்தவனே !, ஆறு ஆறையும் - முப்பத்தாறு தத்துவங்களையும் இஃது யானல்ல இஃது யானல்ல என நீக்கி, அதன் மேல் நிலை - அவைகளுக்கும் அப்பால் உள்ள (மீளாப்பதவியாம்) மோக்ஷ பதவியை, பேறு ஆ(க) - பெறுதற்குரிய செல்வமாக, அடியேன் பெறும் ஆறு உளதோ - அடிமையாகிய நான் பெறும் மார்க்கம் எப்போது உண்டாகுமோ ? விரைவாக அம் மார்க்கம் எனக்கு உண்டாகுமாறு அருள் செய்வாயாக, எ - று.

(வி - ரை.) ஆறாறு - தொகைக்குறிப்பு ; 36 தத்துவங்களைக் குறித்து நின்றது. இந்நூல் 79-ம் செய்யுளில் 'ஆறாறு மறிவித் தருள்வாய்' என்றதனாலும் உணர்க. இவைகள் (1) பிருதிவி (2) அப்பு (3) தேயு (4) வாயு (5) ஆகாயம் எனப் பஞ்ச பூதங்கள் 5 உம், (1) மெய் (2) வாய் (3) கண் (4) மூக்கு (5) செவி என

ஞானேந்திரியங்கள் 5 உம், (1) ஊறு (2) ஒளி (3) ஓசை (4) சுவை (5) நாற்றம் எனத் தன்மாத்திரைகள் 5 உம், (1) வாக்கு (2) பாதம் (3) பாணி (4) பாயு (5) உபத்தம் எனக் கன்மேந்திரியங்கள் 5 உம், (1) மனம் 2) புத்தி (3) சித்தம் (4) அகங்காரம் என அந்தக்கரணங்கள் 4 உம், ஆன்ம தத்துவம் 24 ; (1) காலம் (2) நியதி (3) கலை (4) வித்தை (5) அராகம் (6) புருஷன் (7) மாயை என வித்தியா தத்துவங்கள் 7 ; (1) சுத்த வித்தை (2) ஈஸ்வர தத்துவம் (3) சாதாக்கிய தத்துவம் (4) சத்தி தத்துவம் (5 சிவ தத்துவம் எனச் சிவதத்துவம் 5 ; ஆகத் தத்துவங்கள் 36. காலம் முதல் மாயை ஈறாகவுள்ள வித்தியா தத்துவங்களின் விவரங்களையும் சுத்த வித்தை முதலாகச் சிவதத்துவம் ஈறாகவுள்ள சிவதத்துவங்களின் விவரங்களையும் விரிந்த வேதாந்த நூல்களுள் கண்டுகொள்க. நானா ஜீவவாதக் கட்டளையில் வேறு வகையில் தத்துவம் 36 ஆகக் கூறப்பட்டுள்ளதும் ஆண்டு ஆய்ந்துணர்க. ஆனால் சதுரகராதியில் தத்துவம் 96 எனக் கூறப்பட்டுள்ளது. ஆன்ம தத்துவம் 24, நாடி 10, அவத்தை 5, மலம் 3, குணம் 3, மண்டலம் 3, பிணி 3, விகாரம் 8, ஆதாரம் 6, தாது 7, வாயு 10, கோசம் 5, வாயல் 9.

அதன் - முப்பத்தாறு தத்துவங்களையுங் குறிக்கும் சாதி யொருமை. 'கூறு, பேறு' என்பன கூறுக, பேறுக என்பவற்றின் செய்யுள்விகாரம். கூறு - பங்கு. இங்குத் தேவர்களின் இன்பதுன்பங்களை முருகன் தனது பங்கென உரிமை கொண்டாடுதல். பேறு - உழைப்பின் பயன், ஊதியம் அல்லது செல்வம்.

(கு - ரை.) இமையோரின் இடுக்கண் தீர்த்தவனே! தத்துவங்களுக்கப்பாலுள்ள மோட்சபதவியை அடையும்



நாள் என்றோ? விரைவில் நான் அடையும் வகை அருள் புரிவாயாக என்பதாம்.

## 48. தற்சொரூபங் காண

[தேங்காய், பழம், தாம்பூலம், உரு - 1008.]

அறிவொன் றறநின் றறிவா ரறிவிற்
பிரிவொன் றறநின் றபிரா னலையோ
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும்வே லவனே.

(இ - ள்.) ஒன்று செறிவு அற வந்து - தன்னின் அயலான தேகம் பிரபஞ்சம் இவற்றில் பொருந்தும் அகங்கார மமகாரங்கள் நீங்கும் வகை நினைந்து வந்து, இருள் சிதைய - அம்மமகார அகங்கார அபிமானங்களுக்கு ஏதுவாகிய அஞ்ஞானமெனும் இருள் அழியுமாறு சித்தத்திடத்தே ஞான ஒளி யேற்றி, வெறி வென்றவரோடு - அவ்விதத்தில் அஞ்ஞான மயக்கத்தை அழித்த ஞானிகளுடன் உறும் வேலவனே - கூடி உறையும் வேலாயுதனே!, அறிவு - உடல் முதலியன நான் என்று கருதும் தன்னுணர்வு, அற - நீங்குமாறு, ஒன்று நின்று அறிவார் - ஒப்பற்ற பரப்பிரமத்தில் நிலையாக நின்று தமது சுயரூபத்தை உணர்ந்தவரது, அறிவில் பிறிவு அற - அறிவினிடத்தே வேற்றுமை என்பது நீங்க, ஒன்று நின்ற பிரான் அலையோ - ஒரே ரூபமாக இருக்கும் இறைவன் அன்றோ? ஆதலின் விரைவாக வந்து அந்த அபேதநிலை நான் உணரும் வகை அருள்வாயாக, எ - று.

(கு - ரை) இறைவனே! நான் எனதென்னும் அபிமானம் ஒழியுமாறு வந்து அஞ்ஞான இருளைப்போக்கி

ஞானவிளக் கேற்றிவைத்து மயக்கம் ஒழித்த ஞானிகளு டன்கூடி உறைபவன் நீ; ஒப்பற்ற பரப்பிரம்மத்தில் நிலைத்து நிற்கும் மெய்ஞ்ஞானிகளின் அறிவினிடத்தில் பேதமற்றுப் பிரகாசிக்கும் நிலையை அடியேனுக்குச் சீக்கிரமாக அருள்வா யாக வென்பதாம்.

## 49. தன்னை அறிந்துகொள்ள

[நெய், பாயசம், பழம், உரு - 1008.]

தன்னந் தனிநின் றதுதா னறிய
இன்னம் மொருவர்க் கிசைவிப் பதுவோ
மின்னுங் கதிர்வேல் விகிர்தா நினைவார்
கின்னங் களையுங் கிருபைச் சுடரே.

(இ - ள்.) கதிர் மின்னும் வேல் விகிர்தா - சூரிய கிரணங்கள் போன்று ஒளிசெய்யும் வேலாயுதத்தையுடைய (எப்போதும்) நலமே புரியும் தலைவனே!, நினைவார் கின்னம் களையும் கிருபைச் சுடரே - உன்னைத் தியானிப்பவரின் துன்பமாகிய இருளைப்போக்கும் அருளாகிய சோதியே!, தான் தன்னந்தனி நின்றது - தான் என்னும் வஸ்து (உடம்பு முதலியனவற்றிற்குப் புறம்பாகத்) தனித்து நிற்கும் நிலையை, அறிய - (என்னைப்போல் மற்றவர்) உணர, இன்னம் ஒருவர்க்கு இசைவிப்பதுவோ - இனியும் ஒருவ ருக்கு நீ அமையுமாறு உபதேசித்து அருள்செய்வதுவோ? அன்று, எ - று.

(வி - ரை.) தன்னந்தனி - ஒரு பொருட்பன்மொழி. தன்னைத்தான் அறியும் பேற்றைத் தாம் அடைந்து விட்ட மகிழ்ச்சியால் 'இன்னம் ஒருவர்க் கிசைவிப்பதுவோ?'



என்று பெருமிதத்துடன் கூறுகின்றார். இவ்வாறு அன்பர் பலர் மொழிந்துள்ளனர். இது குற்ற மற்றது. இதனை ஞானச் செருக்கென்ப. 'இன்னம் மொருவர்க்கு' என்பதில் உள்ள மெல்லொற்று மிகுதல் ஓசை யின்பம் பற்றி. 'சுடர்' என்பதைக்கருதிக் 'கின்னம்' இருளாகப் பொருள் கொண் டனம்; ஏகதேச உருவகம். கிர்பைசூழ் சுடர் என்று முன்னைப்பாடம், அதில் ஓசை இன்பம் இல்லை; தமிழ் இலக்கணத்திற்குப் பெரிதும் வழுவாகும். ஆதலின் கிரு பைச்சுடர் என்று பாடம் ஓதினம்.

(கு - ரை) உன்னைத் தியானிப்பவரது இடுக்கணைக் களைந்தெரியும் தலைவனே! தன்னைத்தான் அறியும் வகை நீ எனக்கு உபதேசம் செய்ததுபோல் ஏனையோருக்கும் செய்வையோ? ஏனையோர் என்போன்று உபதேசம் பெற இயலாதவரே என மதிக்கின்றேன் என்பதாம்

## 50. அவா அறுக்க

[சர்க்கரை, பொங்கல், தாம்பூலம், பழம், பால் உரு - 1008.]

மதிகெட் டறவா டியயங் கியுறக்
கதிகெட் டவமே கெடவோ கடவேன்
நதிபுத் திரஞா னசுகா திபவத்
திதிபுத் திரர்வீ றடுசே வகனே.

(இ - ள்) நதி புத்திர - கங்கையின் புதல்வனே!, ஞானசுக அதிப - ஞானசொரூபமான தலைவனே!, அ திதி புத்திரர் வீறு அடு சேவகனே - அந்தத் திதி என்னும் மங் கையின் மைந்தரிய குமாரர்களின் பெருமிதத்தை ஒழித்த வீரனே!, மதிகெட்டு - அஞ்ஞானத்தினால் அறிவழிந்து அதனால், (அற) மயங்கி மிகவுங் கலங்கி,

அற வாடி - மிகவும் வாட்டமடைந்து, அறம் கதி கெட்டு - தரும மார்க்கத்தில் நடப்பது விடுத்து, அவமே கெடக் கடவேனோ - வீணாகக் கெட்டொழிந்துவிடத் தகுதியுடையவனோ? அன்று அவ்விதம் ஆகாதவண்ணம் சீக்கிரம் ஆளக் கடவாய், எ - று.

(வி - ரை.) 'அற' என்பதனை 'மயங்கி' என்பதனோடுங் கூட்டுக. மயங்கல் - பொருளல்லவற்றைப் பொருளாக மதித்து மாணாப்பிறவிக்கு ஆளாதல், விபரீத புத்தி. கதி அறக்கெட்டு என்று கூட்டி மோட்சகதி தேடாமல் மிகவுங் கெட்டு என்று பொருள் கொள்ளினும் அமையும். அறம் - அறிஞர் நூல்களால் விதித்தவை செய்தல் விலக்கியவை விடுத்தல். வினாவாகிய 'ஓ' வைப் பிரித்துக் கூட்டுக. முருகன் கங்கையால் ஏந்தப்பட்டமையால் 'நதி' கங்கை என்க. நதிகளுக்குக் கங்கை தலைமை பூணுவதால் பொதுப்படக் கூறினும் கங்காநதியையே குறிக்கும். "பூ வென்பது பொறிவாழ் பூவே" (தாமரை) என்பது போல. ஞானம், அறிவு, சித் என்பன ஒரு பொருளனவே. திதி புத்திரர் - சூரபதுமன் முதலானோர்.

(க - ரை.) தலைவனே! அசுரரைக் கொன்று அமரரைக் காப்பாற்றியதே போன்று அடியேனது மயக்கபுத்தி ஒழித்துக் காப்பாற்றுவாயாக என்பதாம்.

## 51. நினைத்தபடி தரிசனங் கொடுக்க

[சர்க்கரை, கடலை, தாம்பூலம், உரு - 108.]

உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவா யருள்வாய் குகனே.



(இ - ள்.) உருவாய் - இத்தகையதெனக் குறித்தறிதற்குரிய காரியரூபமான பிரபஞ்சமாகவும், அருவாய் - அவ்விதம் அறியமாட்டாத காரணரூபமான அவித்தையாகவும், உளதாய் - உள்ளது என்ற கூற்றுக்குக் காரணமான பொருளாகவும், இலதாய் இல்லது என்ற கூற்றுக்குக் காரணமான பொருளாகவும், மருவாய் - பூவின் வாசனையாகவும், மலராய் - வாசனைக்கிருப்பிடமான பூவாகவும், மணியாய் - மணியாகவும், ஒளியாய் - அதற்குரிய பிரகாசமாகவும், கருவாய் - கருவினின்று உதிக்கும் உடலாகவும், உயிராய் - அதனுள்ளிருக்கும் உயிராகவும், கதியாய் - அந்த உயிர் சேரும் முக்தியாகவும், விதியாய் - அம்முக்திக்கு உயிரைச் செலுத்தும் வேதாகம விதியாகவும், குருவாய் - அடியவர்க்குக் கிருபை புரியச் சற்குருமூர்த்தியாகவும், வருவாய் - வருபவனாகிய தலைவனே!, குகனே - குகப்பிரானே!, அருள்வாய் - சீக்கிரமாகச் சற்குருமூர்த்தியாக எழுந்தருளிக் கருணை புரிதல் வேண்டும், எ - று.

(வி - ரை) வருவாய் - வினையாலணையும் பெயர்.

(க - ரை) எல்லாமாய் உள்ள இறைவனே! சற்குருமூர்த்தியாக விரைந்து வந்து அடியேனுக்கு அருள்புரிவாயாக என்பதாம்.

## 52. சலக்கரை பெற

[சாதம், புனுகு, தாம்பூலம், உரு- 108.]

காணா விழியுங் கருதா மனமும்
வீணாய் விடமுன் விதியோ விதியோ
பூணாள் குறமின் புனமும் வனமும்
நாணா துநடந் திடுநா யகனே.

(இ - ள்.) பூணுள் குறமின் - ஆபரணங்கள் அணிந்திருக்கும் குறவர் குலத்தே வளர்ந்தவளும் மின்னலையொத்தவளும் ஆன இளமடந்தைமீதுள்ள ஆசைப்பெருக்கினால், புனமும் வனமும் - தினைப்புனத்திலும் அதனையடுத்துள்ள காட்டிலும், நாணாது நடந்திடு நாயகனே - ஒரு பெண்ணைக் கவர்கின்றோமே என்று சற்றும் வெட்கமுறாது நடந்தவனாகிய தலைவனே !, காணா (த) விழியும் கருதா (த) மனமும் - உன்னைத் தரிசிக்கும் பாக்கியம் பெறாத கண்களையும் உன்னைச் சிந்தியாத மனத்தையும் உடையவனாகிய, (நான்) வீணாய்விட - நான் ஒரு பிரயோஜனமும் இன்றிக் கெட்டொழிந்துவிடுமாறு (நீ செய்ததற்கு யாது காரணம் ?), முன் விதியோ (முன்) விதியோ - என்னுடைய பழவினை தானோ பழவினைதானோ, எ - று.

(வி - ரை) காணாத கருதாத என்பவை ஈறு குறைந்து வந்தன. விதியோ விதியோ - அவலப்பொருள் அடுக்குத்தொடர். முன்விதி - பழவினை, முன்னைச் சன்மத்தில் செய்த தீவினைகள். மின் - உவமை ஆகுபெயர் (ஒளி செய்வதற்கும் துவள்வதற்கும்). 'குற' எனுங் குறிப்பான் 'மின்' வள்ளிநாச்சியாரைக் குறித்து நின்றது.

வள்ளிநாச்சியார் கருதாதிருக்கும்போதும் அவள்முன் நாணாது நடந்தவனாகிய நீ என்முன் வர நாணுவது ஏன் ? என்பது தொனியாநின்றது. காரணம் கூற முடியாமையின் முருகன் வாராமைக்கு முன்விதி என்று அவலப்படுகின்றார்.

(க - ரை.) இறைவனே ! பழவினையின் காரணத்தால் கண்ணால் உன்னைத் தரிசித்தும் மனத்தால் தியானித்தும்



பெறும் பயனை அனுபவியாதிருக்கின்றேன். உன்னைக் கருதாத வள்ளியம்மை முன்னர் நீயே சென்று ஆட்கொண்டனையே, அதுபோன்றே அடியேனுக்கும் அருள்செய்வாயாக என்பதாம்.

## 53. இழந்ததைப் பெற

[வாழை, மா, திராக்ஷை, உரு - 1008.]

ஊனே பொருளா யுழலுற் றடியேன்
வீணே கெடமுன் விதியோ விதியோ
பூணே யிமையோர் புகழே மிகயான்
சேணே பெறவேல் விடுதே சிகனே.

(இ - ள்.) இமையோர் பூணே - வானவருக்கு ஆபரணம் போன்றிருப்பவனே !, புகழே - அன்பர் கூட்டம் என்றுந் தோத்திரம் புரிவதால் புகழ்ரூபமாகத் திகழ்பவனே !, மிக யான் சேண் பெற - மிகுதியும் நான் சற்குருமூர்த்தியின் தரிசனத்தால் ஆகும் உயர்வையே அடையுமாறு (என் முன்னர்), வேல் விடு தேசிகனே - வேலாயுதத்தை (ஒளி செய்யுமாறு) விடுத்த சற்குருமூர்த்தியே !, அடியேன் ஊனே பொருளாய் - உன்னுடைய அடிமையாகிய யான் உன்னையே பொருளாகக் கருதாது எனது உடலைப் பெருக்குதற்குச் சோற்றையே பொருளாகக் கருதி, உழல் உற்று வீணே கெட - சித்தம் தன்னிலை குலைதலை அடைந்து பயனில்லாமலேயே அழியும் வகை செய்தது (எது ?), முன் விதியோ முன்விதியோ - பழவினையோ, பழவினையோ, எ - று.

(வி - ரை.) உழல் - அல் விகுதிகெட்டு நின்ற முதனிலைத் தொழிற்பெயர், உழலல். சேணை, வீணை, ஊணை, இவற்றில் உள்ள ஏகாரம் பிரிநிலை. விதியோ விதியோ - விதிவலிமையால் உறும் அவலங் குறிக்கும் அடுக்கு.

இமையோர் - மத்திம தீபமாக இமையோர் பூணை என்றும் இமையோர் புகழே எனக்கூடும்.

இமையோர் புகழ் - இமையோர் ஈட்டும் புகழின் வடிவன் என்றும் இமையோர் துதித்தலால் புகழ்வடிவன் என்றுங் கொள்க.

(க - ரை.) தேசிகனே! இறைவனே! அடியேன் உயர்வையே அடையும்வகை என்முன் வேற்படையை ஒளி செய்ய அனுப்பியவனே! அதன் தரிசனம் வாய்க்கப் பெற்றும் உன்னையே பொருளாகக் கொள்வதற்குப் பதிலாக உணவையே பொருளாகக் கருதி மனநிலை குலையப்பெற்றேன். இஃது பழவினை வசத்தாலோ? அறியேன்; ஆதலின் அப் பழவினையை உன் வசமாக்கி விரைந்து அருள் புரிவாயாக என்பதாம்.

## 54. நோய் தீர

[கரும்பு, இளநீர், கதலிப்பழம், உரு - 108.]

கழுவா ரயில்வேல் கருணைக் கடலின்
முழுகார் குறுகார் முளரிக் கைக்கொண்
டொழுகார் வினையூ டுழல்வா ரவரோ
அழுகார் தொழுநோ யதிபா தகரே.



(இ - ள்.) முளரி கை கொண்டு ஒழுகார் - குகப்பெருமானது தாமரை ஒத்த திருவடிகளை நெஞ்சத்திற் பதிய வைத்துக் கொண்டு சிந்திக்குந் தொழிலைப் புரியாதவர். வினையூடு உழல்வார் - தீவினை யென்னும் சுழலில் சிக்கிச் சுழல்பவராவார், கழுவு ஆர் அயில் வேல் கருணைக்கடலில் முழுகார் - பகைவரின் இரத்தத்தோய்வைக் கழுவுதல் பொருந்திய கூர்மையுடைய வேற்படையை உடைய முருகன் என்னும் அருட்கடலிலே முழுகமாட்டாதவராவார். குறுகார் - அவனுடைய அருளைப் பெற இயலாதவராவார் அவரோ அழுகு ஆர் தொழுநோய் அதி பாதகர் (ஆவார்) - அவ்வித வன்கண்மை உடைய அவர்தான் உடல்முழுதும் குறைந்து அழுகுதல் பொருந்திய குட்டநோயை அனுபவித்தற்குரிய பெரிய பாவவுடலை உடையவர் ஆவார், எ - று.

(வி - ரை.) யுத்தம் முடிந்த பின்னர் ஆயுதத்தில் தோய்ந்திருக்கும் இரத்தக்கறையைக் கழுவுதல் இயற்கை. கருணைக்கடல், உருவகம். கருணைக்கடலில் முழுகுதல் - முருகனை தானுகுதல். முளரி - உவமையாகுபெயர். கைக்கொளல், ஒரு மொழி, தலைக்கொளல் போன்று. உழலல், சுழலல் ஆதலின் வினையை நீர்ச்சுழல் எனப்பொருள் கொள்ளப்பட்டது. இங்கு, ஊடு - உள்ளே. ஊடு என்பதனை வழியாகக் கொண்டால் வினைவழியே போய் அலைதல் எனவுங் கொள்ளலாம்.

முருகனை வழிபடுவோரின் அடியார் கூட்டத்தினின்றும் வழிபடாதவரைப் பிரித்துக் கூறுதலால் அவரோ என்பதில் உள்ள 'ஓ' பிரிநிலை ஆகும். இவ்விதம் சபித்தல் அன்பருக்குத் தகுதியாமோ எனின் அதிதீவிர பக்தியான் உண்டாகும் செயலை ஆராய்தல் நலன் அன்று.

"பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ"

என்று கம்பர்பிரான் கூறியதை நோக்குக.

முருகவழிபாடு இன்றி, வேறு மூர்த்தங்களை வழிபடும் புறச்சமயத்தினரை வெறுத்தல் தகுமோவெனின், காக்கைக்குத் தன்குஞ்சு பொன்குஞ்சு என்னும் பழமொழிப்படி தன் வழிபடுகடவுளே சிறப்புடைத்தெனக் கருதுதல் பத்தரின் வழக்காம். முருகு என்பதற்குக் கடவுட்டன்மை எனப்பொருள் இருப்பதால் கடவுளுக்கே முருகன் என்று பெயராகும். அங்ஙனமாயின் எம்மதத்தினராயினுஞ் சரியே கடவுள் வழிபாடில்லாதவர் வேதனையுறுவர் எனக்கொள்க. எத்தகைய மூர்த்தங்களையும் வழிபடாமல் அன்பு, ஈகை, அருள், சேவை முதலிய அறநெறி வழிபாட்டில் ஈடுபடுவார்க்கும் இஃது பொருந்தாது. கடவுள் வழிபாடே அறநெறி வழிபாடு ஆகலின், மூர்த்த வழிபாடும் இன்றி ஒழுக்க நெறி வழிபாடும் இன்றித் தீயராய் இயங்குபவரையே இச்சாபம் சேரும்.

(க - ரை.) திருவடிச் சிந்தனையால் ஏற்படும் இன்ப நுகர்ச்சி இல்லாதவர் குட்டநோயினும் பெரிதும் வருந்துவர் ஆதலின் உன் திருவடித் தியானத்தையே பெற அருள்வாயாக என்பதாம்.

## 55. மோக்ஷ சாதனம் பெற

[பழம், பால், இலை, உரு - 108.]

**விண்ணோர் பதமும் விரிநீர் புடைசூழ்
மண்ணோர் பதமும் மகிழேன் மகிழேன்
தண்ணா ரமுதே சயிலப் பகையே
கண்ணா ரமுதே கனியைப் பெறினே.**



(இ - ள்.) தண் ஆர் அமுதே - (தரிசன ஆலிங்கனங்கள் செய்யும்போது அன்பர் கண்களுக்கும் உடலுக்கும்) குளிர்ச்சி மிகுந்திருக்கும் அமிழ்தம் போன்றவனே!, சயிலப்பகையே - கிரௌஞ்ச மலைக்குப் பகைவனுபமைந்தவனே!, கண் ஆர் அமுதே - எல்லா இடங்களிலேயும் நிறைந்திருக்கும் சிதானந்தரூபனே!, கனியைப் பெறின் - உனது திருவுள்ளத்தின் கனிவாகிய திருவருளைப்பெற்றுவிட்டேனாயின், விண்ணோர் பதமும் - இந்திரபதவியும், விரிநீர் புடைசூழ் மண்ணோர் பதமும் - விரிந்த கடல்களால் பக்கத்தில் சூழப்பெற்றுள்ள பூவுலகத்தில் அரச பதவியும், மகிழேன் மகிழேன் - இச்சிக்க மாட்டேன்—, எ - று.

(வி - ரை.) தண்மை - கண்ணுக்கும் உடலுக்கும் குளிர்ச்சி. அமுது - அமிருத்யுவின் சிதைவு; சாகாமையைத் தரும் மருந்து. அது தேவர்கள் சாகாதிருக்கப் பாற்கடல் கடைந்தெடுத்தது. முருகனைத் தரிசித்தவரும் ஆலிங்கனஞ் செய்தவரும் சாகாமையை அடைவர் என்பது தொனியாநின்றது. காண்டற்கும் தழுவுதற்கும் எளிதாயிருப்பது முருகனின் சுகுணமூர்த்தமாகும்.

கண் ஆர் அமுது - எங்கும் நிறைந்த சித்ரூபமானதும் இன்பவடிவானதும் ஆகும். ஈண்டுக் கண் என்பது இடமாகும். அவ்வறிவானந்த வடிவமும் உணர்ந்தக்கால் அன்பருக்குச் சாவாமையை அளிப்பதால் கண்ணார் அமுது என்றார். இஃது நிற்குண வடிவம்.

கண்ணா ரமுதேய் என்றும் பாடம்; கண்ணிற்கு அமுதம்போல் இன்பம் விளைவிப்பவனை என்பது பொருள்.

கனி - முதனிலைத் தொழிற்பெயர். கனிதல் - இரங்கல். உள்ளங்கனிதல் - இரக்கம் அல்லது அருள். மகிழேன் மகிழேன் - இவ்வடுக்கு வெறுப்புப் பொருளது. இதனை,

"ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ
வானாளுஞ் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே"

என்னும் குலசேகரப்பெருமாள் திருவாய்மலர்ந்தருளிய பாசுரத்தோடு ஒப்பிட்டு நோக்குக.

(க - ரை.) எம்பெருமானே! உனதருளைப் பெறுவேனாயின் இந்திரபதவியும் அரசபதவியும் ஒருக்காலும் விரும்ப மாட்டேன். அவைகள் நிலைபேறுடையன அன்று. ஆதலின் நிலைபேறுடைய மீளாப்பதவி அளிப்பதான உனது திருவருளை விரைந்து அளிப்பாயாக என்பதாம்.

## 56. உச்சாடனஞ் செய்ய

[கிருதம், குழம்பு, கிழங்கு, பால், உரு - 108.]

**உனையே யலதோர் பரமுண் டெனவே**
**நினையே னெனையூழ் வினைநீ டுமதோ**
**கனையேழ் கடல்போல் வருகார் சமணர்**
**முனையே தெறுசண் முகவே லவனே.**

(இ - ள்.) கனை ஏழ் கடல் போல் வரு - ஆரவாரிக்கும் ஏழு சமுத்திரங்கள் போன்று விவாத யுத்தம் புரிய வந்த, கார், சமணர் முனை தெறு சண்முக - அஞ்ஞான மிகுதியினால் இருண்ட மனமுடையவராகிய சமணரின் பகை யுத்தத்தை அழித்தருளிய ஆறுமுகக்கடவுளே!, வேலவனே—, உன்னையே அல்லது - உன்னையே அன்றி, ஓர் பரம் உண்டு என நினையேன் என்னை - ஒரு பரம்பொருள் இருக்கின்றதென்று (கொஞ்சமேனும்) சிந்திக்காதவனாகிய என்னை, ஊழ்வினை நீடுமதோ - எனது முன்னை விதியானது வளர்ந்து நின்று துன்புறுத்துமோ? அதற்குக் காரணந் தான் என்ன? எ - று.



(வி - ரை.) உனையே என்பதில் உள்ள 'ஏ' பிரிநிலை. முனையே - திருஞானசம்பந்தர் சமணர் முதலியோர் கொள்ளும் பொய்வாதமாகிய பகையை மட்டும் தொலைப்பர், மற்ற பகை உண்டு எனக் கருதார்; ஆதலின் அதில் எள்ள 'ஏ' வும் பிரிநிலையாகும். பரம் - பரம்பொருள், கடவுள். நீடுமதோ என்பதில் உள்ள 'அது' பகுதிப்பொருள் விகுதியாம். சமணர் முனை தெறு சண்முகன் - குமாரக்கடவுளே திருஞானசம்பந்தராய்த் திருவவதாரஞ் செய்து சமணரோடு வாதச் சமர் புரிந்து வென்றருளினர் என்பது வரலாறு. கனையேழ் கடல்போல் வரு - வந்தச் சமணர்க் கூட்டம் மிகப் பெரிதாதலால்; வந்தவர் எட்டாயிரம் பேர். கார் - குணவாகுபெயர். கரிய மனம், அஞ்ஞானமனங் கருத்திருப்பதென்பது கவிதை வழக்காகும். "மெய்வரு போகம் ஒக்க உடனுண்டு விலையுங் கொள்ளும் பையர வல்கு லார் தம்(வேசியர், உள்ளமும்......போல............ கருகி" என்று கம்பர்பிரான் கூறியதை நோக்குக.

வருகா ரவுணர் என்றும் பாடம்.

(க - ரை.) வேலவனே! திருஞானசம்பந்தராகி வாதப்போர் புரிந்து சமணரை வென்றருளிய ஆறுமுகக் கடவுளே! உன்னையே அன்றி வேறெவரையும் கடவுளாகச் சிந்தியாத அடியேனைப் பழவினை துன்புறுத்துவதற்கு ஏது

வென்ன? அதனை ஒழிப்பதற்குரியதோர் வழியை விரைந் தருள்வாயாக வென்பதாம்.

## 57. சத்துருவைச் சங்கரிக்க

[வடை, பணியாரம், மாங்காய், தோசை, உரு - 1008.]

இரவும் பகலுந் துதிசெய் திருதாள்
பரவும் பரிசே பரிசின் றருள்வாய்
கரவுண் டெழுசூர் களையக் கதிர்போல்
விரவுஞ் சுடர்வேல் விடுசே வகனே.

(இ - ள்.) கரவு உண்டு எழு சூர் - வஞ்சங்கொண்டு யுத்தம் செய்வதற்குச் சினந்து எழுந்து வந்த சூரபன்மனை, களைய - அழிப்பதற்கவன்மேல், கதிர் போல் சுடர் விரவும் - சூரியன் போன்று பிரகாசம் படைத்த, வேல் விடு சேவகனே - வேலாயுதத்தைப் பிரயோகித்த வீரனே !, இரு தாள் - உன்னுடைய இரண்டு திருவடித் தாமரைகளையும், இரவும் பகலும் - இடைவிடாது இரவிலும் பகலிலும், துதி செய்து பரவும் - புகழ்ந்து வணங்கும், பரிசே பரிசு (ஆக) - குணமே குணமாக, இன்று (எனக்கு) அருள்வாய் - இப்போதே எனக்குத் தருவாயாக, எ - று.

(வி - ரை.) இரவும் பகலும் - இடைவிடாமையைக் குறிக்கும். கதிர்போல் விரவுஞ் சுடர்வேல் களைந்தது கரவுண்டெழு சூர். சூரியனைப் போன்று பிரகாசிக்கும் என்ற குறிப்பால் கரவுண்டெழு என்பதற்கு தேகத்தி லும் மனத்திலும் இருளை உட்கொண்டு எழுந்த சூரன் முதலியோர் என்று பொருள் கொள்ளினும் அமையும். காத்தல் - ஒளித்தல்; தன்னுள்ளிருக்கும் பொருள்களை



ஒளிப்பது இருள். இவ்விதம் கொள்ளின் இருண்ட கூட்டத் தினராகிய சூரன் முதலியோரைச் சுடர் வேலால் களைந்தது போல், அஞ்ஞான இருளை உனது மெய்ஞ்ஞான ஒளியால் களைந்தெறிவாயாக எனும் செம்பொருள் தொனியாநின்ற துணர்க.

கதிர் - ஆகுபெயர்.

(கு - ரை.) சூரியனைப்போல் ஒளி செய்யும் வேலா யுதத்தை விடுத்துச் சூரபதுமனை ஒழித்த வீரனே! நினது இரு திருவடிகளையும் இடைவிடாது எப்போதும் போற்றி வணங்கும் பேற்றினை இப்போதே அருள்வாயாக என்பதாம்.

## 58. புகழ் பெற

[பால், பொங்கல், பானகம், உரு - 1008.]

இலகுந் துடிநே ரிடையார் விழிகூ
ரலகம் பெனவே யறியா தழிகோ
கலகந் தருசூர் கதறப் பொருதே
ழுலகம் புகழ்பெற் றிடுமோ தயனே.

(இ - ள்) கலகந் தரு - உன்னுடன் போர் செய்ய வந்த, சூர் கதற பொருது - சூரபன்மன் கதறும்படி யுத் தஞ்செய்து வென்றதனால், ஏழ் உலகம் புகழ் பெற்றிடும் - ஏழு உலகத்தவரும் போற்றும் புகழைப் பெற்ற, உதயனே - கடலில் உதிக்கும் சூரியனை ஒத்தவனே!, இலகும் துடி நேர் இடையார் - பிரகாசிக்கின்ற உடுக்கை போன்ற இடையை யுடைய மங்கையரது, விழி - கண்களானவை, கூர் அலகு அம்பே என - தம்மை அடுத்தவரைத் துன் புறுத்தும் கூறிய நுனி பொருந்திய அம்புகளே ஆம் என்று,

அறியாது - உணராமல், அழிகு ஓ - அழிவேனோ? அங்ஙனம் அக் கண்களால் அழியாதிருக்குமாறு என்னைக் காப்பாற்றுவாயாக, எ - று.

(வி - ரை.) அலகு - ஆயுதப் பொதுவாகக் கொள்ளின் அலகம்பு இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகும்! அப்போது 'கூர்' என்று அடை உள்ளதால் அலகிற்கு நுனி யென்று பொருள் கொள்ளல் அவசியமின்மை அறிக. 'விழி கூர் அலகு அம்பு' என்பதனை,

"ஆச லம்புரி யைம்பொறி வாளியும்
காச லம்புழ லையவர் கண்ணேனும்
பூச லம்பு................."

எனும் கம்பர் மொழியோடு ஒப்பிட்டு நோக்குக.

கலகம் என்பதைக் கலக்கத்தின் விகாரமாகக் கொள்ளின், கலகந்தரு சூர், தேவருக்குச் சித்தக் கலக்கத்தை செய்த என்றாகும்.

உலகம் - ஆகுபெயர். சூரனின் ஆட்சி தேவலோகத்தினைமட்டு மன்றி எல்லா உலகங்களையும் பாதித்ததால் அவனை யழித்த ஆறுமுகக் கடவுளை ஏழுலகத்தவரும் போற்றினர்.

ஏழுலகம் என்பதில் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. ஏழுலகும் என்று பாடங் கொள்ளினும் நலமாகும். எதுகை கெடாது 'இலகும்' என்று முதலடியே தொடங்குதலால்.

அழிகு - எதிர்காலத் தன்மை ஒருமை வினைமுற்று.



ஓ - வினாப் பொருளது.

ஓதயன் - ஓதோதயன் என்பதின் செய்யுள் விகாரம்; ஓதம்+உதயன் = ஓதோதயன்; இப் புணர்ச்சியில் மகர மெய் கெட்டு வடமொழிப் புணர்ச்சி கொண்டது. 'ஓதமுதயன்' என்பதின் மரூஉ எனக் கொள்ளினும் அமையும். ஓதம் - கடல். ஓதம் உதயன் என்பதனை நக்கீரனாரின் திருமுருகாற்றுப்படையில் "பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு" என்பதனோடு ஒப்பிட்டு நோக்குக. முருகவேளைக் கடலில் உதயமாகும் சூரியனுக்கு ஒப்பிடுதல் ஓர் உயரிய சொல்லோவியமாகும். ஞாயிறு உதித்த உடனேயே கடல் கருமை நீங்கிப் பொன்பசுமை பெறுகின்றது. அன்பர் முருகனைச் சிந்தித்தபோது மனத்தில் அவன் எழுந்தருளுகின்றான். எழுந்தருளிய வுடன் அங்கிருந்த அஞ்ஞானமாகிய இருள் ஓடுகின்றது. ஞானமாகிய பொன்னொளி மிளிர்கின்றது. சூரியன் இருளைக் கெடுத்தல் போல் மனத்தால் நோக்குவாரின் மனவிருள் முருகன் கெடுத்தலால் தொழிலுவமை. மனத்தால் நோக்குதல் மனப்புலன் காட்சி. முருகனைக் கண்புலனால் தரிசித்தலும் எல்லையற்ற அழகு. உதய காலத்தில் கடலின் பசுமையையும் சூரிய கிரணச் செம்மையையும் காண்பது போலவே மயிலின் பசுமையையும் முருகவேளின் திருமேனிச் செம்மையையுங் காண்கின்றோம். வண்ண உவமை. இது கட்புலன் காட்சி

(சு - ரை.) போர் செய்ய வந்த சூரபதுமனை ஒழித்துப் புகழ் ஈட்டித் திகழும் குகப்பெருமானே! மங்கையர் விழிகளைக் கொல்லுந் தன்மை வாய்ந்த அம்புகளென உணராது கலங்கிக் கெடுந் தன்மையனாகிய என்னை விரைந்து வந்து காப்பாயாக வென்பதாம்.

## 59. உலகநடை யறிய

[பாயசம், வெல்லம், பாக்கு, வெற்றிலை, உரு - 108.]

மாதோ மலமா யைமயக் கவருஞ்
சூதோ வெனமெய் துணியா வெனையின்
றேதோ விருள்செய் துநிறைந் திடுவார்
தீதோ டவருள் சிவதே சிகனே.

(இ - ள்.) சிவ தேசிகனே - சிவபிரானுக்குக் குருவாய் அமைந்தவனே !, ஏதோ இருள் செய்து நிறைந்திடுவார் - நான் இன்னதென அறிய முடியாத ஏதோ ஒரு கலக்கத்தைச் செய்து என்னைச் சூழ்ந்து நிறைந்திருக்கும் மங்கையரை, மாதோ - மங்கை ரூபமோ (அல்லது), மல (மும்) மாயை (யும்) மயக்க வரும் - குற்றத்தையும் வஞ்சத்தையும் எனக்குண்டாமாறு என்னைக் கலங்கச் செய்து வருகின்ற, சூதோ - பொய் வடிவமோ, என - என்று நினைத்து, மெய் துணியாத - பொய் வடிவு, பெண் வடிவு என இரண்டனுள்ளும் இதுதான் மெய்யென்று நிஜத்தை நிச்சயிக்க முடியாத, என்னை தீது ஓட இன்று அருள் - என்னுடைய தீமை ஒழியுமாறு இப்பொழுதே அருள் செய்வாயாக, எ - று.

(வி - ரை.) மலம், மாயை, என்பவற்றில் உள்ள எண்ணும்மைகள் தொக்கன. சூழ்ந்து நிறைந்திடுவார் பலர் ஆதலின் வரைவின்மகளிராயிற்று. அவரே மயக்கஞ் செப்பவர், குலமாதர் அன்று. மேலும் வரைவின் மகளிரே ஒருவனைப் பலராகச் சூழ்ந்து கொள்வர். குலமாதோ தந்தை தாயாரால் ஒருவனுக்கு வழங்கப்பட்ட பின்னர் அவனை அடுத்து வாழ்வள், வரைவின் மகளிரைப் புணரும்



போது அவர்களது விருப்பத்தைப் பூர்த்தி செய்வதின் நிமித்தம் பலவித பாவங்களையும் பொய் பேசுதலையும் செய்ய வேண்டியுள்ளது. அதனால் 'மலம் மாயை மயக்கவரு' வென்றார். போகந் தருதலால் பெண்வடிவம் என்று தோன்றுகின்றது, மயக்கி இருள் செய்வதால் சூதுவடிவம் என்றும் நினைக்க இடமிருக்கின்றது. இச் சந்தேகம் நிகழ்வது ஒரு நாழிகையே! மீண்டும் அவர்கள் மயக்கும்போது மயங்கிப் போகத்தை விழைவதால் பெண்ரூபமே எனத் தோன்றுகின்றது. ஆதலின் உண்மை உணர்தல் அரிதாயிற்று. ஏதோ, மாதோ, சூதோ, இவற்றில் உள்ள 'ஓ' ஐயப்பொருளது.

(சு - ரை.) அடியேன் இன்னதென்றறிய முடியாத வண்ணம் என்னைச் சூழ்ந்து நிறைந்திருக்கும் மங்கையரை மங்கைரூபமோ அல்லது பொய்ரூபமோ எதுதான் உண்மை என்பதை நிச்சயிக்க முடியாத எனது தீமை ஒழியுமாறு இப்பொழுதே அருள் செய்வாயாக வென்பதாம்.

## 60. தேர்ந்துகொள்ள

[நல்லவெல்லம், நாவற்பழம், உரு - 108.]

களவும் படிறுங் கதமும் படுமென்
னளவுங் கதிர்கொண் டருள்சேர்ந் திடுமோ
இளகுங் குறமின் னிருதோள் மூலையும்
புளகம் பரவப் புணர்வே லவனே.

(இ - ள்.) இளகும் குறமின் - மென்மைத்தன்மை வாய்ந்தவளும் குறவர் குலத்துதித்தவளும் மின்னல் போன்ற அழகு வாய்ந்தவளும் ஆகிய வள்ளி அம்மையது,

இருதோள் (உம்) (இரு) முலையும் - இரண்டு தோள்களிலும் இரண்டு கொங்கைகளிலும், புளகம் பரவ - மயிர்க்குச் செறியுமாறு, புணர்வேலவனே - ஆலிங்கனஞ் செய்யும் வேலாயுதனே!, களவும் படிறும் கதமும் படும் - பிறர் பொருளைக் கவரும் கருத்தும் பொய்யும் சினமும் பொருந்திய, என்னளவும் - என்னிடத்தும், கதிர் கொண்டு அருள் சேர்ந்திடுமோ - ஒளியைத் தன்னுட்கொண்ட உனது கிருபையானது சேருமோ? சேரும் வகை அருள் செய்வாயாக, எ - று.

(வி - ரை.) களவு முதலிய தீமைகள் அருணகிரியாரிடத்தில்லையேனும் நூலைப் படிப்பவரிடத்தில் உண்டாயின் அவை தீர்ந்துய்யுமாறு இவ்விதம் அருளிச் செய்தார். வள்ளிநாச்சியாரிடத்து எல்லை இல்லா ஸ்பரிச இன்பந் தரும் இளகுந் தன்மையும், மின்னொத்த திருமேனி அழகும் உள்ளத்தை யீர்க்கும் கொங்கைகளும் முதலியனவற்றோடு அவளது காதலும் உண்டு அதனால் நீ அவளைச் சேர்க்கின்றனை. என்வயம் களவு முதலியனவே உண்டு; எத் தகுதியும் இல்லை. ஆதலின் பொலிவுடைத்தாய உன்னருள் என்னை எவ்விதம் சேரும்? என்றுய்த்துணர்க. இளகும் என்பதனைத் தோளுக்கும் முலைக்குங் கூட்டுக. இரு என்பதனை முலைக்குங் கூட்டுக. இருதோள் என்பதில் முற்றும்மை தொக்கது. புளகம் - பூரிப்பு, மயிர்சிலிர்ப்பு. ஆனந்தம் உண்டாகும்போது அது மேனி முழுதும் விநாடியில் வியாபிக்கின்றது. ஆதலின் 'புளகம் பரவ' என்றார். இத்தொடரில் உள்ள சொற்சுவை நோக்குக. மின் - உவமையாகுபெயர். ஓ - இரக்கப்பொருள்.

(க - ரை) வள்ளிநாயகியார் புளகாங்கிதம் உறுமாறு புணர்கின்ற தலைமகனே! களவு முதலியன இல்லாத



அன்பரை உன்னருள் சேர்கின்றது. என் வயமோ அவை இயல்பாக உடையன ஆதலின் நின்னருள் என்னைச் சேராதென்றறிவேன், எனினும் அஃதென்னைச் சேருமாறு அருள் செய்வாயாக வென்பதாம்.

## 61. தேசம் செழிக்க

[கற்கண்டு, பழம், கரும்பு, இளநீர், உரு - 1020.]

வாழைக் கனிமா மதுரச் சுளையே
ஏழைக் கரிதென் றிடுவா ருளரோ
பாழைப் பயிர்செய் திடுசிற் பரையின்
பேழைப் பொருளா கியவே லவனே.

(இ - ள்.) பாழை பயிர் செய்திடும் - பாழ்நிலமாகிய மூலப்பிரகிருதியின்கண்ணே ஜீவராசிகளாகிய பயிரைச் செய்தருளும், சிற்பரையின் பேழைப் பொருளாகிய வேலவனே - ஞானரூபமான சாம்பவியின் பெட்டகப் பொருள் போன்று அருமையான திருக்குமாரன் ஆகிய வேலாயுதத்தை யுடையவனே!, ஏழைக்கு - அறிவில்லாதவனாகிய எனக்கு, வாழைக்கனி (உம்) - மெய்ஞ்ஞானமாகிய வாழைப்பழமும், மா மதுரச்சுளை (உம்) - ஜீவன்முக்தி என்னும் பேரானந்தம் ஆகிய மிகுந்த இனிப்பையுடைய பலாக்கனிச்சுளையும், அரிது என்று (இரங்கி) இடுவார் (உன்னை யன்றிப் பிறர்) உளரோ - கிட்டுதற்கு அருமையானது என்று அருள் கூர்ந்து அவற்றைத் தருபவர் உன்னை அல்லாது பிறர் உள்ளாரோ? இல்லை, எ-று.

(வி - ரை.) வாழை, மா, பலா என்பவை முக்கனிகளாகும். வாழை என்னுங் குறிப்பால் சுளை என்பதனைப்

பலாச்சுளையாகப் பொருள்கொள்க. அன்றியும் 'மா மதுர' எனுங் குறிப்பால் மிகுந்த இனிப்பையுடைய சுளை பலாச்சுளை யன்றிப் பிற கனிச்சுளை இன்மை அறிக, வாழை - மெய்ஞ்ஞானம்; பலாச்சுளை - ஜீவன்முக்தி அடைந்த பின் துய்க்கும் பேரானந்தம். மா - மாங்கனியாகக் கொள்ளின் ஜீவன்முக்தி என்று பொருள் கொள்க.

பாழ் என்பது முதனிலைத் தொழிற்பெயர், பாலைநிலம்; ஐ சாரியை. பாழ் என்பதனை ஒன்றுமில்லாத மூலப்பிரகிருதியாக உருவகித்தார். பயிர் - உலகத்தில் உயிர்த்திருக்கும் ஊர்வன நடப்பன முதலிய சீவராசிகள். சிற்பரை - சிற்பரனின் பெண்பால். சித் - ஞானம். பேழைப்பொருள் - பெட்டியில் வைக்கும் அரியபொருள். அதனைப் பிறர் காணமுடியாது. ஆதலின் ஈண்டு அஞ்ஞானிகளால் அறிதற்கரிய முருகப்பிரான். 'ஓ' எதிர்மறைப்பொருளது.

(க - ரை.) பராசக்தியின் அருமைக் குமாரனே! எளியேனுக்கு மெய்ஞ்ஞானத்தையும் ஜீவன் முக்தியாகிய பேரானந்தத்தையும் என்மீது தயைகூர்ந்து அருள் செய்வாயாக. உன்னை யன்றி வேறு யார் எனக்கு அவற்றை அருள் செய்பவர்? அதனால் விரைந்து வந்து அவற்றை எனக் கருளுவாயாக என்பதாம்.

## 62. செங்கோல் செலுத்த

[வெல்லம், கதலிப்பழம், உரு - 108.]

சதிகொண் டமடந் தையர்தம் மயலிற்
குதிகொண் டமனத் தனெனக் குறியேல்
மதிகொண் டநுதற் குறமங் கைகுயந்
துதிகொண் டுமண ந் தருதூ யவனே.



(இ - ள்.) மதி கொண்ட நுதல் - எட்டாம்பிறைச் சந்திரனை ஒத்த நெற்றியினையுடைய, குற மங்கை - குறவர் மடமகளாகிய வள்ளிநாச்சியாரது, குயம் துதிகொண்டு மணந்தருள் தூயவனே - கொங்கையின் அழகைப் புகழ் செய்த வண்ணம் புணர்கின்ற பரிசுத்த மூர்த்தியே!, சதி கொண்ட - வஞ்சனையைத் தம்முட்கொண்ட, மடந்தையர் தம் மயலில் - வேசையர் சங்கத்தால் உண்டாகும் மயக்கத்தாலே, குதிகொண்ட மனத்தன் என 'குறியேல் - துள்ளுதல் செய்யும் தன்மையுடைய மனம் உடையவன் என்று எண்ணுதிருப்பாயாக, எ - று.

(வி - ரை.) சதி - வஞ்சனை; இருமனமுடைமை. வேசையர் தம்மோடு புணரும் ஆடவர்மீது அன்புடையவர் போல் பாசாங்கு செய்தல் ஒன்று; புணரும் ஆடவர்மீது உடல் தோயினும் உள்ளந்தோயாது அவர்களிடமிருந்து எல்லாச் செல்வத்தையும் அபகரித்தல் எவ்விதம் எனக்கருதுதல் இரண்டாவது. வரைவின்மகளிரோடு புணர்தலால் உண்டாவது மயல்; குலமகளோடு புணர்தலால் உண்டாவது தூய இன்பம்.

குதிகொள்ளல் - துள்ளுதல். மயலிற் குதிகொள்ளுதல்- கள்ளுண்டதனால் உண்டாகும் மயக்கத்தினால் ஒருவன் மனந் துள்ளுதலை அடைகின்றது, அதைப்போலவே வரைவின் மகளிரைப் புணர்வதால் உண்டாகும் மயக்கத்தினால் மனம் துள்ளுதலை அடைகின்றது. வரைவின்மகளிரைப் புணர்பவன் அபரிசுத்தமடைகின்றான். ஆனால் அழகினும் அன்பினும் உயிரினும் ஒத்த தனது மனைவியாகிய குலமகளோடெனின் பரிசுத்தனாகின்றான். வள்ளிநாச்சியாரைப் புணர்வதால் முருகன் தூயவனே ஆகின்றான், அப்பண்புகளை அம்மையுடைமையால். மேலும் வானம் எப்பொருள்

மீதும் தோய்வதுபோல் காணப்படினும் உண்மையில் தோய்வதில்லை. அதுபோலவே வள்ளியோடு கூடினும் முருகக்கடவுள் கூடாதவனாகிய பரிசுத்தனாகவே திகழ்கின்றான் என்றுங்கொள்க.

மதி - எட்டாம்பிறைச் சந்திரன். (மதி) 'கொண்ட,' உவம உருபு. குதி என்பது முதனிலைத் தொழிற்பெயராம். குதிகொள்ளல் ஒரேவார்த்தையாகவுங் கொள்ளலாம்.

(க - ரை) வள்ளிநாச்சியாரைப் புகழ்ந்தவண்ணம் மணம்புணர்கின்ற முருகக்கடவுளே! மாதர் மயக்கினால் துள்ளும் மனத்தையுடையவன் இவன் என்று என்னை உதாசீனம் செய்யற்க. அருள் செய்வாயாகில் மாதர் மயக்கை ஒழித்து உன்வழி படர்வேன் என்பதாம்.

## 63. செங்கோல் நடக்க

[கனி, சர்க்கரை, கற்பூரம், உரு - 1100]

தாயே யெனையா ளரிவே லரசே
காயே பொருளாய்க் கனிகை விடுமோ
பேயே னிடையென் பெறவந் தெளிதாய்
நீயே மறவா நெறிதந் ததுவே.

(இ - ள்.) தாயே - அடியேனுக்குத் தாயாயிருப்பவனே!, எனை ஆள் தனி வேல் அரசே - என்னை அடியவனாக ஆட்கொண்ட ஒப்பற்ற வேலாயுதத்தை யுடையவனே!, நீயே பேயேனிடை எளிதாய் வந்து - நான் விரும்பாதிருப்பினும் நீயே பேய்போன்றிருப்பவனாகிய என்னிடத்தே சற்குருமூர்த்தியின் வடிவங்கொண்டு சுலபமாக எழுந்தருளி, மறவா (த) நெறி தந்தது என்பெற - உன்னை மறவாதிருக்கும் மார்க்கம் அடியேனுக்கு அருள் புரிந்தது நீ என்ன பிரயோஜனம் பெறுதற்காக? (ஒன்றுமில்லை), பொருள் காயே ஆய் கனி கை விடுமோ - நீ உபதேசித்த பொருளை என் நெஞ்சு காயாக்வேற்றுப் பழுக்கும் நிலையினைக் கைநழுவ விட்டுவிடுமோ என்னமோ அறிகிலேன், எ - று.



(வி - ரை.) எல்லையற்ற குற்றஞ் செய்யினும் பொருட்படுத்தாமல் அன்பு செலுத்துபவள் தாய். எண்ணிறந்த பாவங்களைச் செய்யினும் பொருட்செய்யாது வலிய வந்து தலையளி செய்வதால் முருகக்கடவுளைத் தாயே என விளித்தார். அடிமையாக ஆட்கொள்ளும் தலைமையுடையவனாதலின் அரசன் என்றார். 'பிணங்கின்னும் நீச்ச தன்மையுடையது பேய். ஜீவராசிகளிடத்தே அன்பும் அருளும் புரியாது தீமை செய்யாத மனிதன் பேயொப்பவனாகின்றான்.

"காயே பொருளாய்க் கனிகைவிடு"

என்பதனோடு,

"இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று"

எனும் பொய்யா மொழியினோடு ஒப்பிட்டு நோக்குக.

உபதேசப்பொருளைக் காயாகக் கொள்ளுதல் - அதனைப் பக்குவமாகாத ஐயந்திரிபாடுகளை உடைய நிலையில் கொள்ளுதல்; கனியாகக்கொள்ளுதல் - பழுத்து ஐயந்திரிபாடுகள் ஒழிந்த நிலையில் கொள்ளுதல்.

(க - ரை) தாயாயிருப்பவனே! என்னை ஆட்கொண்ட தலைவனே! நான் தகுதியற்றவனாயிருந்தும் வலிய வந்து செய்த உபதேசப்பொருளை என்நெஞ்சானது ருசி இல்லாத

காய் நிலையில் ஏற்குமோ அல்லது ருசியுள்ள பழ நிலையில் கொள்ளுமோ அறியேன். ஆயினும் அது பழம்போல் சுவையுடைத்தா யிருக்கும்படி வந்து அருள்செய்வாயாக என்பதாம்.

### 64. நகரி சோதிக்க

[ கரும்பு, இளநீர், தாம்பூலம், கனி, உரு - 1008. ]

சின்னஞ் சிறியேன் சிதைவே செயினும்
பென்னம் பெரியோர் பிழைசெய் குவரோ
கன்னங் கரியோன் மருகா கழறத்
தன்ன ந் தனியென் றனையாண் டவனே.

(இ - ள்.) கன்னங் கரியோன் - மிகுந்த கருநிற முடைய திருமாலின், மருகா - மருமகனே !, கழற - நான் உன்னைப் போற்ற, தன்னந்தனி என்தனை ஆண்டவனே - மிகுந்த தனிமையை உடைய என்னை ஆட்கொண்ட தலைவனே !, சின்னஞ் சிறியேன் சிதைவே செயினும் - மிகுந்த சிறியவனாகிய நான் தமக்குத் தீமை உண்டாக்கும் தொழிலைப் புரிந்தாலும், பென்னம் பெரியோர் பிழை செய்குவரோ - மிகுந்த பெரியவர் அதனால் எனக்குக் கேடு இழைப்பாரோ ? இழைக்கார், நீயும் அதுபோல் என் பிழை பொறுத்தருள்வாயாக, எ - று.

(வி - ரை.) 'சிறியோர் செய்த சிறுபிழை எல்லாம் பெரியோராயின் பொறுப்பது கடனே' என்பதையும் சிறியேன் சிதைவே செயினும் பென்னம் பெரியோர் பிழை செய்குவரோ என்பதையும் ஒப்பிட்டு நோக்குக.



சின்னஞ்சிறுமை, பென்னம்பெருமை, கன்னங்கருமை தன்னந்தனிமை எல்லாம் மிகுதி, சிறுமை............உணர்த்தும் இருபொருட்பன்மொழிகள் ஆகும். சிதைவே செய்யினும் பெரியோர் பொறுப்பர் என்பதனை,

" கடுக்கி யொருவன் கடுங்குறளை பேசி
மயக்கி விடினு மனப்பிரிப்பொன் றின்றித்
துளக்க மிலாதவர் தூய மனத்தார்
விளக்கினு ளொண்சுடரே போன்று "

என்னும் நாலடியார் மொழியோடு ஒப்பிட்டு நோக்குக.

சிதைவு - சிதைவுக்குக் காரணம் தீமை, கேடு. ஆதலின் காரியவாகுபெயர். முருகப்பிரான் கரியோனின் மருகனாகிய வரலாறு :—திருமாலின் புத்திரிகளாகிய சுந்தரி அமுதவல்லிகள் இருவரும் முருகப்பிரானை வரிக்கவேண்டுமென்று கடுந்தவம் ஆற்றலும் பிள்ளையார் தவத்திற்கிரங்கி எழுந்தருளி 'இந்திரனுக்கு மகளாகுவை, மணம் புரிவோம்' என அமுதவல்லியாருக்கருளவும், அங்ஙனமே அமுதவல்லியார், இந்திரனை அடுத்துப் பெண்மகவாகி "நான் உன் உடன்பிறந்தானாகிய உபேந்திரனின் மகள் ; என்னை வளர்ப்பாயாக" என்றலும் அவன் மகவை ஐராவதத்திற்குக் காட்டலும் அதனை வளர்த்து வந்தது. ஆதலின் அம்மையார் தெய்வயானைஎனுந் திருநாமம் பூண்டனள். சூரசம்மாரம் முடிந்தபின்னர் இந்திரன் வேண்டத் தெய்வயானையை மணந்தருளினன். இதனால் முருகன் வாசவனுக்கும் மாலுக்கும் மருமகனாயினன்.

தனியே தனையாண்டவனே என்றும் பாடம்.

(க - ரை.) திருமால் மருகா ! சிறியோர் தமக்குக் கேடு செய்யினும் பெரியோர் பொறுப்பதுபோலவே உனக்கு நான்

தீமை செய்யினும் பொறுத்து அருள் புரியவேண்டும் என்பதாம்.

## 65. படை வெல்ல

[முத்து, பவழம், முழுநீலம், உரு - 108]

துடிபட் டமடந் தையர்சூ றையிலே
குடிபட் டிடுமென் குறைகட் டறுமோ
வெடிபட் டெழுசூர் கிளைவே ரொடுசென்
றடிபட் டிடவென் றமரும் பதியே.

(இ - ள்.) வெடிபட்டு எழு சூர் கிளை - யுத்தம் புரியும் ஆவலால் வெடிபோன்று முழங்கி எழுந்த சூரபன்மனது சுற்றத்தினர், வேரோடு அடிபட்டிட - வேருடனே படைகளால் அடியுண்டு அழிந்துவிட, சென்று அமரும் பதியே - பரிவாரங்களுடனேபோய் அவ்வசுரனை வென்று திருப்பரங்குன்றத்தில் தங்கிய தலைவனே!, துடிபட்ட மடந்தையர் சூறையிலே - மின்னுதல் பொருந்தி ஒளியுடைய மங்கையரின் மையலாகிய சுழற்காற்றினாலே, குடிபட்டிடும் - விழுங்கப்பட்டுழலுகின்ற, என் குறைகட்டு அறுமோ - எனது குறைபாடுகள் கட்டற்றுப் போகுமோ? அறிந்திலேன், எ - று.

(வி - ரை.) துடி - முதனிலைத் தொழிற்பெயர். துடித்தல் - மின்னுதல். குறை - காமக்குரோதாதிகள். சூரன் கிளையோடெழுந்தமையால் ஈண்டுச் 'சென்று' என்றதற்குப் பரிவாரங்களோடு சென்று எனப் பொருள்கொள்ளப்பட்டது. பரிவாரங்கள் - நவவீரர் முதலாயினோர். வென்றதும் திருப்பரங்குன்றத்தில் தங்கியது புராணத்தில் காண்க.



(சு - ரை.) தலைவனே! சூரனையும் அவன் கிளைஞரையும் ஒழித்து வானவரைக் காத்ததுபோலவே மாதர்மோகத்தினால் சுழலும் என்னைக் குறைபாடுகள் களைந்து விரைவில் ஆட்கொள்வாயாக வென்பதாம்.

## 66. எதிரி முறிய

[தோசை, வடை, பாயசம், பழம், உரு - 1008.]

கல்லேய் மனமுங் கணையேய் விழியும்
வில்லேய் நுதலும் பெறுமெல் லியர்வாய்ச்
சொல்லே பதமாய்த் துடிபட் டழிய
வல்லே னலனியான் மயில்வா கனனே.

( இ - ள். ) மயில்வாகனனே - மயிலை ஊர்தியாக உடைய எம்பிரானே !, கல் ஏய் மனமும் - இரங்காமையில் கல்லைப்போன்ற சித்தத்தையும், கணை ஏய் விழியும் - கூர்மையில் அம்புபோன்ற கண்களையும், வில் ஏய் நுதலும் - வளைவில் வில்லைப்போன்ற புருவங்களையும், பெறும் - உடைய, மெல்லியர் - மெத்தென்ற மேனியுடைய மங்கையரது, வாய்ச்சொல்லே - வாயினின்றும் வருகின்ற கபடவார்த்தைகளையே, பதமாய் - வாழ்விற்கு அழகானவை யெனக்கொண்டு, துடிபட்டழிய வல்லேன் அலன் யான் - நான் துடித்தலையுற்றுக் கெட்டுப் போகச் சாமர்த்தியம் உடையவன் அன்று, ஆதலின் சீக்கிரம் வந்து தடுத்தாட் கொள்வாயாக, எ - று.

(வி - ரை.) வேசையர் பொருள்மீதே மனம் வைத்துத் தம்மைச் சேரும் ஆடவர்மீது கொஞ்சமும் அன்பும் இரக்கமும் மனத்திற் கொள்ளாமையின் கல்லேய் மனம் என்

னர். வில்லேய் நுதல் - வில்லைப்போன்று வளைந்த புருவம்; வில்லைப்போன்று வளைந்த நெற்றியெனவுங் கொள்க. ஒளி வில் - பொருந்திய நெற்றி என்றால் சிறப்புடைத்தாகும். வில் - ஒளி. ஏய்-உவம உருபு. பதம் - அழகு.

(க - ரை.) பெருமானே! வேசையரின் கபடமான சொற்களால் மனத்தடுமாற்ற முற்றுத் துன்புறும் அடியேனைச் சீக்கிரம் தடுத்தாட் கொள்வாயாக வென்பதாம்.

## 67. கொலை களவு வஞ்சம் தீர

[தேங்காய், சர்க்கரை, தேன், பாக்கு, இலை, உரு - 108.]

கலைகற் றினுமென் கவிபா டினுமென்
நிலைகற் றினுமென் னினைவந் துணராக்
கொலைகற் றிடுவோர் கொடுவஞ் சகமா
மலைகட் டறவென் றருள்வாய் குகனே.

(இ - ள்.) குகனே - உயிரினங்களின் இதயக் குகையில் வசிப்பவனே! நின்னை வந்து உணராத - எப்பொருட்கும் இறைவன் என்று உன்னை வந்தடுத்து உனது பரத்துவத்தை உணர்ந்து பக்தி செலுத்தாமையாகிய, கொலை கற்றிடுவோர் - கொலைச்செயலைப் புரியக் கற்றிருப்போர், கலை கற்கினும் என் - எல்லாச் சாத்திரங்களையும் ஆசான் மூலமாகக் கற்றதனாலும் என்ன பயன்? கவி பாடினும் என் - ஆசிரியப்பா முதலிய செய்யுள்கள் பாடினாலும் என்ன பிரயோஜனம்?, நிலை கற்கினும் என் - யோக நிலையில் இவ்விதம் நிற்கவேண்டுமென்று கற்றுக் கொள்ளினும் என்ன இலாபம்?, கொடு வஞ்சகமாம் மலை - ஆதலின் அவர்களது கொடிய கபடம் பொருந்திய மயக்கமொழி



யாகிய, கட்டு அற - யான் கட்டப்பட் டிருக்கும் பந்தத்தினை அறுத்தெரிய, என்று அருள்வாய் - எப்போதுதான் அனுக்கிரகஞ் செய்வாய்?, எ - று.

(வி - ரை.) கடவுளை உணராதவர், அல்லது கடவுள் நெறியாகிய ஒழுக்கநெறியில் படாதவர் கொலைப்பாவத்தைப் புரிபவராவார் என்பதையே 'நினைவந் துணராக் கொலைகற் றிடுவோர்' என்றார்.

மலை - மலைவின் விகாரம். மலைவு - மயக்கம். முருகன் "சீவக் குகைதொறும் வீற்றிருத்" தலான் குகன் எனப்படுகின்றான்.

(க - ரை.) தலைவனே! அன்பர் இதயம் பொலிபவனே! உன்னைப் போற்றாத கொடியவர் நூல் பல கற்றும் கவி மிகப் பாடியும் யோகப்பயிற்சி செய்தும் பயனற்றவரே! அவரது மொழிகள் மயக்கந் தருவனவே ஆகும். ஆதலின் அன்னாரின் மொழிகளால் கட்டுண்டு அவஸ்தைப் படாதவாறும் என்னை விரைவில் ஆட்கொள்வாயாக வென்பதாம்.

## 68. அபசாரம் வாராமலிருக்க

[பால், பழம், பாக்கு, வெற்றிலை, உரு - 108.]

சனகா தியருக் கரியாய் தமியா
யெனகா ரணமா கவிரும் பினைநீ
கனகா சலவில் லிகளிக் கவரு
மனகா வமலா வமரர் பதியே.

(இ - ள்) கனக அசல வில்லி - பொன்மலையாகிய மாமேருபர்வதத்தை வில்லாகக் கொண்ட சங்கரபிரான்,

மனமகிழும் வண்ணம் தோன்றிய, அனகா களிக்க வரும் - மனமகிழும் வண்ணம் குற்றமில்லாதவனே ! அம அமலா - பாவமில்லாதவனே ! குற்றமில்லாதவனே ! அம ரர் பதியே - தேவசேனுபதியே !, சனகாதியருக்கும் - சனகர், சனற்குமாரர், சனந்தனர், சனுதர் எனும் முனிவர் நால்வருக்கும், அரியாய் - அருமையானவனே !, தமியாய் - தனி வடிவமா யிருப்பவனே !, நீ என்ன காரணமாக விரும் பினை - நான் தகுதியற்றவனு யிருந்தும் யாது காரணம் பற்றி விரும்பி ஆட்கொண்டாய், அதனைச் சொல்வாயாக, எ - று.

(வி - ரை.) சனகாதியருக்கு - இதில் உயர்வு சிறப் பும்மை விகாரத்தால் தொக்கது. இந் நான்கு முனிவரும் மூன்றரை கோடி கற்பம் பரமசிவன் முகத்தைப் பார்த்த பின்னரே சீவன்முக்தரானர். அங்ஙனமாயின் சிவபிரானுக் குச் சற்குருமூர்த்தியாகிய குகப்பிரானை எங்ஙனம் எளிதில் உணரப்போகின்றார். இதனுல் ' சனகாதியருக்கும் அரி யாய் !' என்றார். திரிபுர சம்மாரத்திற்காக மேருவை வில்லாகப் பரமனர் வளைத்தருளினர் ஆதலின் பரமசிவனைக் கனகாசல வில்லி என்றார். கனகாசல வில்லி - பொன் மலை போன்று ஒளி விடும் திருமேனியுடையன் என் றும் பொருள் கொள்க. " மாற்றறியாத செழும்பசும் பொன்னே " என்றார் இராமலிங்கரும். நகம் - பாவம், மலம் - குற்றம், 'அமராப்பதியே' எனவும் பாடம். அதற்கு உலகத்தோடு அமர்ந்தும் அமராதவன்போன் றிருப்பவனே என்க. இங்கு அமராத எனும் பெயரெச்சம் ஈறு குறைந்து வந்தது.

(கு - ரை) சிவபிரான் மகிழுமாறு அவருக்குக் குமாரனய் உதித்தவனே ! சனகாதியருக்கும் அருமையா யிருக்கும் நீ முற்றிலும் தகுதி யில்லாதவனுகிய என்னையும்



ஆட்கொண்டதின் காரணம் என்ன? அதனை அடியேனுக் குச் சொல்வாயாகவென்பதாம்.

## 69. அற்பரை நீங்க

[ பழம், பால், பொங்கல், உரு - 108.]

கல்லே னயலார் கவியைப் பொருளாய்ப்
புல்லே னவர்வாழ் வுபரிந் தருள்வாய்
வல்லே யினிவந் தருளா யணியா
நில்லே னிறைநெஞ் சொடுவே லரசே.

(இ - ள்.) வேல் அரசே - வேலாயுதந் தரித்த தலை வனே !, அயலார் கவியை கல்லேன் - உன்னைத் தவிர்த்து இதர தெய்வங்களைக் குறித்துப் பிறர் பாடும் பாடல்களைக் கற்கமாட்டேன். அவர் வாழ்வு பொருளாய் புல்லேன் - இந்திரன் முதலிய புறதெய்வங்களின் வாழ்வை எத்தகைய போக இன்பஞ் செறிந்ததாயிருப்பினும் ஒரு பொருளாக மதித்து அத் தெய்வங்களைப் புகலிடமாக அடைய மாட் டேன், (எனினும்), நிறை நெஞ்சொடு நில்லேன் - உன் னைக் (குறித்துச் செய்யுந் தியானத்தால்) நிறைந்த மனத் துடனே நிற்பதற்குந் தகுதியற்றவனு யிருக்கின்றேன், (ஆகலால்), அருளாய் - அருள்புரியா திருக்கின்றனை, இனி புரிந்து - இனியேனும் என்னை விரும்பி, அணியாக வல்லே வந்து அருள்வாய் - அடியேனுக்கும் நலம் உண்டாமாறு சீக்கிரம் வந்து அருள் செய்வாயாக, எ - று.

(வி - ரை.) 'பொருளாய்' என்பது மத்திமதீப மாகக் 'கல்லேன்' என்பதனேடும் 'புல்லேன்' என்பத னேடும் கூட்டுக. நிறைநெஞ்சு - வினைத்தொகை. அதனை,

உருபும் பயனும் உடன் தொக்க தொகையாகக் கொள்ளின் சிந்தனையில் நிறுத்துதலையுடைய மனம் எனப் பொருள்படும்.

மனம் நில்லேன் இறை என்று ஓதினர் உனது தியானத்தைச் செய்தலாகிய மனத்தொடு சிறிது நேரமும் நில்லேன். எனப் பொருள்படும்.

(க-ரை.) தலைவா! புரந்தரன் முதலானோரைக் குறித்துப் பிறர் பாடும் பாடல்களை ஒரு பொருளாகக் கற்க மாட்டேன், அவர்களது போகம் மிகுந்த வாழ்வையும் நச்சமாட்டேன். எனினும் உன்னைத் தியானிக்குந் தொழிலைப் புரியாதவனாயும் இருக்கின்றேன்; அதனால் என்மீது அருளாதிருக்கின்றனை; இனியாகிலும் எனக்கு நன்மையுண்டாமாறு விரைந்து வந்து அருள் செய்வாயாக என்பதாம்.

## 70. மறுதெய்வந் தொழாதிருக்க

[பரிமளகந்தம், பழம், புஷ்பம், உரு - 1008.]

**மஞ்சைப் புரையார் மதிதோன் றுதலால்**
**பஞ்சைப் பயில்தே வரொடிம் பர்களி**
**னெஞ்சைப் பிரியாய் நிகழ்மா மதியின்**
**பிஞ்சைப் புனையும் பெருமான் மகனே.**

(இ-ள்.) நிகழ் மா மதியின் பிஞ்சை - ஒளி செய்கின்ற அழகிய இளம்பிறைச் சந்திரனை, புனையும் பெருமான் மகனே - கபர்த்தம் என்னும் சடாபாரத்தில் அணியும் சிவபிரானது குமாரனே!, மஞ்சை புரை ஆர் மதி தோன்றுதலால் - (மழை பொழிந்து குளிர்ச்சி செய்யும்) மேகத்தைப்



போன்று (இன்பம் பொழிதல்) நிறைந்த விவேகம் (நின் கருணையால்) தோன்றுதல் மூலமாக, பஞ்சை பயில் - எளிமையில் பஞ்சைப்போன்ற, தேவரொடு இம்பர்களின் - தேவர் இவ்வுலகத்தவர் இவர்களிடமிருந்தும், நெஞ்சை பிரியாய் - அடியேனது மனத்தைப் பிரித்தருள்வாயாக, எ - று.

(வி-ரை.) பயில், உவம உருபு. பிஞ்சு - இளங்காய், இங்கு இளமை மாத்திரமாய் நின்றது. மதியின் பிஞ்சு - பிஞ்சு மதியினை (ஒற்றைக்கலை) எனப் பிரித்துக் கூட்டுக. பெருமான் - பெருமையை ஆள்பவன்.

(க-ரை) சிவபிரானது அருமைப் புத்திரனே! விண்ணுலகத்தார் மண்ணுலகத்தார் இவர்களது வாழ்வில் ஆசை வைத்துள்ள என் மனத்தை நிறைந்த அறிவு அளித்து அதன் மூலமாகப் பிரித்து ஆட்கொள்வாயாக வென்பதாம்.

## 71. விதிப்படி பணிவிடை செய்ய

[தேங்காய், பழம், சீனிசர்க்கரை, இலை, உரு - 1008.]

**விதிவந் தனைசெய் விமலன் கழலே**
**கதியென் றடைவார் கடனா வதுவே**
**பதிகண் பிணியோ டழிநல் குரவும்**
**மதிசஞ் சலமும் மண்ணாய் விடுமே.**

(இ-ள்.) விதி (உம்) வந்தனை செய் - அயனும் போற்றிப் புகழ்கின்ற, விமலன் கழலே - குற்றமற்ற குகப்பிரானது வீரகண்டாமணி பொருந்திய திருப்பாதங்களையே, கதி என்று அடைவார் - புகலிடம் என நினைந்து சேர்வாருக்கு, கடன் ஆவது - (முருகப்பிரானால் ஏற்படும்)

முறைமை ஆவது, பிணியொடு பதி கண் - நோயினால் புதைக்க கண்ணும், அழி நல்குரவும் - பெருமையை அழிக்கும் வறுமையும், மதி சஞ்சலமும் - மனோவேதனையும், மண்ணாய்விடும் - குறிகளும் இன்றி அழிந்துவிடும், எ - று.

(வி - ரை.) விதி என்பதில் உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. கடன் - முறைமை பதி கண் - வினைத்தொகை; பதித்தல் - புதைத்தல்; பதிகண் - இடுங்கிய அல்லது சுருங்கிய கண் என்றுங் கூறுக. பிணியோடு, 'ஓடு' கருவிப்பொருள். அழிநல்குரவு - "குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்" மணிமேகலை. ஒருவனுக்குப் பெருமை ஆகிய "தொல்வரவுந் தோலுங் கெடுக்கும்" நல்குரவு; திருக்குறள். அதிவன் பிணி என்றும் பாடம்; மிகக் கொடிய நோய் என்பது பொருள்.

(க - ரை.) ஆறுமுகக்கடவுளின் திருவடியே புகலிடம் என்று சேர்வாருக்கு நோயும் வறுமையும் மனோவேதனையும் இல்லாமற் போகும் என்பதாம்.

## 72. குருவுக்குப் பணிவிடை செய்ய

[பழம், அதிரசம், பாக்கு, இலை, உரு - 108.]

என்னே ரமுநின் னிருதாண் மலரைப்
பொன்னே யெனயான் புனையப் பெறுமோ
அன்னே யமுதே யயில்வே லரசே
கொன்னே பிறவிக் குறைபெற் றிடினே.

(இ - ள்.) அன்னே - (அன்புடைமையில்) தாயைப் போன்றவளே !, அமுதே - (இன்பமளிப்பதில்) அம்ருதத்



தைப் போன்றவனே ! அயில் வேல் அரசே - கூரிய வேலாயுதத்தை உடைய தலைவனே !, கொன்னே பிறவிக்குறை - பயனற்றதாகிய இழிந்த பிறவியை, பெற்றிடின் - இனியும் அடைவேனாயின், எந்நேரமும் - இன்றுபோலவே இடைவிடா தெப்பொழுதும், நின் இருதாள் மலரை - உன்னுடைய திருவடித்தாமரை மலர்கள் இரண்டினையும், பொன்னே என - பொன்முடியைப் போலக் கருதி, யான் - என் சென்னி, புனையப் பெறுமோ - அணிவதற்குரியதாமோ? கூறுவாயாக, எ - று.

(வி - ரை.) எதுகை நோக்கி 'எந்நேரம்' என்பது 'என்னேரம்' ஆகியது. யான் எனும் 'முதல்' சினையாகிய சிரசுக்கானதால் முதலாகுபெயர். இடவாகு பெயராகக் கொள்ளின் மனம் என்றாகும்; அப்போது, மனம் புனையப் பெறுமோ, என் மனம் சிந்தித்தற்குரியதாமோ என்று பொருளாகும். பாதத்தைச் சிரசில் அணிதலால் பொன் என்னுங் கருவியின் பெயர் அதன் காரியமாகிய பொன் முடிக் கானதால் கருவியாகுபெயர். யான் என்பதனை மனம் எனக் கொண்டால் பொன் 'முடி' ஆகாமல் பொன்னே போன்று அரிதான பொருள் என்று கொள்க. குறைப்பிறவி எனப்படுவது செய்யுள் நோக்கிப் பிறவிக்குறை என நின்றது.

"புழுவாய் பிறக்கினும் புண்ணியா உன்னடியென் மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டும்"— (திருநாவுக்கரசு)

எனும் வாகீசர் மொழியையும் "என்பு பெறாத இழிபிறவி எய்திடினும் நின் அன்பு பெறுகை" எனும் கம்பர் பிரானது மொழியையும் ஈண்டு ஒப்பிட்டு நோக்குக.

(க - ரை.) தாயையும் அமுதத்தையும் போன்ற இறைவனே! இனியும் இழிபிறவி நான் எடுப்பதாயினும் இன்று போலவே இடைவிடாது எப்போதும் நினது திருவடிகளைப் பொன்றாது வென்ற என் சிக அணியும் பேற்றினை அருள்வாயாக என்பதாம்.

## 73. குருவுக்கு விதிப்படி பணிவிடை செய்ய

[அன்னம், பால், அதிரசம், கற்கண்டு, உரு - 1008.]

அருளைத் தருநின் வடியிற் பணியார்
மருளைச் சிதையார் மதிகெட் டவர்தாம்
குருளைத் தசையிற் குருவா வினவும்
பொருளைத் தெளியப் புகறே சிகனே.

(இ - ள்.) குருளைத் தசையில் - என்னுடைய இளம் பிராயத்திலேயே, குருவா(க) - சற்குருவாக எழுந்தருளி, வினவும் பொருளை தெளிய புகல்தேசிகனே - யான் கேட்ட மெய்ப்பொருள் விசேஷங்களைத் தேற்றம்பட உபதேசித்த குருமூர்த்தியே!, மதி கெட்டவர் தாம் - உன்னைப் போற்றுதற்காகவே இருக்கும் அறிவு அழியப்பெற்றவரே, அருளைத் தரும் - பணிகின்றவர்க்குக் கிருபை புரிகின்ற, நின் அடியில் பணியார் - உன்னுடைய திருப்பாதங்களில் விழுந்து பணிய மாட்டார். (ஆதலின்), மருளை சிதையார் - தம்முடைய மயக்கத்தை ஒழிக்கும் தகுதியுடையவராகார், எ - று.

(வி - ரை.) மருள் - பரிமேலழகர் "பொருளல்லவற்றைப் பொருளென் றுணருமருள்........" எனுந் திருக்குறளுக்கு "மெய்ப்பொருளல்லவற்றை மெய்ப்பொருளென்



றுணரும் விபரீத உணர்வு........" என்று உரை கூறிய பின் விசேடவுரையில் சொன்னதாவது :—

"அவ்விபரீதவுணர்வாவது மறுபிறப்பும், இருவினைப் பயனும், கடவுளு மில்லையெனவும்; மற்றும் இத்தன்மையவுஞ் சொல்லும் மயக்கநூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்கெனத் துணிதல் குற்றியை மகன் என்றும், இப்பியை வெள்ளியென்றும், இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதலும். அது மருள், மயக்கம், விபரீதவுணர்வு, என்பன ஒருபொருள் கிளவி." இதனை நன்றாக உணர்க.

மதிகெடுதல் - தீயோரிணக்கம், அழுக்காறு முதலியன. தாம் - தேற்றப்பொருளது. "குருளை தசையிற........தேசிகனே" என்பதற்குப் பாலப் பருவத்திலேயே சிவபிரானுக்குக் குருவாக அமைந்து அவர் வினவிய பிரணவப் பொருளை அவருக்குத் தெளியப் புகல் தேசிகனே என்று பொருள் கொள்ளினும் அழகுடைத்தாகும்.

அடியிற்பணியா (திருவடிகளை வணங்காத) என்றும், மதிகெட்டவர்தம் என்றும்; குருபோல் வினவும் என்றும் இக்கவியில் பாடபேதங்களுண்டு.

(க - ரை.) எனது இளமைப் பருவத்திலேயே தத்துவார்த்தங்களை உபதேசித்தருளிய சற்குருமூர்த்தியே! நினது திருவடிகளைப் பணியாதவர் மயக்க உணர்வை ஒழிக்காது வருத்த முறுவர்; ஆனால் அடியேன் அம் மதிகெட்டவரின் பிரிந்து நின் திருவடி பணிந்தவனாய்ப் பேரானந்த அனுபவம் பெற்றவன்; அது உன்னருள் திறத்தால் ஆயது என்பதாம்.

## 74. தொண்டராக

[கரும்பு, இளநீர், கதலிப்பழம், உரு - 108]

தொண்டா கியநந் துயர்தீ ருமருந்
துண்டா கியுமென் றுலைவாய் மனனே
வண்டார் குழல்வள் ளிமணந் தருளும்
தண்டா யுதவேள் சரணந் துதியே.

(இ - ள்.) மனனே - நெஞ்சமே!, தொண்டு ஆகிய - தொண்டர்களாகிய, நம் துயர் - நமது துன்பம், தீரும் மருந்து உண்டாகியும் - முருகன் திருவடியெனும் மருந்து நமக்கு இலபித்தும், என்றும் உலைவாய் - உலக இன்பங்களை இச்சித்து அழிகின்றனை இனியேனும், வண்டு ஆர் குழல் வள்ளி - வண்டுகள் நிறைந்து மொய்க்கும் கூந்தலையுடைய வள்ளியம்மையாரை, மணந்து அருளும் - சேர்தலைச் செய்கின்ற, தண்டாயுத வேள் - தண்டம் என்னும் ஆயுதத்தையுடைய குகப்பெருமானது, சரணம் துதி - திருவடியைத் துதி செய்வாயாக, எ - று.

(வி - ரை.) தொண்டு - அதனையுடைய தொண்டனுக் கானதால் குணவாகுபெயர். நம் - தம்மையும் தம் மனத்தையும் உடன்படுத்திக் கூறினர். தீரும் - காரியப் பொருட்கண் வந்த பெயரெச்சம். குழலில் வண்டு மொய்த்தற்குக் காரணம் அதில் உள்ள பூவினாலும் அதன் இயற்கை மணத்தினாலும். துதியே என்பதில் உள்ள 'ஏ' அசைநிலை.

(கு - ரை) மனமே! நமது பிறவித்துயர் தீருவதற்குக் காரணமாகிய திருவடி மருந்து கிடைத்திருப்பினும் உலக இன்பங்களில் ஆசை வைத்து அழிகின்றனை. இனியாகிலும் முருகன் திருவடி துதிசெய்வாயாக என்பதாம்,



## 75. கிருபையால் பதம்பெற

[கரும்பு, தோசை, கடலை, வடை, உரு - 1008.]

அழியா நிலைதந் தருள்சே வலனே
விழியா லுணர்வார் விதமே புகல்வாய்
பழியார் புகழார் பழிநண் பிகழா
ரொழியா ரொழியா ருலகியா வையுமே.

(இ - ள்.) அழியா (த) நிலை தந்தருள் சேவலனே - முக்தியைப் பக்தருக்கு ஈந்தருளுகின்ற சேவற்கொடி உயர்த்திய தலைவனே!, உணர்வார் - நிலைபெற்றன இவை நிலையாதன இவை என்ற மெய்ப்பொருளுணர்வுடையவருக்கு. விழியால் - அருட்பார்வையோடு, விதமே புகல்வாய் - அவர் உணர்வின் அளவிற்கேற்ப மெய்ப்பொருளை உபதேசிப்பவனே!, (நினது உபதேசத்தால் பயன்பெற்றவர்), உலகு யாவையும் பழியார் - உலகத்தினர் செயல்கள் எல்லாவற்றையும் பழித்தல் செய்யார், (எனினும்). அவற்றைப் புகழார் - புகழ்தலும் செய்யார், பழி நண்பு இகழார் - துட்டர் தூற்றும் பழியையும் நட்பினர் சூட்டும் புகழையும் இகழ்தல் செய்யார். (என்றால்) ஒழியார் ஒழியார் - தமது நிலை பேற்றினின்றும் நீங்குதல் செய்யார், எ - று.

(வி - ரை) சூரபதுமனே முருகப்பிரானுக்கு மயில் வாகன மானதோடு சேவற்கொடியாகவும் அமைந்தான் என்பதை,

" மணிகிளர் வரைய தொன்று மரகதப் பிறங்க லொன்றுந்
துணையடி சிறகர் பெற்றச் சூற்புய லழிய வார்த்துத்
திணிநில விசும்பின் மாட்டே சென்றெனச் சேவ லோடு
பிணிமுக வுருவாய் வந்து பெருந்தகை முன்னம் புக்கான். "

“அக்கண மெம்பி ரான்ற னருளினா லுணர்வு சான்ற
குக்குட வுருவை நோக்கிக் கடிதினீ கொடியே யாக
மிக்குயர் நமது தேரின் மேவினை யார்த்தி யென்னத்
தக்கதே பணியி தென்னா வெழுந்தது தமித்து விண்மேல்.”

“செந்நிறங் கெழீஇய சூட்டுச் சேவலங் கொடியென் றாகி
முந்நூறு மனத்திற் செல்லு முரண்டகு தடந்தேர் மீப்போ
யந்நில வரைப்பி னண்ட மிடிபட விருமே றட்க
வந்நியும் வெருவ வார்த்து மற்றவ னூற்ற தன்றே.”

என்னுங் கந்தபுராணச் செய்யுள்களானறிக.

விழியால், ‘ஆல்’ என்னும் உருபு உடனிகழ்ச்சிப் பொருளது. ‘ஒழியார் ஒழியார்’ எனும் அடுக்குத் தேற்றப் பொருளது அல்லது இடைவிடாமைப்பொருளது.

(சு - ரை.) இறைவனே! நினது உபதேசத்தால் பயன் பெற்றவர் உலகத்தைப் பழித்தலும் புகழ்தலும் செய்யார்; பழி புகழ்களைக் கருதார் தமது ஸ்திரநிலையினின்றும் எக்காலும் நீங்கார் அதுபோலவே என்னையுஞ் செய்வாயாக வென்பதாம்.

## 76 தெய்வ நீதியாக

[வெல்லம், தேங்காய், வெண்பசும்பால், உரு - 108.]

துனிநா ளும்விடா துதொடர்ந் தபல
னினிநா னணுகா மையியம் பினனால்
பனிநாண் மதிசூ டிபணிந் துதொழும்
தனிநா யகனா கியசண் முகனே.



(இ - ள்.) பனி நாள் மதி சூடி - தண்மை பொருந்திய முதல் நாளிற் பிறந்த ஒற்றைக்கலையினுடைய இளஞ்சந்திரனைச் சடையில் சூடிய சிவபிரான், பணிந்து தொழும் - வணங்கிப் போற்றிய, தனி நாயகனாகிய - ஒப்பற்ற தலைவனாகிய, சண்முகன் - ஆறுமுகக்கடவுள், துனி நாளும் விடாது தொடர்ந்த - நோயை இடைவிடாமல் நாள்தோறும் உண்டாக்குவதில் தவறாது பின்தொடர்ந்துள்ள, பலன் - நல்வினை தீவினைகளின் பயனாகிய சென்மத்தைச் (சற்குருமூர்த்தியாக எழுந்தருளி), இனி நான் அணுகாமை இயம்பினன் - இனி நான் நெருங்காதவாறு உண்மைப்பொருளை உபதேசம் செய்தருளினன், எ - று.

(வி - ரை.) ஆல் - அசை. சங்கரன் முருகக்கடவுளைப் பிரணவப்பொருள் உபதேசம் பெறுவதற்குப் பணிந்து தொழுதனன். சிவபிரானே பணியப்பெற்றதால் முருகனுக்குத் தனித்தலைமை வந்தது. அணுகாமை, ‘மை’ ஈறுடைய எதிர்மறை வினையெச்சம்.

(சு - ரை.) சிவபெருமான் பிரணவப்பொருள் உபதேசம்பெறும் நிமித்தம் வணங்கித் துதித்த பெருமை வாய்ந்த அண்ணலே! சற்குருமூர்த்தியாக எழுந்தருளி இடைவிடாத நோயைத் தரும் பிறப்பை மீண்டும் நான் எய்தாதவண்ணம் மெய்ப்பொருள் உபதேசம் செய்தருளினன் என்பதாம்.

## 77. ஞானம் பெற

[இட்டிலி, பணியாரம், கடலை, உரு - 108.]

ஞானந் தனைநின் றுநடத் தவிடா
மோனந் தனையென் றுமொழிந் திடுமோ.
ஆனந் தநடத் தனளித் தருளும்
மானந் தனிவேன் மயில்வா கனனே.

(இ - ள்.) ஆனந்த நடத்தன் - சிதம்பரத்தில் ஆனந்தக் கூத்தியற்றும் சிவபிரான், அளித்தருளும் - பெற்றெடுத்த, மானம் தனி வேல் மயில்வாகனன் - பெருமையும் ஒப்பற்ற வேலும் உடையவனும் மயிலை வாகனமாக உடையவனு மாகிய முருகக்கடவுள், ஞானந்தனை நின்ற நடத்த - மெய்ப்பொருளுணர்வைச் சமாதியில் நிலைத்துநின்று இயங்குதற்கு, விடா (த) மோனந்தனை - நீங்காத பேசாத நிலையை நான் பெறுமாறு, என்று - எப்பொழுது, (சற்குருவாக வந்து), மொழிந்திடுமோ - உபதேசித் தருளுவானோ? அறிகிலேன், எ - று.

(வி - ரை.) சிதப்பரம் - ஞானகாசம், பொன்னம்பலம். மோனம் - மௌநம்; வடமொழி. விடா என்பது 'த' ஈறு குறைந்த பெயரெச்சம். ஞானந்தனை, மோனந்தனை - எனும் இரண்டினும் உள்ள 'தன்' சாரியை. 'ஓ' இறங்கற் பொருள்.

(க - ரை.) சிவபெருமானின் அருமைக் குமாரன் ஞான எல்லையாகிய பேசாத நிலையை நான் அடையுமாறு எனக்கென்று வந்து உபதேசித்தருளுவானோ என்பதாம்.

## 78. பரமார்த்த மடைய

[-தோசை, வடை, தேன், பழம், உரு - 1008.]

மதமுஞ் சினமும் வளருந் தருவே
சதமென் றுணருஞ் சனனுக் கெளிதோ
ததமுந் தியருள் கனிவித் திடுவேல்
பதமுஞ் சுரமும் பதமே பெறலே.



(இ - ள்.) ததம் உந்தி அருள் கனிவித்திடு - அன்பர் தன்பால் செய்த குற்றத்திற்காக எழுந்த கோபத்தைத் தள்ளி அவன் அருளைக் கசியச் செய்கின்ற, வேல் - வேலாயுதனது, பதமும் சுரமும் பதமே பெறல் - திருவடிகளையும் அவற்றினைப் பெறும் அருநெறியையும் செம்மையாகவே பெறுவது, மதமும் சினமும் - காயெனும் அகங்காரமும் அதன் பழம் ஆகிய கோபமும், வளரும் - தன்னகத்தே வளரச் செய்கின்ற, தருவே - உடலாகிய மரத்தையே, சதம் என்று உணரும் - நிலையானது என்று நினைந்துள்ள, சனனுக்கு - கேவலமான சன்மத்தையுடையவனாகிய எனக்கு, எளிதோ - சுலபமாகுமோ? அன்று, எ - று.

(வி - ரை.) 'வளரும்' எனுங் குறிப்பால் 'தரு' உடல் ஆகவும் 'மதம்' காயாகவும், 'சினம்' பழம் ஆகவும் கொள்க. அத்தகைய மரத்தைச் சத்தியம் என நம்பியவர்க்குத் துன்பத்தை யன்றி இன்பத்தை விளைக்காது. சனன் - பிறவியையுடையவன். திருவடிகளைப் பெறும் மார்க்கம் எளிதில்லை ஆதலின் தன் பிறவியைப் பழிக்கும் குறிப்புடைய 'கேவலமான' என்னும் பொருளுடைய சொல்லொன்று கூட்டிப் பொருள்கொள்ளுதல் நலம். சநநம், வடமொழி. வேல், ஆகுபெயர். ஓ - எதிர்மறை அல்லது இரங்கற்பொருள்.

(க - ரை) தன்னையே நம்பியிருக்கும் அன்பர் செய்யும் குற்றம் நோக்குதலால் உண்டாகும் கோபத்தைத் தள்ளி அருளைப் பெருக்குகின்ற இறைவனது திருவடிகளை அடையும் மார்க்கத்தை அகங்காரமும் கோபமும் வளர்க்கும்

உடல் பொருந்திய இந்த இழிபிறப்பினன் செவ்வனே பெறுதல் எளிதாமோ என்பதாம்.

## 79. பஞ்சபூதங்களை அறிய

[பச்சரிசி, வெல்லம், தாம்பூலம், உரு - 1008.]

அய்யா முடலூண் மயமா யுளதால்
அய்யா ருறு மறிவித் தருள்வாய்
செய்யா முருகா திகழ்வே லரசே
அய்யா குமரா அருளா கரனே.

(இ - ள்.) செய்யா - (பொன்னுருக்குப்போன்று) சிவந்த மேனியடைத்தவனே!, முருகா!—, திகழ் வேலரசே - ஒளிசெய்யும் வேலாயுதத்தையுடைய தலைவனே!, அய்யா!- ஐயனே!, குமரா!—, அருளாகரனே - அருளுக்குறைவிடம் ஆனவனே!, அய்யாம் உடல் - (எவ்வளவு நாள்தான் இருக்கும் என்ற துணிவுறுத்தாத) சந்தேகநிலை வாய்ந்த உடல், ஊண்மயமாய் உளது - உணவுக்காரியமாத்திரமாய் உள்ளதாம், அய்யாறு ஆறு உம் - முப்பத்தாறு தத்துவங்களையும் நீ அன்று எனப் போக்கி, அறிவித்து அருள்வாய் - என்னுடைய சுயரூபத்தைக் காட்டி அறிவிப்பாயாக, எ - று.

எதுகை நோக்கி ஐயமாம், ஐந்தாறும், ஐயா என்பவை முறையே அய்யாம் என்றும் அய்யாறும் என்றும் அய்யா என்றும் விகாரப்பட்டன. ஐந்தாறு - 30 ஆறு சேர்த்தால் 36. ஆகரம் - உறைவிடம். தத்துவங்கள் 36 என்னும் விவரத்தை 47 - ஆம் செய்யுள் உரையிற் காண்க. இச் செய்யுளில் 'அய்யாவுடலூண்' என்றும் 'அய்யாறையும் நீ' என்றும் பாடங்களுண்டு.



(கு - ரை.) தலைவா! உடல் உணவு மயமாயிருத்தலால் அது நான் அல்ல; முப்பத்தாறு தத்துவங்களும் நான் அல்ல; அவற்றிற்கும் வேறான எனது சுயரூபத்தை அறிவித்தருளவேண்டும் என்பதாம்.

## 80. குருவாக

[செங்கழுநீர்ப்பூ, சிறுபயறு, பழம், உரு - 1008.]

நவியென் றிடுகண் மடவார் நனிகேள்
செவியென் றயில்வேள் புகழ்சென் றிலதோ
கவியென் றவன்வார் கழல்பெற் றிலதோ
ரவியென் றவன்வாழ் புவியென் றியதே.

(இ - ள்.) நவ்வி யென்றிடு கண் - மருட்சியால் பிணைமான் கண் போன்றுள்ளது என்று சொல்லப்படுகின்ற கண் உடைய, மடவார் - மாதரது ஆடல்பாடல் முதலியனவற்றை, நனி கேள் - மிகவும் ஆசையுடன் கேட்கும், செவி - என்னிரு செவிகளிலே, அயில் வேள் - வேலாயுதத்தையுடைய முருகப்பிரானது, புகழ் - பக்தர் போற்றிக் கூறும் புகழுரைகள், என்று (ம்) சென்றிலதோ - என்றைக்காகிலும் நுழைந்ததில்லையோ? (ஆம்), கவி என்று - ஞான பண்டிதனே என விளித்து, அவன் வார் கழல் பெற்றிலதோ - முருகப்பிரானது பெரிய வீரக்கழலை அணிந்த திருவடிகள் என் வாயால் போற்றப் பெறவில்லையோ? (ஆம் ஆதலின் என்னுடல்), ரவி என்றவன் வாழ் புவி அன்றியது - (அன்பரின் மனவிருளை ஞான ஒளியால் அகற்றுங் காரணத்தால் ஞான) சூரியன் எனப்படுகின்ற தலைவன் கோயில்கொண்டுள்ள க்ஷேத்திரத்தை நாடியது, எ - று.

(வி - ரை.) எதுகை நோக்கிக் கல்வி என்பது 'கவி யாக' நின்றது. சந்தம் நோக்கிப் பெற வென்பது பெற்று என நின்றது. அயில், கவி, மடவார் எல்லாம் ஆகுபெயர்கள். 'புகழ் சேர்த்திடுமோ' என்றும் பாடம்; (குமரவேளின்) புகழைச் சேர்க்குமோ? என்பது பொருள். "கவியென்று வார் கழலும் பெரிய கவிகொண்டுறு தாள் களர்சார்புறவே" என்றும் பாடம். அதற்குக் "கவிகளென்றுள்ளவர் புகழு கின்ற சிறந்த அழகு பொருந்திய திருவடிமலரை யடைதற்கு" என்று கூறுவர்.

(க - ரை.) எனது காதுகள் அவன் புகழைக் கேட்கவும், வாய் அவன் கழலைப் பாடவும், உடல் திருக் கோயிலை வணங்கும் தன்மை யுடையனவாயின என்பதாம்.

## 81. தானே குருவா யிருக்க

[சர்க்கரை, கடலை, தாம்பூலம், உரு - 108.]

பெரியா ரெனினும் புலையோ ரெனினுஞ்
சிறியோ ரெனினுந் தெளிவோ ரவரே
குறியோ ரெனினுங் குருவா வருள்வா
னெறியோ டொழுகும் நிலைபெற் றிடினே.

(இ - ள்.) குறியோர் - தன்னை அணுகுவார் குணம் செய்கை இவற்றில் மிகவும் குறுகியவராயினும், (அனைவருக்கும்), குருவா(க) அருள்வான் - குருவாக அமைந்து அவர்களுக்கு அருள் புரிபவனாகிய குகப்பிரானை நெருங்குகின்ற, நெறியோடு ஒழுகும் நிலை பெற்றிடின் அவர் - நல்ல வழியில் இயங்கும் நிலையைப் பெறுவாராயின் அவர், பெரியோரெனினும் - குடிப்பிறப்பில் பெரியவராயினும்,



புலையோர் எனினும் - அந்த நற்குடிப்பிறப்பில்லாத கீழ்மக்கள் எனப்படுபவராயினும், சிறியோர் எனினும் - கல்வி, செல்வம் இன்மையால் சிறியவராயினும், தெளிவோர் - முருகனைத் துதிப்பதாலும் அவன் தாளைச் சிந்திப்பதாலும் தமது சுயரூபத்தை உணர்வதற்குத் தகுதி உடையவராவார், எ - று.

(வி - ரை.) அறிவின்றெனில் "பெரியோரெல்லாம் பெரியவரல்லர்." அறிவுடையாராயின் "சிறியோரெல்லாஞ் சிறியவரல்லர்." புலையோர் - கீழ்மையைச் செய்பவர்; கொலை களவு முதலியனவும், ஊன் கள் அருந்துதலும், சிற்றினஞ் சேர்தலும், பெரியோர்ப் பழித்தல் முதலியனவும் செய்தலே கீழ்மை எனப்படும். குறியர் - குள்ளர்; ஈண்டு நற்குண நற்செய்கைகளில் குறுகியவர். நெறியோடு, 'ஓடு' உருபு மயக்கம். குருவா வருவா னென்றும் பாடம்.

(க - ரை.) தன்னை வந்தடைபவர் எவ்வளவு குறுகியவராயினும் குருவாகி அருள்புரியும் முருகப்பிரானை அடையும் மார்க்கத்தில் நிலைநிற்பவர் நற்குடிப் பிறப்புடையவராயினும் திருவடித்தியான விசேஷத்தால் தம்மைத்தாம் உணரும் தகுதியுடையவராவார் என்பதாம்.

## 82. பக்தி செய்ய

[தேங்காய், பழம், உரு - 108.]

பத்திக் கயலே வளிநின் பதமுஞ்
சித்திக் கயலே னெனநின் னமதே
புத்திக் கடலே பொருவே லரசே
முத்திக் கனியே முனிபுங் கவனே.

(இ - ள்.) புத்திக்கடலே - மெய்ஞ்ஞானமாகிய சமுத்திரமே!, பொரு வேல் அரசே - யுத்தஞ்செய்வதற்குரிய வேலாயுதத்தையுடைய தலைவனே!, முத்திக்கனியே - முக்தி வடிவமாகிய பழமே! முனி புங்கவனே - தவத்தோருக்குச் சற்குருமூர்த்தியாக விளங்கும் மேலவனே!, பத்திக்கு அயலேன் - நின்னைப் பக்திசெய்யுங் காரியத்திற்குப் புறம்பாயிருக்கின்றேன், (ஆதலின்), நனி நின் பதம் சித்திக்கு அயலேன் - மிகவும் உன்னுடைய திருவடிகளைப் பெறுந் தொழிலுக்குப் புறம்பாயிருக்கின்றேன், எனல் திண்ணமதே - என்று சொல்லுவது துணிவாகும், எ - று.

(வி - ரை.) பதமும் என்பதில் உள்ள 'உம்' இசை நிறை. முனி, காமம் முதலியனவற்றை முனிந்தவன், தவத்தோன், அல்லது மானஞ் செய்வதால் முனிவன் எனவுங் கூறுப. அயலாதெனுந் திண்ணமதே என்றும் பாடம்.

(க - ரை.) முருகப்பிரானே! உனது பக்தியைப் புரியாததால் எங்ஙனம் உன் திருப்பாதம் 'பெறமுடியும் என்பதாம்.

## 83. மகா தேசிகனுக

[ஏழு பழம், இருபது வடை, உரு - 1020.]

பேயா கிலு நன் றதிலும் பிறிதென்
றேயா தனைவந் தடிமைத் தொழில்கொண்
டோயா தெனை நீ யொழியத் தகுமோ
வாயா ரமுதே மயில்வா கனனே.

(இ - ள்.) மயில்வாகனனே - மயிலை வாகனமாகவுடையவனே!, வாய் - நினது நாமம் பரவும்போது வாயி



னுக்கு, ஆர் அமுதே - இனிப்பால் நிறை அம்ருதம் எனத் திகழ்பவனே!, பேயாகிலும் நன்று - பிசாசேனும் இவனினும் நற்குணமுள்ளதாகும், அதிலும் பிறிது என்று - பிசாசுத் தன்மையினும் இவனது தன்மை பேதமுடைத்தென்று, ஏயாது - (நினைத்தலை மனத்தே) பொருந்த விடாது, அன்னை வந்து - தாயைப்போல் நீயே எழுந்தருளி, அடிமைத்தொழில் - எனது தொழும்பை யேற்று, ஓயாது - நீங்காது, என்னை நீ ஒழியத்தகுமோ - அடிமையாகிய என்னைக் காத்தல் செய்யாது நீ என்னைவிட்டு நீங்குஞ் செய்கை நெறியுடைத் தாமோ? அன்று, எ - று.

(வி - ரை.) கொன்றன்ன இன்னாசெய்யினும் பொறுத்தல் பெரியோர் கடன். அடுத்தவர் தீமைகளே புரியும் 'குறியோ' ராயினும் அவர்கள்பால் இரங்குதலே அபயமேன்மையாகும். அங்ஙனமிருக்கப் 'பேயாகிலும் நன்று' என்று நீ கைவிடல் தகுதி அன்றென்று முருகப்பிரானிடம் வாதிக்கின்றார். ஏய்தல் - பொருந்தல். அன்னை என்னை என்பவற்றின் இடைக் குறைகளே 'அனை,' 'எனை,' என்பன. ஏயாதெனை வந்து என்றும் பாடம்.

(க - ரை.) இறைவா! இவன் பேயினுந் தீயவன் எனக் கைவிடாது என் னடிமைத்தொழிலை ஏற்றுக் காத்தல் உன் கடன் என்பதாம்.

## 84. கடவுள் துணையாயிருக்க

[பணியாரம், பால், பழம், தேங்காய், உரு - 108.]

மிகவுங் கொடியேன் விதிகுன் றிடவந்
திகமும் பரமும் பெறவென் றிசைவாய்
சுகமுங் ககமுந் தொடர்வேல் கொடுமுச்
சகமுந் தனிகாத் தருள்சண் முகனே.

(இ - ள்.) சுகமும் - (தம்மை இம்சித்த சூரபதும சம்மாரம் நடைபெறுவதால் தேவர்கள் கொண்ட) இன்ப வுணர்ச்சியும், சுகமும் - (கழுகு, பருந்து முதலிய) பறவைக் கூட்டமும், தொடர் - பின்தொடரத்தக்க, வேல் கொடு - வேலாயுதத்தால், முச்சகமும் (சொர்க்க மத்திய பாதாளமென்ற) மூன்று லோகங்களையும், தனி காத்தருள் சண்முகனே - ஒருவனாகவே நின்று பாதுகாத்தருளும் ஆறு திருமுகங்களை யுடையவனே!, மிகவும் கொடியேன் - முக்திநெறி அறியாத மிகுந்த மூர்க்கனாகிய என்னுடைய, விதி - ஊழ், குன்றிட - அழியுமாறு, வந்து - எழுந்தருளி, (உனது உபதேசத்தால்), இகமும் பரமும் - இம்மை மறுமைப் பயன்களை, பெற என்று இசைவாய் - நான் அடையுமாறு எப்பொழுது திருமனஞ் செய்வாயோ? அறிகிலேன், எ - று.

(வி - ரை.) கொடியோன், வினையாலணையும் பெயர். விதி - பிறவிக்கேதுவாகிய நன்மையும் தீமையும். இரண்டும் முக்திக்குப் பகைகளாம். இவை மருளினால் பிறக்கின்றன. 'விதி' மாய வேண்டுமெனின் அதன் காரணமாகிய மயக்கமும் ஒழியவேண்டியது. 'இகம்' 'பரம்,' ஆகுபெயர்களாம். சுகம், பால்பகா அஃறிணை; ஈண்டுப் பலவின்பாற் பொருளது. கொடு, மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு.

(கு - ரை.) வேலாயுதத்தால் மூன்று லோகங்களையும் காக்கும் தலைவனே! மிகவுந் தீயவனாகிய எனது பிறவிக் காரணமாகிய ஊழைக் கெடுத் தகற்றச் சற்குருமூர்த்தியாக எழுந்தருளி இம்மை மறுமைப்பயன்களை அடியேன் பெறுமாறு எப்போது திருவுள்ளங் கொள்ளுவாயோ வென்பதாம்.



## 85. கடவுளை ஏவல்கொள்ள

[தேங்காய், பழம், உரு - 108.]

நசையன் பிலர்பா னயவா தொழியின்
வசையுண் டெனுமவ் வழிநின் றருள்வாய்
விசையம் பெறுசூர் வெருவப் பொருதெண்
டிசையும் புகழத் திகழ்வே லவனே.

(இ - ள்.) விசயம் பெறு சூர் வெருவ - வானவருடன் பொருது வென்ற வெற்றி பெற்றிருக்கும் சூரபன்மன் பயந்து நடுங்கும் வகையில், பொருது எண் திசையும் புகழ திகழ் - அவனோடு போர்புரிந்து (வென்றமையால்) எட்டுத் திக்கிலும் உள்ளவரும் போற்றுமாறு விளங்குகின்ற, வேலவனே - வேலாயுதத்தை யுடையவனே!, நசை (உம்) அன்பு(ம்) இலர்பால் - (உயிரினங்களைப் பாதுகாத்தல் வேண்டும் என்ற ஆவற்பெருக்காகிய) அருளும், (குடும்பத்தினர் சுற்றத்தினர் இவர்க்கு அயலாய ஏனையோர்பாலும் செலுத்தும்) அன்பும் இல்லாதவரை, நயவாது ஒழியின் - (அருளுடைய மேலோர் 'இவர் அன்பு பெறுதற்குத் தகுதியுடையவர் அன்று' என்று) நன்மை புரியும் விருப்பத்தினின்றும் நீங்குவாராயின், வசை உண்டு - அவர்களுக்குப் பழி உண்டாகும், என்னும் அவ்வழி நின்று அருள்வாய் - என்று அறிவுடையோர் காட்டும் அந்த நெறியைப் பற்றி நின்றுவது என்பால் அருள்புரிவாயாக, எ - று.

(வி-ரை.) இல்லறம் புகுவோர் அன்பும் அருளும் கொண்டொழுகுவாராயின் வீடுபேற்றிற்குரியவராவார் என்பதை ஈண்டுணர்க.

பொருள்பெற்ற அருளுடையோர்க்கும் அருளும் அன்பும் இன்றியமையாததாலும் 'அன்பு' எனுங் குறிப்பாலும் நகைக்கு அருள் என்று பொருள் கூறினும் மிகவும் சிறப்பாகும். திசை, திசையில் உள்ளவர்க்கானதால் இடவாகுபெயர். 'விசயம்' என்பது எதுகை நோக்கி 'விசையம்' என நின்றது. இலர்பால், எட்டாம் வேற்றுமை; இரண்டாம் வேற்றுமைப் பொருட்கண் வந்த உருபுமயக்கமாம்.

(சு-ரை.) வானவரை வென்றி கொண்ட பெருமை வாய்ந்த சூரபதுமனைப் பொருது வென்றமையால் மிகு புகழ்பெற்றுத் திகழும் முருகப்பிரானே!, அன்பும் அருளும் இல்லாதவர் அருள் பெறுதற்கு உரியரல்லர் என்றும் அருளுடைய மேலோர் நன்மை புரியும் கடமையினின்றும் வழுவினாராயின் அவ்வருளுடையோர்க்குப் பழியுண்டாகும்' என்று அறிவுடையோர் காட்டும் அந்த நெறியைக் கடைப்பிடித்தாவது அடியேனுக்கு அருள்புரிவாயாக வென்பதாம்.

## 86. கற்பகத்தரு பெற

[பொங்கல், மாவு, புதுமலர்கள், உரு - 1008.]

**உறுகற் பகமென் றுனையே யடைவே**
**னிறுகற் பகைவற் கிதமோ துவனோ**
**தெறுதற் சிலைகொண் டெயில்செற் றிடுபூண்**
**டறுகட் பணியன் தருபுத் திரனே.**



(இ-ள்.) தெறு கல்சிலை கொண்டு எயில் சென்று - விரோதிகளை அழிக்கின்ற மேருகிரியாகிய வில்லால் திரிபுரத்தை அழித்து, இடு பூண் தறுகண் பணியன் - அணிவதற்குத் தகுந்த ஆபரணமாகிய சினமும் வீரமும் கொண்ட பாம்பையுடைய சிவபிரான், தரு புத்திரனே - பெற்றெடுத்த திருமகனே!, உன்னையே உறு கற்பகம் என்று அடைவேன்- உன்னையே வேண்டும் பொருள்களும் வரங்களும் தரும் தன்மை பொருந்திய கற்பகத்தருவென்று எண்ணி அடைந்தவனாகிய யான், இறு - (ஒருகாலத்தில்) அழியும் தன்மை பொருந்திய, கல் பகைவற்கு இதம் ஓதுவேனோ - மலைகளுக்கெல்லாம் விரோதியாகிய இந்திரனை இனியமொழிகள் கொண்டு புகழ்வேனோ? புகழேன், எ-று.

(வி-ரை.) கற்பகம் - விரும்பியவற்கு விரும்பிய பொருளைக் கற்பிப்பது, அளிப்பது; இது தேவதருக்கள் ஐந்தனுள் ஒன்று; இதர தருக்களாவன:—அரிசந்தனம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம். முருகனைக் கற்பகம் என்றது, எப்பொருளும் எவ்வாறும் விரும்பிய அன்பர்க்கு விரும்பியவாறே அவன் அருளுவதால். அடைவேன், வினையாலணையும் பெயர்.

கல் பகைவன் - இந்திரன்; ஒரு காலத்தில் மலைகள் எல்லாம் சிறகு பெற்றிருந்தமையின் அவை பறந்து தங்கும் இடங்களை நாசம் செய்துவந்தன. உயிரினங்களைக் காப்பது நிமித்தம் இந்திரன் வச்சிராயுதத்தால் மலைகளின் சிறகுகளை அறுத்தெறிந்தனன். இந்திரனைக் கூறினமையால் உபலக்ஷணமாக அயன் அரி இருவர்களையும் புகழேன் எனக் கொள்ளுக.

ஸ்வர்க்கமும் அதன் தலைவனுகிய இந்திரனும் அவன் பாதுகாப்பிலுள்ள கற்பகமும் அழியுந் தன்மை வாய்ந்தன வாகலின் அவற்றை விடுத்து அழியாதவனுகிய முருகனையே புகழ்வேன் என்பதையும் உணர்க.

'கொண்டு.' மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு. அயில் - திரிபுரம், மதில், இரும்பு, வெள்ளி, பொன் இம் மூன்றால் அமைந்த மதில்களைப் பெற்றவையே திரிபுரம்.

(க - ரை.) முருகப்பிரானே! நீயே வேண்டிய வரங் கள் கொடுக்கும் வள்ளலாயிருக்க உன்னை அடையாது அழியுந் தன்மை வாய்ந்த சொர்க்கத்திற்குப்போக அழி பவன் ஆகிய இந்திரனைப் போற்றுவேனே, போற்றே னென்பதாம்.

## 87. கவடுதீர சுவாமி பார்வையாயிருக்க

[வடை, பணியாரம், மாம்பழம், உரு - 108.]

கள்ளம் படுகட் கடையார் க்டைதே
ருள்ளம் படலென் றகலக் களைவாய்
பள்ளம் படுநீ ரெனவே பரிவின்
வெள்ளம் படுநல் வழிவே லவனே.

(இ - ள்) பள்ளம்படு - பள்ளத்திற் பாய்ந்து அகப் பட்டுக்கொள்ளும், நீர் எனவே - புனலைப் போல, நல்வழி பரிவு இனிமை வெள்ளம் - நல்ல நெறியில் ஒழுகும் பக்தரது அன்பெனும் இனிமை பொருந்திய வெள்ளத்தில், படு வேலவனே - சிக்கிக்கொள்ளும் வேலாயுதனே !, கள்ளம் படு - வஞ்சனையுள்ள, கண் கடையார் கடை - கடைக்கண்



ணுடைய வரைவின்மகளிரின் தலைவாயிலையே, தேர் உள்ளம் படல் - நாடுதலைத் தேர்கின்ற என் மனத்தால் நான் அழிந்து போதலை, என்று அகலக் களைவாய் - எப்பொழுது அகன்று போமாறு ஒழிப்பாயோ? அறிகிலேன், எ - று.

(வி - ரை) கள்ளம் படுகட்கடை. - பார்ப்பவருக்கு ஆசை யூட்டி இழுத்து அவர்களுக்குப் பொருள் நஷ்ட மும் நோய் முதலியனவுஞ் செய்வதால். கட்கடை - இலக்கண முடையது; கடைக்கண் இலக்கணப்போலி. வரைவின்மகளிரது தலைவாயிலை அடைவதே அழி விற் கேதுவாகும், ஆதலின் அவ்விதம் அடைந்து, அழி யாமற் காக்கவேண்டுமென்று பிரார்த்திக்கின்றார். கடை என்பதை ஏழனுருபாகக் கொள்ளின் அவரிடத்து, இவர் தான் தெய்வம் அல்லது உயிர் என்று தேர்ந்து மனம் நணுகுதல் என்று பொருள் கொள்ளுக. நல்வழி - அதில் படர்வோராகிய பக்தருக்கானதால் இடவாகுபெயராம். பள் ளத்தில் பாய்ந்து வெள்ளம் அகப்படுதல் போன்றே அன்பி னுல் பகவான் அகப்படுவான் என்பதால் தொழிலுவமை யாகும்.

மாதரின் போகத்தில் பதியும் மனத்தைப் பக்திமன மாக்குபவர்க்கே மெய்ஞ்ஞானம் அரும்பி ஜீவன்முக்தி ஏற்படும் என்பதை உய்த்துணர்க.

(க - ரை.) பள்ளத்தில் பாய்ந்து அகப்படும் வெள் ளம் போல் அன்பர் பக்தியாகிய வலையிற் படுபவனுகிய தலைவனே! விலைமாதர்மீது என் மனம் சென்று நான் அழிவுறுது என்னைத் தடுத்தாட்கொள்வீராக என்பதாம்.

## 88. பெண்ணாசை தீர

[பால், பொங்கல், பழம், தாம்பூலம், உரு - 108.]

வள்ளைக் குழைமங் கையர்சிங் கியிலே
கொள்ளைப் படுமென் குறைதி ருமதோ
வெள்ளைத் தனிமால் விடையன் புகழும்
பிள்ளைப் பெருமா ளெனும்பெற் றியனே.

(இ-ள்.) வெள்ளை தனி மால் விடையன் - வெண்மையும் உவமையின்மையும் பெருமிதமும் பொருந்திய எருத்துவாகனம் உடைய சிவபிரான், புகழும் பிள்ளைப் பெருமான் என்னும் பெற்றியனே - போற்றும் பிள்ளைப் பெருமாள் என்று கூறப்படும் தன்மையுடைய இறைவனே!, வள்ளை குழை மங்கையர் சிங்கியிலே - வள்ளைக்கொடித் தண்டு போன்றுள்ள தோடணிந்துள்ள காதுகளையுடைய விலைமாதரது மோகமென்னும் நஞ்சினாலே கொள்ளைப்படும் என் குறை - சூறையாடப்பட்டு மருண்டுள்ள எனது மனக் குறையானது, தீருமதோ - நீங்கக் கூடியதோ? நீங்கும் வழி காட்ட வேண்டும், எ - று.

(வி-ரை) குழை - குழையைத் தாங்கும் ஸ்தானமாகிய காதுக்கானதால் தானியாகுபெயர். என் - அது முதலாகிய உடல் உள்ளே இருக்கும் மனதிற் கானதால் முதலாகுபெயர்.

(கு-ரை) சிவபிரான் போற்றும் பிள்ளைப் பெருமாளே! விலைமாதரது மோகத்தால் மயக்குண்ட மனக்குறை தீரக் கூடியதோ தீரும் வழி காட்டி யருள்வாயாக வென்பதாம்.



## 89. தன்னையடுத்தோர் மாயை யகல

[அதிரசம், பால், அன்னம், தாம்பூலம், உரு - 108.]

வளையுஞ் சகமா யைமயக் கில்விழுந்
துளையுந் துயரின் னுமுணர்ந் திலையே
வளைகொண் டபிரான் மருகா வடுசூர்
களையுஞ் சினவெங் கதிர்வே லவனே.

(இ-ள்.) வளைகொண்ட பிரான் மருகா - சங்கைத் திருக்கரத்திலேந்திய கடவுளாகிய திருமாலின் மருமகனே!, அடுசூர் களையும் சினம் வெம் கதிர் வேலவனே - வானவரைத் துன்புறுத்தும் சூரபன்மனைக் கொன்ற கோபமும் கொடுமையும் ஒளியும் ஒருங்கே பொருந்தப்பெற்ற வேலாயுதத்தையுடைய தலைவனே!, வளையும் - அகங்கார மமகாரங்களாகிய அபிமானரூபமாக என்னைச் சுற்றிலுஞ் சூழ்ந்துள்ள, சக மாயை மயக்கில் - உலகமாயை என்னும் மருள் (ஆகிய சேற்றின்கண்), விழுந்து உளையும் - விழுந்து (அழுந்தித்) துயருறுகின்ற, துயர் - என் கஷ்டத்தை, இன்னும் உணர்ந்திலையே - இன்னுந் தெரிந்துகொள்ளாதிருக்கின்றனையே? என்றன்று, எ - று.

(வி-ரை.) வளை - திருமாலின் சங்கு. பாஞ்சசன்யம். பிரான் - எப்பொருட்குமிறைவன், கடவுள். சினமும் வெம்மையும் முருகப்பிரானுக்குரியன; அவற்றை அவன்கொண்ட வேலின்மீ தேற்றிக் கூறினர்; உபசாரவழக்கு. விடுசூர் என்றும் பாடம், எதிர்த்து வந்த சூரபதுமன் என்பது பொருள்.

(கு-ரை.) திருமால் மருகா! சூரபன்மனைக் கொன்று வானவரைப் பாதுகாத்தவனே! உலகமயக்கமாகிய சேற்றில் விழுந்து அழுந்தி வருந்தும் என் துன்பத்தை இன்னமும்

அறிந்திலையே ; அது நன்றன்று ; உடனே உணர்ந்து என்னைப் பாதுகாப்பாயாக வென்பதாம்.

### 90. பழவினை நீக்க

[சர்க்கரை, பொங்கல், உரு - 108.]

பண்டே தொடர்பற் றொடுசுற் றமெனும்
வெண்டே ரைமகிழ்ந் துவிழித் திடவோ
கண்டே குறமங் கைதனைக் களவில்
கொண்டே கடிதே கியகொற் றவனே.

(இ - ள்.) குறமங்கைதனை - குறக்குலத்து உதித்தவளாகிய வள்ளிநாச்சியாரை, கண்டு களவில் ஏ கொண்டு - தினைப்புனத்தில் கண்டு களவொழுக்க முறைமையாலே மனைவியாக ஏற்று, கடிது ஏகிய கொற்றவனே - விரைவாகச் சென்ற வெற்றியுடைய தலைவனே !, பண்டே தொடர் பற்றொடு - அநாதிகாலந்தொட்டு என்னைப் பின்தொடர்ந்து வருகின்ற அகங்கார மமகாரங்களுடன் சேர்ந்து, சுற்றம் என்னும் வெண்டேரை மகிழ்ந்து - பந்துக்கள் என்று கூறப்படுங் கானலிடத்தே சந்தோஷப்பட்டு, விழித்திடவோ - என்னுடைய நெஞ்சம் நோக்குதலை உடையதாயிருக்கலாமோ ? அவ்விதம் விடாமல் விரைவாகக் காப்பாற்றுவாயாக, எ- று.

(வி - ரை.) வெண்டேர் - (வெண்தேர்) பேய்த்தேர், கானல். களவொழுக்கம், பரிமேலழகர் உரையில் கூறப்படுவது:—"களவாவது பிணி மூப்பு இறப்புக்களின்றி என்று மொருதன்மையராய் உருவுந் திருவும் பருவமுங் குலனுங் குணனும் அன்பும் முதலியவற்றால் தம்முள் ஒப்புமை யுடையவராய தலைமகனுந் தலைமகளும் பிறர் கொடுப்ப



வும் அடுப்பவுமன்றிப் பால்வகையால் தாமே யெதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது."

(சு - ரை.) தலைவனே! நான் எனது எனும் அபிமானங்களுடனுஞ் சுற்றத்தாருடனும் கூடி மகிழ்ந்திருக்க என்னை விடுதல் தகுதி அன்று, ஆகலின் விரைவாக என்னைத் தடுத்தாட் கொள்வயாக வென்பதாம்.

### 91· சர்வமும் நன்றாயிருக்க

[தேங்காய், கடலை, தேன், பழம், உரு - 1020.]

பொன்னா வல்கெடப் பொழியும் புகழோ
ரின்னா ரினியா ரெனவெண் ணுவரோ
துன்னார் கிளைவே ரறவே தொடுவேல்
மன்னா பொதுவாய் மழையும் பெயுமே.

(இ - ள்.) துன்னார் கிளை வேர் அற தொடு வேல் மன்னா - பகைவரும் அவரது உறவினரும் முதலற்றுப்போமாறு தொடுத்த வேலாயுதத்தையுடைய இறைவனே !, மழை பொதுவாய் பெயுமே - மேகமானது அனைவர்க்கும் பொதுவாக மழையை பெய்கின்றதன்றோ ?, (அதுபோலவே), பொன் ஆவல் கெட பொழியும் புகழோரும் - இரப்போர்க்குச் செல்வ ஆவல் ஒழியுமாறு அதைத் தருகின்ற புகழ் படைத்தவரும் (செல்வத்தை அனைவர்க்கும் பொதுவாக ஈவதல்லாது), இன்னார் இனியார் என எண்ணுவரோ - இவர் பகைவர் இவர் நட்பினர் என்று ஆராய்வாரோ ? அன்று. அதுபோலவே என்னையும் நீ கருதுதல் வேண்டும், எ - று.

(வி - ரை.) துன்னார்கிளை, உம்மைத்தொகை. கிளை, உவமையாகுபெயர் ; மரத்தின் கிளை போன்று தழைத்

துச் சூழ்ந்திருப்பவர், சுற்றத்தினர். மழை என்னும் காரியம் அதன் காரணமாகிய மேகத்திற்கானதால் காரியவாகுபெயர்.

(க - ரை.) இறைவனே! உலகில் உள்ளவரில் இவர் நல்லவர் இவர் கெட்டவர் என்று பாகுபாடு செய்யாது அனைவர்க்கும் மேகம் மழைபொழிதல் போலவே புகழுடையோரும் இவர் பகைவர் இவர் நட்பினர் என்று ஆராயாது அனைவர்க்கும் பொதுவாகப் பொன்னாசை கெடும் வகையில் வழங்குவர். அதுபோலவே என்திறத்திலும் குணத்தை ஆராயாது விரைவாகவந்து அருளவேண்டும் என்பதாம்.

## 92. சர்வமு மொன்றுய்க் காண

[பழம், தேன், பால், கனி, உரு - 100,000.]

பொறியும் புலனும் புதிதும் முதிதும்
குறியுங் குணமுங் குலமுங் குடியும்
நெறியும் பரிசொன் றுமிலா நிலையா
னறியுந் தரமோ வயில்வே லவனே.

(இ - ள்.) அயில் வேலவனே - கூரிய வேலாயுதத்தையுடைய இறைவனே!, பொறியும் - மெய்வாய் முதலிய ஐந்து இந்திரியங்களும், புலனும் - ஊறு ஓசை முதலிய ஐந்து விடயங்களும், புதிதும் - இன்றுள்ள புதியனவும், முதிதும் - முன்னிருந்த பழையனவும், குறியும் - சிறந்த அடையாளங்களும், குணமும் - சத்துவம் முதலிய முக்குணங்களும், குலமும் - உயர்வு தாழ்வு கற்பிக்கும் சாதிகளும், குடியும் - உயர்வும் இழிவும் கற்பிக்கும் குடிப்பிறப்பும், நெறியும் - ஒருவன் இச்சித்ததைக் கூட்டுவிக்கும் வழியும், ஆகிய பரிசு - ஆகிய வெவ்வேறு பாகுபாடுகள் உடைய குணங்கள், ஒன்



றும் இல்லா நிலை - ஒரு சிறிதும் இல்லாத மெய்ந்நிலையானது, யான் அறியும் தரமோ - யான் உணரும் தகுதி யுடைய தாமோ? நீயே சீக்கிரம் அந்த நிலையினை உணர்த்தி அருள வேண்டும், எ - று.

(வி - ரை.) பரம்பொருளே தானாக அமைதலே மெய்ந்நிலையாகும்.

(க - ரை.) இறைவனே! இந்திரியம் முதலியன வெல்லாம் மாயையின் காரியங்கள் ஆகலின் மெய்ந்நிலை ஆகா; அதனை உணர்ந்து இன்பவடிவமாகவே திகழ நீ அருள் செய்ய வேண்டும் என்பதாம்.

## 93. அடைக்கலம் பெற

[அன்னம், பாயசம், அதிரசம், கரும்பு, உரு - 1020.]

என்னே ரமதோ தெரியா திறனும்
அன்னே ரமதொன் றுகா தெனமுன்
சொன்னேன் மனனே துவலோ துவலோ
தன்னேர் குகனற் சலசச் சரணே.

(இ - ள்.) மனனே நாம் இறல் எந்நேரமோ அது தெரியாது - நெஞ்சமே! நாம் மரணம் ஆதல் எப்பொழுதோ அக்காலம் அறிகிலோம், அந்நேரமது ஒன்று ஆகாது என முன் சொன்னேன் - அப்போது (நற்கதி பெறுதற்கு வேண்டிய முயற்சிகள்) ஒன்றும் இயற்றுதல் அசாத்தியம் என்பதை முன்னமே உனக்கு அறிவுறுத்தியிருக்கின்றேன், (அதனால் இச்சமயம்), தன் நேர் குகன் - தன்னைத் தானே நிகர்த்த முருகக்கடவுளது, நல் சலசம் சரண் துவலோ துவலோ - சிறப்புப் பொருந்திய செந்தாமரையை

ஒத்துள்ள திருவடிகளை விரைவாக மனம் நெருங்கப் பெறு வாய், மனம் நெருங்கப் பெறுவாய், எ - று.

(வி - ரை.) எதுகை நோக்கி, எந்நேரம், அந்நேரம் என்றிருக்க வேண்டியவை 'என்னேரம்,' 'அன்னேரம்,' ஆகின்றன.

என்னேரமதோ தெரியாது இறல் நாம்
அன்னேரமது ஒன்று ஆகாது :—

மரண நாள் நெருங்குங் காலத்துச் சித்தசுவாதீனமின்மை யாலும் போதிய காலமும் இன்மையாலும் ஒரு காரியமும் ஆகாதென்றார். இவ்வியலாமையையே "எய்ப்பென்னை வந்து நலியும் போதங் கேதுநா னுன்னை நினைக்கமாட் டேன்" என்று பெரியாழ்வார் செவ்விதாகச் சொன்னார். அன்று செய்வதற்குப் பதிலாக இப்போதே செய்துவிட வேண்டும். அவ்வாழ்வார் இதற்கு அப்பாசுரத்திலேயே "அப்போதைக் கிப்போதே சொல்லிவைத்தேன் அரங்கத் தரவணைப் பள்ளியானே" என்று திருவாய் மலர்ந்தருளிய தையும், திருவள்ளுவர்,

"நாச்செற்று விக்குள்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும்"

என்பதனையும்,

"............வாழ்நாள்....................
உலவாமு னொப்புர வாற்றுமின் யாரு
நிலவார் நிலமிசை மேல்"

"புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
யின்னினியே செய்க வறவினை—இன்னினியே
நின்றா னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்றா னெனப்படுத லால்"

எனும் நாலடியார் மொழிகளையும் ஒப்பிட்டு நோக்குக.



துவலோ துவலோ - விரைவுப்பொருள் அடுக்கு. 'ஓ' அசைநிலை. துவல்தல் - விரைதல், துவல் - விரைவு; ஈண்டுத் துவல் என்பதோடு தியானிப்பாய் அல்லது மனம் நெருங் கப் பெறுவாய் என்ற யுக்தமான மொழி கூட்டிப் பொருள் கொள்க.

சலசம் நீரில் பிறப்பது; ஈண்டுத் தாமரைக்குக் காரண இடுகுறிப்பெயராகியது.

(க - ரை.) நெஞ்சமே! நமக்கு இறுதிக்காலம் எப் பொழுது நேரும் எனத் தெரியாது; அப்போது கதிபெறும் முயற்சிகளுள் ஒன்றும் புரிய முடியாது; ஆதலின் நேரமும் சக்தியும் இருக்கும் இப்போதே முருகன் திருவடித் தியானம் விரைந்து புரிவாயாக என்பதாம்.

## 94. பெரியோராக

[தேங்காய், பழம், சீனி, வெல்லம், உரு - 108.]

தெரியத் தெரியச் செயலுற் றிடுமுன்
துரியப் பொருளைச் சொலுநா ளுளதோ
கரிபெற் றிடுமின் கணவா குறமின்
பரியப் பெரிதும் பணியுத் தமனே.

(இ - ள்.) கரி பெற்றிடும் - இந்திரனின் வாகன மாகிய ஐராவதயானை வளர்த்தெடுத்த, மின் கணவா - மின் னல் போல் ஒளியும் துவளுந் தன்மையும் வாய்ந்த திரு மேனியுடைய தெய்வயானையாரின் கணவனே!, குறமின் பரிய பெரிதும் பணி உத்தமனே - குறக்குடியில் வளர்ந்த வள்ளிநாச்சியார் தன்பால் இரக்கங் கொள்ளுமாறு மிகவும் அவள் திருவடிகளில் பணிகின்ற பெருமைக் குணமுடைய வனே!, தெரிய தெரி அச் செயல் உற்றிடு முன் - (இப்

படித்தான் என்று பிறர்) அறிவிக்கத் தெரிந்து கொள்ளும் அம் மரணகால நிகழ்ச்சியானது என்பால் நிகழ்வதற்கு முன்னமேயே, துரியப் பொருளை - துரிய பூமியின்கண்ணே திகழ்கின்ற மெய்ப்பொருளை, சொல்லும் நாள் உளதோ - அடியேனுக்கு நீ உபதேசித்தருளும் நாளும் உள்ளதோ? உபதேசிக்கும் திருநாள் எப்போது நேரும்? - எ - று.

(வி - ரை.) முன் கவியில் 'இறல் நாம் அந்நேரம்' என்ற தொடரால் ஈண்டுவரும் 'அச் செயல்' என்பதற்கு மரணகால நிகழ்ச்சி எனப் பொருள் கொள்வதாயிற்று. 'அ' எனும் சுட்டு பிரசித்திப்பொருளது.

துரியபூமி, ஞானபூமி ஏழனுள் நான்காவது என்றுவது ஏழாவது என்றுவது ஆகும். நான்காவது சத்துவாபத்தி, ஏழாவது துரியம். சற்குருமூர்த்தி செய்யும் உபதேச வலிமையால் மெய்ப்பொருள் உணர்ந்து பரம்பொருளே தானாகும் ஜீவன்முக்திநிலை. இன்னும் ஞானபூமி முதலியவற்றை விரிவாகத் தமிழ் வேதாந்த நூல்களில் விரிவாகக் காண்க.

(க - ரை.) தெய்வயானையாரும் வள்ளிநாச்சியாரும் இன்புற இயங்கும் இறைவனே! மரண வேதனையுறும் நாளுக்கு முன்னதாகவே விரைந்து வந்து உபதேசஞ் செய்து துரியப்பொருளை நான் உணருமாறு அருள்வாயாக வென்பதாம்.

## 95. தடுத்தாட்கொள்ள

[வெல்லம், சர்க்கரை, பழம், உரு - 108.]

மடிமைப் படினும் மயலுற் றிடினும்
அடிமைக் குரியா ரருள்சே ருவரே
குடிமைக் கிலதோர் கொடிவெற் பிணியிற்
படிமைப் புயலே பரிவா யினியே.



(இ - ள்.) குடிமைக்கு இலது ஓர் கொடி - உனது தேவ குடிப்பிறப்பிற்கு ஒவ்வாத குறக்குலத்தில் வளர்ந்தவளாகிய ஒப்பற்ற வள்ளியம்மையினது, இணை வெற்பின் படி மைப் புயலே - இரண்டு கொங்கைகளாகிய மலைகளின்மேல் படியும் படியான கருத்த மேகமே!, அடிமைக்கு உரியார் - உனக்கு அடிமைத்தொழில் புரிதற்கு உரியவர், மடிமைப் படினும் மயல் உற்றிடினும் - வறுமை யுற்றாலும் (பொருள் உற்றக்கால், நிலையாத செல்வத்தை நிலையெனக் கருதும்) மருள் உற்றாலும், அருள் சேருவரே - நினது அருளை அடைதற்குரியவர்தான், (ஆதலின்), இனி பரிவாய் - இனி மேலாகிலும் என்பால் இரங்கக்கடவாய், எ - று.

(வி - ரை.) நல்லவரையும் தீயவரையுந் தாங்கும் கருணையுடையவன் முருகன்; பக்ஷபாத மற்றவன். சந்தம் நோக்கி 'மடிமைப்படினும்' என்று வல்லொற்று மிக்கது. பூமியில் உள்ள மலைமீது மேகம் படிதல் போல் வள்ளியம்மைமீதுள்ள கொங்கைகளில் முருகன் படிகின்றனன்; ஆதலின் அவனை மைப்புயலே என்று உருவகித்தார். தொழிலுக்கு மட்டும் உவமை பொருந்தும்; வண்ணத்திற் கொவ்வாது; குணத்திலோ எனில் ஒக்கும். பிரதிப்பயன் கருதாது நல்லார் தீயார் எனக் கருதாது மழை பொழிந்து எல்லையற்ற இன்பம் பயப்பது மைப்புயல். முருகனோ கைம்மாறு கருதாது இனியார் இன்னார் எனக் கருதாது கருணை பொழிந்து ஜீவன்களுக்குப் பேரானந்தம் பயப்பவன். படிதல் - தவழ்தல். கொடி, மின்னற்கொடி அல்லது வல்லிசாதக்கொடி போன்றிருப்பவளுக்கானதால் உவமையாகு பெயர்.

வள்ளி, கொங்கை, முருகன் முதலிய பொருள்களைத் தொடர்பாக உருவகப்படுத்தி அவற்றுள் இயைபுடையன வாகச் செய்ததால் இயைபுருவகமாகும்.

கொடுவெற்பதிர என்றும் பாடம்; கொடிய மலை அதிரும் வண்ணம் என்பது பொருள்.

(சு - ரை.) உனது தேவ குடிப்பிறப்பிற் கொவ்வாத வள்ளியம்மையாரைப் புணர்பவனே! உனது அருளுக் குத் தகுதி யுடையவனு யில்லையேனும் என்பால் இரங்கு வாயாக வென்பதாம்.

## 96. பாசம் அண்டாமல் வேடங்கொள்ள

[பாயசம், தேன், பழம், உரு - 1008.]

வரிவேல் விழியாம் வலைவீ சுமினார்
புரிவே லையிலே பொருதிக் களைவாய்
பரிவே டஞ்சூழ்ந் ததுபோ லவுணர்த்
தெரிவேன் முனைமே லெறிசே வகனே.

(இ - ள்.) பரிவேடம் சூழ்ந்தது போல் - கதிரவனைச் சுற்றிலும் ஊர்கோளானது சூழ்ந்து கொண்டது போன்று சுற்றிக் கொண்ட, அவுணர் - அசுரரை, முனைமேல் - யுத்த களத்திலே, தெரி வேல் எறி சேவகனே - ஒளி செய்கின்ற வேலாயுதத்தை எறிந்து கொன்றொழித்த வீரனே!, வரி வேல் விழியாம் வலை - (ஆண்மக்கள் என்னும் மீன்களைப் பற்றுதற்குச்) செவ்வரி பரந்த வேலைப் போன்ற கண்கள் என்னும் வலைகளை, வீசும் மின்னார் - வீசும்படியான, மின்னல் போன்று ஒளி செய்யும் மங்கையரை, புரி வேளை யிலே பொருதி களைவாய் - நான் ஆசைப்படும் நேரத்திலே உடனே எழுந்தருளி வந்து என் ஆசையோடு போர் புரிந்து ஒழிப்பாயாக, எ - று.



(வி - ரை.) வரி, நீண்ட என்றும் கொள்க. கண்ணுக்கு வரியாவது செவ்வரி; வேலுக்கு வரியாவது பகைவரின் இரத்தக்கரை; வரி இரண்டிற்கும் பொதுவாகும். 'விழியாம் வலை,' உருவகம், வலை என்றதால்; மீன் எங்கே எனின் ஆடவர்களாகும். மினார், இடைக்குறை விகாரம். மங்கையரால் உண்டாகும் மையலைக் கடவுள் வழிபாட்டினாலேயே ஒழிக்க இயலும் என்பதே ஈண்டு நுண்ணிய கருத்தாகும்.

(சு - ரை.) இறைவனே! அசுரரை ஒழித்து அமரரைக் காத்தது போன்றே மாதரால் வரும் மோகத்தை அழித்து அடியேனையுஞ் சீக்கிரம் காப்பாயாக வென்பதாம்.

## 97. விதியை வெல்ல

[நெல்லன்னம், நெல்லிக்கனி, உரு - 108.]

நனவிற் படுநல் லுலகத் தனையும்
கனவிற் பொருளாய்க் கருதா வெனைநீ
வினவிச் சொலுநா ளுளதோ விதியைச்
சினவிச் சிறையிட் டருடே சிகனே.

(இ - ள்.) விதியை சினவி சிறையிட்டு அருள் (பிரணவப்பொருள் கூற முடியாது திகைத்த) அயனைச் சினந்து சிறையிலிட்டுப் பின் சிவபிரான் வேண்ட விடுதலை செய்து அருள் செய்த, தேசிகனே - சற்குருமூர்த்தியே!, நனவிற் படு நல் உலகு அத்தனையும் - நினைவில் காணப்படும் பெரிய உலகத்தைக் கனவிலே தோன்றுகின்ற மித்தையான வஸ்து போலவே, கருதாத என்னை - வேதாந்த நூல்

ஆராய்ச்சி மூலமாக உணர்ந்து என்றுத என்னை, நீ விளவி சொல்லும் நாள் உளதோ - உன்னுடைய மெய்யான வடிவம் இன்னதென்று கேட்டு அடியேனுக்கு மெய்ஞ் ஞானத்தை உபதேசிக்கும் சமயம் உள்ளதோ ?, அதனை அறியேன், எ - று.

(வி - ரை.) ஆய், உவம உருபு.

(க - ரை ) அயனைச் சிறையிட்டுப் பின் அருள் செய்த சற்குருமூர்த்தியே! நினைவில் தோன்றும் உலகத்தைக் கனவில்தோன்றும் பொய்யான பொருள் போலப் பாவித்து உன் நிஜவடிவத்தை அறியும் நாள் உள்ளதோ அதை உணரா திருக்கின்றேன் என்பதாம்.

### 98. சகல பாசமுமற

[வடை, அதிரசம், மாம்பழம், உரு - 108.]

காடும் மலையுங் கடலும் முருளச்
சாடுந் தனிவே லுடையாய் சரணம்
ஆடும் மயில்வே லரசே சரணம்
பாடும் வரதற் பரனே சரணம்.

(இ - ள்.) காடும் மலையும் கடலும் உருள சாடும் தனி வேல் உடையாய் - அசுரருடன் யுத்தம் செய்யும்போது வனங்களும் கிரிகளும் சமுத்திரங்களும் தத்தம் நிலைகெடுமாறு அவற்றினைச் சிதைத்த ஒப்பற்ற வேலாயுதத்தை உடையவனே !, சரணம் - உன்னிடம் அடைக்கலமாகப் புகுந்தேன், ஆடும் மயில் வேல் அரசே - உன்னுடைய ஊர்தியாகிய தோகை விரித்தாடும் மயிலையும் வேலாயுதத்தையும் உடைய இறைவனே !. சரணம் - நான் உனக்கு அடைக்கலம், பாடும் வர - பக்தர்கள் போற்றிப் பாடும் பெருமைக்



குணம் உடையவனே !, தற்பரனே - உண்மைச் சொரூபமாயிருக்கும் மேன்மையை யுடையவனே !. சரணம் - நான் உனக்கு அடைக்கலம், எ - று.

(வி - ரை) மிகப் பெரிய உடல் படைத்த சூரபதுமனும் அவனுடைய அசுரரும் மயிலும் முதலியன இயங்கும்போது காடும் மலையும் கடலும் தத்தம் நிலைமாறின, அவற்றை வேற்படை அழித்தது. எனில் போரின் தன்மை இன்னதென்றுணர்க.

வரம் - மேன்மை. அரசு, அரசு என்னும் பண்பு அரசனுக் கானதால் பண்பாகுபெயர்.

(க - ரை.) தலைவனே ! நீயே எனக்குப் புகலிடம் மற்றில்லை. ஆதலின் நீயே என்னைப் பாதுகாத்தருளல் வேண்டும் என்பதாம்.

### 99. இருவரும் ஒன்றுயிருக்க

[தேங்காய், சர்க்கரை, சிறுபயறு, கனி, உரு - 1008.]

அனியா யமிதென் றவரே மடவார்
துனியார் பவமுந் துயருங் களைவார்
கனியார் முருகன் கழல்பெற் றிடுவா
ரினியா ரினியா ரிவருக் கிணையே.

(இ - ள்.) இது அநியாயம் என்றவரே - இவ்வுலக வாழ்வு பொய்யானதென்று உணர்ந்தவரே, மடவார் துனி ஆர் பவம் - மங்கையர் பொருட்டாக உண்டாகும் பயம் நிறைதல் ஆகிய சென்மத்தையும், துயரும் - சென்மத்தினால் உண்டாகும் துக்கத்தையும், களைவார் - ஒழிக்க, கனி ஆர் முருகன் கழற் பெற்றிடுவார் - தனது பக்தரிடம் இரக்கம் பொருந்திய குகப்பிரானது வீரக்கழல் பொருந்திய திருவடி

கனைத் தமக்குச் சரணமாகப் பெறுதற்குக் கருதியுடையவ ராவர். இனியார் - (இவரே யாவர்க்கும்) இனியவராவார், இவருக்கு இணை இனி யார் - அப்பக்தருக்கு ஒப்பானவர் இனி யாவர் உள்ளனர்?, எவருமில்லை, எ - று.

(வி - ரை.) உலகவாழ்வு இருப்பதுபோல் தோன்றிப் பின்னர் அழிந்து விடுவதால் அநியாயம் என்றார்.

'இது' என்பது 'படவார் துனியார் பவமும்' என்ற குறிப்பால் உலகவாழ்வு எனப் பொருள்கொள்ளப்பட்டது. 'ஆர்' 'கனி' என்பவை முதனிலைத் தொழிற்பெயர்கள். கனிவார் - முற்று வினையெச்சமாக வந்த முற்றெச்சமாம். இணை - பண்பாகுபெயர். உலகவாழ்வைத் தள்ளி முருகன் திருக்கழலைச் சரணம் புகுந்த நானும் இனிமையை யுடையேன் என்றதை உணர்த்தினார்.

(க - ரை.) உலகவாழ்வு பொய்யாதென் றுணர்ந்து உலகவாழ்வால் வரும் துயரம் நீக்கக் குகப்பிரானுடைய திருவடிகளையே அடைக்கலம் அடைந்தவர்தாம் யாவர்க்கும் இனிமை உடையவராயிருப்பர் என்பதாம்.

## 100. சிவசாயுச்சியம் பெற

[அப்பளம், தேங்காய், வடை, கடலை, உரு - 1028.]

ஆளா யயில்வே ளடியிற் பணிவார்
கோளாற் பிறரைக் குறிசெய் தழியார்
மாளார் சமனால் மறுகார் பகையால்
மீளார் வினையால் வெருவா ரவமே

(இ - ள்.) அயில் வேள் அடியில் ஆள் ஆய்பணிவார் - வேலாயுதத்தை உடைய முருகப்பிரானது திருவடிகளுக்கு அடிமையாகி வணங்கும் தன்மை யுடையவர், கோளால் பிறரை குறிசெய்து அழியார் - தரித்திரம் என்னுந் துன்பத்தின் காரணமாக வேறு பணக்காரரை (உபகாரஞ் செய்பவர்) என்று நினைந்து அவரிடம் அடைந்து மனம் அழியப்பெறார், சமனால் மாளார் - யமனார் உயிர்கொள்ளச் சாகார், பகையால் மறுகார் - விரோதிகள் துன்புறுத்தக் கலங்கார், வினையால் மீளார் - நல்வினை தீவினை என்னும் இருவினைகளும் புரிந்து அதால் மறுபடியும் பிறப்பெடுக்கார், அவமே வெருவார் - வீணாக எதற்கும் பயப்படார், எ - று.

(வி - ரை) இக்கவியால் தாமும் முருகவேளுக்கடிமை பூண்டுவிட்டதால் வறுமை முதலிய துன்பங்கள் இல்லாமல் இருப்பதாக மொழிகின்றார்.

முருக வழிபாட்டினால் இறுதிக்காலத்தில் நமதரிசனத்திற்குப் பதிலாக முருகதரிசனம் கிட்டும் என்பதனை உணர்க.

'அயில்,' 'பகை' பண்பாகுபெயர்கள்.

(க - ரை.) முருகவேளுக் கன்பராய்த் திருவடிகளை வணங்குபவர் வறுமைப்பிணியும் பகையும் சென்மமும் பயமும் இல்லாமல் இருப்பர் என்பதாம்.



## 101. வாழ்த்து

[பால், பொங்கல், பழம், தேங்காய், உரு - 108.]

வாழ்வா ருறவாய் மகிழ்வார் பலருந்
தாழ்வார்க் கருளுத் தமனீ யலையோ
பேழ்வா யரவும் பிறைவெள் ளிறகுஞ்
சூழ்வார் சடையார் தொழுதே சிகனே.

(இ - ள்.) பேழ் வாய் அரவும் - பிளந்த வாயினை யுடைய பாம்பும், பிறையும் - ஒற்றைக்கலைச் சந்திரனும்,

வெள்ளிறகும் - வெண்ணிறக் கொக்கின் இறகும், வாரும் - கங்கையும், சூழ் சடையார் தொழு தேசிகனே - பொருந்திய சடையையுடைய சிவபெருமான் (பிரணவப்பொருள் உபதேசம் பெறுதற்கு) வணங்கிய சற்குருமூர்த்தியே!, உறவு ஆய் வாழ்வார் - உனதன்பர்க்குச் சுற்றத்தினராக வாழ்பவரும், மகிழ்வார் - உனது திருநாமம் புகன்று மகிழ்பவரும், தாழ்வார் பலர்க்கும் - உன்னைப் பணிகின்ற பக்தர் பலருக்கும், அருள் உத்தமன் நீ அலையோ - கிருபை புரிகின்ற சிரேட்டன் நீயே யன்றோ? எ - று.

(வி - ரை.) வார் - நீர், அஃது ஈண்டுச் சிவபிரான் சடையில் பொருந்தியது என்ற குறிப்பால் 'கங்கை' எனப் பொருள்படும். 'பிறை,' 'வார்' இவற்றிற்கு வேண்டிய எண்ணும்மைகள் விகாரத்தால் தொக்கன.

ஆசிரியர் கவியிற் கூறுவதாவது, தாமும் அன்பருடன் உறவாடி முருகன் திருநாமம் ஓதி மகிழ்ந்து பணிந்தமையால் அவன் அருள்பேற்றினுக் குரியவரானார் என்பதாம்.

(க - ரை.) சிவபெருமானும் வணங்கிய சிரேட்டனே! உன்னுடைய அன்பருடன் உறவாடி உன் திருநாமம் உச்சரித்து மகிழ்ந்து உனது திருவடி பணிகின்ற பக்தருக்குக் கிருபை புரிகின்ற புருஷோத்தமன் நீயே அன்றோ என்பதாம்.

கந்தாநுபூதி மூலமும் தெளிபொருள் விளக்கவுரையும்

முற்றுப்பெற்றன.

---

திருமகள் விலாச அச்சுநிலையம், சென்னை:—1952.

